# இந்தக் கை பாதுகாப்பை நாடுகிறது. மற்றொரு கை அதைக் கொடுக்கத் தயாராக இருக்குமா?



நீங்கள் 20 முதல் 30 வயதிற்குட்பட்டவராகவோ அல்லது 35க்குட்பட்டவராகவோ இருக்கலாம் உங்களுக்கு ஒரு வேலையிருக்கிறது, எதிர்காலமும் இருக்கிறது.

உங்களுக்கு கல்யாணமாகி விடுகிறது.

உங்கள் மனைவிக்கு, மற்றெல்லாவற்றையும் விட, பாதுகாப்பு அளிப்பது உங்கள் கடமை. பாதுகாப்பு என்பது குடும்பத்தில் உங்களுக்குள்ள பற்று, பொறுப்பு உணர்ச்சி மட்டுமல்ல. எதிர்காலத்திற்காக சேமிக்க விழையும் மனப்பான்மையும் வேண்டும்.

நேஷனல் அண்ட் கிரிண்ட்லேஸ் பாங்கில் சேமிப்பது மிகச் சுலபம். ஐந்தே ரூபாய்களைக் கொண்டு ஒரு சேவிங்ஸ் பாங்கு கணக்கு ஆரம்பித்து விடலாம். ஆண்டு தோறும் 4% வட்டியும் சேர்ந்து உங்கள் சேமிப்பை வளர்க்கும்.

நீங்கள் நிற்பாடு அவ்வப்பொழுது போடும் தொகைகள் சொற்பமாக இருப்பினும் பாதகமில்லை. ஏனெனில் சிறிது சிறிதாகவே, உங்கள் குடும்பத்தினர் எதிர்பார்க்கும் பாதுகாப்பிற்கு வேண்டிய அளவிற்கு சேமிப்பு வளர்ந்துவிடும்.

நீங்கள் சேமிக்கும் பணம் எப்பொழுதும் உங்களுக்குக் கிடைக்கும். தேவையானபொழுது வாங்கிக் கொள்ளலாம்.

இதை மறவாதீர்கள், நேஷனல் அண்ட் கிரிண்ட்லேஸ் உங்களுடைய பாங்கு.

நேஷனல் அண்ட் கிரிண்ட்லேஸ் குடும்ப முழுவதற்கும் சேவை புரிகிறது.

**ஞாபகமிருக்கட்டும், நேஷனல் அண்ட் கிரிண்ட்லேஸ்தான் உங்கள் குடும்ப பாங்க்!**



# நேஷனல் அண்ட் கிரிண்ட்லேஸ் பாங்க் லிமிடெட்

இங்கிலாந்தில் இணைக்கப்பட்டது ○ அங்கத்தினர்களின் பொறுப்பு வரையறுக்கப்பட்டது
அஸோஸியேடட் பாங்குகள் : லாயிட்ஸ் பாங்க் லிமிடெட்
நேஷனல் புரொவின்ஷியல் பாங்க் லிமிடெட்

கிளைகள் : சென்னை : 3, காரத் பீச் ரோடு; 378, நேதாஜி சுபாஷ் சந்திரபோஸ் ரோடு (லாயிட்ஸ் கிளை); 6, அரமனைக்காரத் தெரு; 158, மவுன்ட் ரோடு,
தூத்துக்குடி : 44, பீச் ரோடு; ஹைதராபாத் : அபித் ரோட்

NGB-90ETH

# கல்கி

★

சர்வாதிகாரம் என்பது எந்தெந்தத் தீமைகளை ஒழிப்பதாகப் பறைசாற்றுகிறதோ, அந்தத் தீமைகளில் எதுவுமே சர்வாதிகாரத்தை விடக் கொடுமையானதில்லை.

— ஆல்பர்ட் கேமஸ்

★

# பொருளடக்கம்

விசுவாவசு கார்த்திகை 13 ● நவம்பர் 28



''கல்கி''யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும், கற்பனையே.







நீங்களும் சேர்ந்து
தள்ளுங்களேன்!
அணு ஆயுத வல்லரசுகள்
நரகம்
PK



மலர் 25 ● இதழ் 18



தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி — பாப்பா
—பாரதியார்

# பட்டினி ஆட்சி

நிலச் சட்டங்கள் யாவும் உணவு உற்பத்திக்கு ஊறு விளைவிப்பவை என்று நாட்டின் நல்லறிஞர்கள் எடுத்துக் காட்டியும் கேளாமல் விவசாயத்தில் வேட்டு வேட்டையாடிய காங்கிரஸ் ஆட்சியாளர்கள் இன்று தேசத்தின் உணவு நிலையை அவமானகரமாக்கி விட்டிருக்கிறார்கள். பதினெட்டாண்டுகள் இடையறா ஆட்சி செலுத்திய புண்ணியவான்கள் விவசாயத்துக்குச் செய்ய வேண்டிய முன்னேற்றங்கள் யாவற்றையும் மறந்து, பழுப்பு நிலக்கரிக்காகவும் எஃகு இரும்புக்காகவும் கோடானு கோடி ரூபாய்களைக் கொட்டிவிட்டு இன்று நாடு உணவு உற்பத்தியில் அதோகதி அடையும் நிலையை உண்டாக்கி யிருக்கிறார்கள். பட்டினி கிடந்து பிரச்னையைச் சமாளித்து விடலாமென்பது பிரதமரின் உபதேசம். 'எட்டு அவுன்ஸ் அரிசிகூட வேண்டாம்; ஆறு அவுன்ஸ் உண்டே பலசாலிகளாகத் திகழலாம்' என்பது காங்கிரஸ் அக்கிராஸனரவர்கள் கண்டுபிடித்துள்ள மந்திரம். இவையெல்லாம் பொதுக் கூட்டத்தில் கரகோஷம் சம்பாதிக்கும் பேச்சுக்கள் தாமேயன்றி, காரியக்கிரமத்துக்கு இம்மியும் பொருந்தாதவை.

தற்போது நம் நாட்டு மக்கள் உண்ணும் உணவின் சத்து மிகவும் குறைவானது என்பது ஸயன்ஸ் அறிஞர்கள் கூறும் உண்மை. பழங்கள், வெண்ணெய், இறைச்சி போன்ற சத்துள்ள ஆகாரங்களைக் கண்டவரல்லர் நம் மக்கள். அரிசி அல்லது கோதுமையை வயிறார உண்டே பெருத்த உழைப்புக்கு ஈடு கொடுக்க வேண்டிய நிலையில் உள்ளவர்கள் நம் மக்கள். நன்றாக உழைத்துச் சாப்பிடும் இம்மக்கள் சுமாராகப் பதினாறு அவுன்ஸ் வரையில் ஒரு நாளைக்கு உண்பார்கள். அதை ஆறு அவுன்ஸாக்கி மக்கள் தங்கள் தியாக உணர்வைக் காட்ட வேண்டுமென்பது காங்கிரஸ் அக்கிராஸனரின் உபதேசம்—அல்லது உத்தரவு. ஆனால் பிரகிருதி நியதியும், தேகப் பண்பும் காங்கிரஸ் அக்கிராஸனர் வகுக்கும் விதிமுறைகளுக்கு இணங்கிச் செயல்படுவது சாத்தியமல்ல. பொது மக்களிலிருந்தே போர்முனைக்குச் செல்லும் வீரர்களைத் திரட்டியாக வேண்டும்; பொதுமக்களைக் கொண்டே வயலிலும், ஆலையிலும் உழைப்பைப் பெருக்கிக் காங்கிரஸ் அக்கிராஸனர் விரும்பும் 'தன்னிறைவை' எய்த வேண்டும். அதிகப்படியான உழைப்புச் சுமையைத் தாங்கவேண்டியவர்களுக்கு முன்னிலும் குறைவான உணவை வழங்க முற்படும் புத்திசாலித்தனம் நமது ஆட்சியாளர்களுக்கு மட்டுமே புரியக் கூடியது.

நல்லவேளையாக மத்திய உணவு மந்திரி ஸ்ரீ ஸி. சுப்பிரமணியம் அவர்கள் இன்னமும் பிரத்தியட்ச உணர்வை அடியோடு இழக்கவில்லை. உணவில் தன்னிறைவு எய்துவது இப்போதைக்கு இயலாத காரியம் என்பதையும், உள்நாட்டு உற்பத்தியைக் கொண்டு பலவீனப் படையைத்தான் திரட்ட முடியும் என்பதையும் அவர் உணர்ந்திருக்கிறார். எனவேதான் 'தன்னிறைவு' கோஷம் போடுவோரின் வார்த்தைக்குச் செவி சாய்க்காமல் அமெரிக்காவிலிருந்து உணவுப் பண்டங்களை இறக்குமதி செய்தே யாகவேண்டுமென்பதை அவர் வலியுறுத்தி வருகிறார். இச்சமயத்தில்

அமெரிக்கத் தூதுவர் செஸ்டர் பௌல்ஸ் அவர்கள் தமது நாட்டின் உணவு ஏற்றுமதி அரசியல் காரணங்களுடன் பிணைக்கப்பட்டதல்ல என்று கூறி நமக்கு ஆறுதல் அளித்திருக்கிறார்.

எனினும் சர்க்காரின் உணவுக் கொள்கையில் பரிபூரணமான மாற்றம் ஏற்பட்டாலொழிய இப்பிரச்னையிலிருந்து நமக்கு விமோசனமில்லை. தான்தோன்றித்தனமாகச் செய்த நிலச் சட்டங்களையெல்லாம் ரத்து செய்து உற்பத்தியாளருக்கு ஊக்கம் அளிக்கவும், உற்பத்தியான பொருள் எவ்விதக் கட்டுப்பாடுமின்றித் தங்குதடையில்லாமல் இயற்கையாக விநியோகமாவதற்கும் உரிய நடவடிக்கைகளை மேற்கொண்டேயாகவேண்டும். இத்திசையில் சர்க்காரின் போக்கு ஒருகாலும் செல்லாது என்பதைத் தினந்தோறும் பெருகி வரும் ரேஷன் கெடுபிடிகள் உணர்த்தி வருகின்றன.

ரேஷன் வந்துதான் தீருமெனில் மக்களும் அதனைச் சகித்துக் கொண்டுதான் ஆகவேண்டும். வேறு வழி கிடையாது. உத்தேசித்துள்ள ரேஷன் முறையைச் சர்க்கார் திறம்பட அமுல் செய்தாலேனும் பரவாயில்லை. ஆனால் சென்னை மாநகரில் கடந்த சில வாரங்களாக அரிசி—சர்க்கரை—மண்ணெண்ணெய் — குழந்தை உணவுகள் ஆகியவற்றுக்காக மேற்கொண்டுள்ள ரேஷன் முறையை அமுல் செய்யும் இலட்சணத்தைக் கண்டால் யாரும் பொறுமை இழக்காமலிருக்க முடியாது. எத்தனை அலுவலகங்களுக்கு ஏறி இறங்குவது? எத்தனை நமூனாக்களைப் பூர்த்தி செய்வது? எத்தனை எத்தனை அவசியமற்ற கேள்விகளுக்கு விடை கொடுப்பது? எவ்வளவு காலம் 'க்யூ'வில் நிற்பது? முக்கியமாக இதில் நமது தாய்மார்களும் சகோதரிகளும் படுகிற பாடு சொல்லிச் சாத்தியமில்லை. கணவன்மாரை ஆபீசுக்கு அனுப்பியபின் ரேஷன் ஆபீஸ்களில் தவம் இருப்பதே பெண்களின் தினசரி அலுவல் ஆகிவிட்டது. இவ்வளவு செய்தும் இறுதியில் கிடைக்கும் கார்டு ஒழுங்காக இருக்கிறதா எனில் அதுவுமில்லை. புள்ளி விவரங்களெல்லாம் பெருவாரியாகத் தவறாக இருக்கின்றன. ஒரே வீட்டில் இரண்டு குடித்தனக்காரர் இருந்தால் ஒருவருக்குக் கார்டு கிடைக்கிறது; இன்னொருவருக்குக் கிடைப்பதில்லை. மக்கள் வசிக்குமிடத்துக்கும் அவர்கள் பண்டங்கள் வாங்க வேண்டிய இடத்துக்கும் மைல் கணக்கில் தொலைவு இருக்கும் விதத்தில் பலருக்குக் கடைகள் நிர்ணயிக்கப்பட்டிருக்கின்றன. கடைக்காரரின் குறைந்த கையிருப்பைக் கவனியாமலே ஏராளமானவருக்கு ஒரு கடையில் ரேஷன் நிர்ணயம் செய்வதும், நிறையக் கையிருப்புள்ள கடைக்குப் போதிய நபர்களைப் பதிவு செய்யாதிருப்பதும் சர்வ சகஜமாகி விட்டதாகக் கேள்வி. சென்னை மாநகரம் கண்டுள்ள இந்த 'பாக்கிய'த்தை இனி எல்லா நகரங்களும், இறுதியில் பட்டிதொட்டி கிராமங்களும்கூட அடைய வேண்டியிருக்கும்.

இது ஒருபுறம் இருக்க, இறக்குமதியாகும் உணவு கப்பலிலிருந்து கடைக்குப் போய்ச் சேருவதற்குள்ளாகவே ஒன்றரைக் கோடி ரூபாய்க்கு விரயம் ஏற்பட்டுள்ளது என்பது கணக்குத் தணிக்கை அறிக்கை கூறும் உண்மை. உணவு தானிய விநியோகத்தில் சர்க்கார் தலையிட்டால் எந்த இலட்சணத்திலிருக்குமென்பதற்கு இந்தச் சான்றே போதுமானது.

பட்டினி கிடக்குமாறு மக்கள் எல்லோருக்கும் பிரதமர் உபதேசிப்பதையும், குருவுக்கு மிஞ்சிய சிஷ்யர்களாகச் சில முதல் மந்திரிகள், வேண்டுகோளையே சர்க்காரின் 'மறைமுக' உத்தரவாக்கி ஹோட்டல்களை மூடுவதையும் பார்த்து அந்நிய நாட்டினர் நம்மைப் பற்றி என்ன எண்ணுவார்கள்?

தேக இயந்திரம் மிகவும் நுட்பமானது. ஒவ்வொரு தனி மனிதனின் சித்தப் பண்பும் மாறுபடுவது போல் தேகப் பண்பும் வித்தியாசப்படும். சிலரால் பசி தாங்க முடியும்; சிலரால் முடியாது. சில வயிற்று நோய்க்காரர்கள் ஒரு போதுகூட உணவை நிறுத்தக் கூடாது என்று வைத்தியர்களே கூறுகிறார்கள். குழந்தை குட்டிகளைப் பற்றிச் சொல்ல வேண்டியதேயில்லை. எனவே, சகட்டு மேனியாக அனைவருக்கும் திங்கள் இரவில் உணவு படைக்கக் கூடாது என்று ஹோட்டல்களுக்கு உத்தரவு இடுவதும், 'இது சட்டமல்ல; ஹோட்டல் அதிபர்களின் சுயமான முடிவுதான்' என்று பிறகு சமாதானம் சொல்வதும் விவேகமல்ல.

விவேகமான வழி ஒன்றே; உணவுப் பிரச்னையைத் தீர்க்க வேண்டுமாயின் காங்கிரஸின் போலி சமதர்ம கொள்கையைக் கைவிட வேண்டும்; நம் கௌரவத்துக்குப் பங்கமின்றி அந்நிய நாடுகளிலிருந்து இறக்குமதியைப் பெருக்க வேண்டும். இல்லாவிடில் ஆட்சியாளர்கள் அளவுக்கு மீறி வீரதீரப் பிரதாபங்கள் பேசிய போதிலும் இந்தியாவில் பட்டினி ஆட்சிதான் நடைபெறுகிறது என்று உலகு அறிந்துவிடும்.




காலனி ஆட்சியில் உள்ள மக்களுக்கு சுயராஜ்யம் அளிப்பது மட்டுமே ஆதிக்கம் செலுத்தும் அரசினால் இயலக் கூடிய காரியம். ஆனல் சுயராஜ்யம் பெற்றபின் அம்மக்கள் நல்லாட்சியும் சமாதான வாழ்வும் பெறுவது அம்மக்களின் மூலமேதான் நடக்க வேண்டும்.

ஆப்பிரிக்காவின் நீக்ரோத் தலைவர்கள் சிலர் அக்கண்டத்தின் ராணுவம் முழுவதுமாகச் சேர்ந்து ரொடீஷியாவை அடக்க வேண்டுமென்று பேசி வருகிறார்கள். ''இது குழந்தைத்தனமான பிதற்றல். ரொடீஷியாவின் விமானப் படை மத்திய — கிழக்கு ஆப்பிரிக்காவின் எல்லாத் தலைநகரங்களையும் பன்னிரண்டே மணியில் எரித்துச் சாம்பலாக்கிவிட முடியும். ரொடீஷியாவின் ராணுவம் மற்ற ஆப்பிரிக்க நாடுகளை யெல்லாம் ஒரே வாரத்தில் வென்றுவிட முடியும். பிரிட்டிஷார் ரொடீஷியாவில் உள்ள தம்மினத்தவரான வெள்ளையருடனேயே போரிடுவதற்காகப் படை அனுப்பி வைப்பார் என எதிர்பார்ப்பது அறிவீனம். காமன்வெல்த்திலிருந்து விலகி விடுவோமென மற்ற நீக்ரோ நாடுகள் அச்சுறுத்துவதிலும் அர்த்தமில்லை. லண்டன் பாங்குகளிலுள்ள தங்களது நிதியத்தை யெல்லாம் திரும்பப் பெற்றுக் கொண்டு விடுவோம் என்று நீக்ரோ நாட்டுத் தலைவர்கள் பயமுறுத்துவதிலும் பயனில்லை. ஏனெனில் லண்டன் பாங்குகளில் அவர்கள் இருப்புக்கு அதிகமாகக் கடனே வைத்திருக்கிறார்கள்.'' — இவ்வாறெல்லாம் பிரத்தியட்சவாதியான மாலவித் தலைவர் பண்டா அவர்கள் கூறுகிறார். மாலவி என்பது ரொடீஷியாவின் அண்டை நாடு. அதன் தலைவர் பண்டா தீவிர இனஉணர்ச்சி அற்றவர். வன்முறையின்றிச் சமாதானமாகவே பிரச்னையைத் தீர்க்க முடியும் என அவர் நம்புகிறார்.

ரொடீஷியாவின் பெரும்பான்மையினரான நீக்ரோ மக்களை அடக்கி ஆளலாம் என அந்நாட்டின் பிரதமர் ஸ்மித் நினைப்பது காலத்துக்கு ஒவ்வாத கருத்து. ஆனல் பிரிட்டிஷ் அரசுடன் தொடர்பைத் துண்டித்து விடவில்லை என்றும், ஆப்பிரிக்காவின் நீக்ரோ நாடுகளுடன் நட்பு பாராட்டுவதாகவும், ரொடீஷியாவில் உள்ள நீக்ரோக்களுக்கும் தமது அரசாங்கத்தில் இடமளிக்கப் போவதாகவும் ஸ்மித் கூறியதாகத் தெரிகிறது.

வெளி உலக முழுவதன் விரோதத்தையும் சம்பாதித்துக் கொண்டபின் பொருளாதார ரீதியில் தனித்து வாழ முடியாது என்பதை ரொடீஷியா விரைவிலே உணரும். தெற்கிலுள்ள வெள்ளையரின் ஆப்பிரிக்காவையும், வடக்கேயுள்ள கருப்பரின் ஆப்பிரிக்காவையும் பிரிக்கும் நாடு ரொடீஷியா.

காலனி ஆதிக்கமும், போரும் வீரசாகஸமாக இருந்தது பழங்காலக் கதை. இன்று நிலை மாறிவிட்டது. காலனி ஆதிக்கம் என்பது இன்று ஒரு குழப்பமான நிலையாகி விட்டது. ஒருமைப்பாடற்ற நாடுகள், ஒரு காலத்தில் பெருமிதத்துடன் நாடாண்டு வாழ்ந்த மக்கள் சமூகத்தின்மீது பெரும்பான்மை ஆட்சியைத் திணிக்கும் ஒரு முறையாகி விட்டது. வீரமும் தீரமும் மங்கிப் போய் மிருகத்தனமாக ஸிவிலியன் மக்களைக் கொலை செய்வதே இன்றையப் போர்முறை.

* * *

சமீபத்தில் நான் தில்லி சென்றிருக்கையில் ராஷ்டிரபதி அவர்களுடனும் பிரதமரவர்களுடனும் சம்பாஷித்த போது, மக்களின் மனத்தில் துவேஷ எண்ணம் உண்டாக்காமலே பாதுகாப்பில் ஆர்வம் ஊட்ட வேண்டுமென்று வலியுறுத்தினேன். பாகிஸ்தான் ஆக்கிரமிப்பு நிகழ்த்தியிருப்பதால், இன்று தேசத்தைப் பாதுகாக்க வேண்டுமாயின் மக்கள் மனத்தில் பகையுணர்ச்சியை வளர்க்க வேண்டும் என்ற தவறான கருத்தில் பிரசாரம் செய்யாமலிருக்க வேண்டும் என்று எடுத்துக் காட்டினேன். இதே ரீதியில் ஸ்ரீ வி. கே. கிருஷ்ண மேனன் அவர்களும் ஜவஹர் ஜயந்தி தினத்தன்று பம்பாயில் பேசியிருப்பதைக் கண்டு அளவற்ற மகிழ்ச்சியடைகிறேன். ஸ்ரீ கிருஷ்ண மேனனின் பிரசங்கத்தைப் பற்றிய பத்திரிகைச் செய்தி வருமாறு:

> ''தேசிய உணர்ச்சி என்பது ஒரு வலிமை வாய்ந்த சக்தி; சரியான போக்கில் செலுத்தினால் இது பெரு நன்மை பயக்கும்; ஆயினும் விஷமக்காரர்களின் கையில் இதுவே ஓர் அபாயகரமான ஆயுதமாகி விடக் கூடும். இது போன்ற விஷயங்களை, நாம் ராணுவ வெற்றிகள் என்ற அலைகளின் மீது நீந்திக் கொண்டிருக்கும் இச்சமயத்தில் சொல்வது 'பொதுஜன ரஞ்சக'மானதல்ல என்று நான் அறிவேன். எனினும் இன்றையச் சூழ்நிலையில் மக்களின் சித்தத்தில் யுத்த வெறி மிகையாகி விடுவதன் ஆபத்தை உள்ளபடி உணர்ந்தாக வேண்டும் என்பதாலேயே தேசத்தை எச்சரிப்பது என் கடமை எனக் கருதுகிறேன்.
>
> ''மக்களை ராணுவ சிந்தனை மயமாக்கி விடுவதால் உள்ளுறவும், வெளியா

கிடமும் பயப்பிராந்தி ஏற்படக் கூடும். பாகிஸ்தான் ஒன்று மட்டுமே நமது அண்டை நாடு என்று எண்ணிவிட வேண்டாம். இந்தியாவில் ராணுவ சிந்தனை மிகையாகி விட்டால் மற்ற அண்டை நாடுகளிடம் அது எத்தகைய எதிர்விளைவுகளை உண்டாக்கும் என்பதை நாம் மறந்துவிடுவதற்கில்லை.''

ஃஃஃ

விவேகமான நிதிக் கொள்கைகளைக் கூறுவதில் ஸ்ரீ டி. டி. கிருஷ்ணமாச்சாரியார் அவர்கள் சாமர்த்தியம் பெற்றவர். ஆனால் அவற்றை அவர் நடைமுறைக்குத்தான் கொண்டு வருவதில்லை. சென்ற ஆண்டு பட்ஜெட் பிரசங்கத்தின் போது அவர் வகுத்த நிதிக் கொள்கைக்கு மாறாகவே மேற்படி பட்ஜெட் நடைமுறையில் அமைந்ததும், நிதிமந்திரியவர்களின் உரையைக் கேட்டவர்கள் பின்னர் எவ்வளவு ஏமாற்றமடைந்தனர் என்பதும் இன்னும் மறந்துவிடவில்லை.

தமது வழக்கப்படியே இம்மாதத் தொடக்கத்தில் வருமான வரிக் கமிஷனர்கள் மகாநாட்டில் நிதிமந்திரியவர்கள் விவேகமாகப் பேசியிருக்கிறார். வரி விதிப்புக் கொள்கையை மாற்றி அமைக்கும் போது, ஒருவர் சுயமுயற்சியால் சம்பாதிக்கும் வருமானத்துக்கு விதிக்கப்படும் வரிவிகிதத்தைக் குறைப்பது பற்றி யோசிக்க வேண்டும் என்று மிகவும் யுக்தமாகப் பேசியிருக்கிறார். ஊக்கத்துடன் சம்பாதிக்கப்படும் வருமானத்துக்குத் தண்டனை விதிப்பது போல் வரி போடக்கூடாது; ஊதாரிச் செலவுக்கே வரி போட வேண்டும் என்ற கொள்கையில் உண்மை இருக்கவே செய்கிறது என்று கூறியிருக்கிறார். பேச்சளவில் நன்றாகத்தான் இருக்கிறது. காரியத்தில் வருமா என்பதே கேள்வி.

ஃஃஃ

'பனாரஸ் ஹிந்து சர்வகலாசாலை' என்ற பெயரிலுள்ள 'ஹிந்து' என்ற பதத்தை நீக்குவதற்காகப் பார்லிமெண்ட் அங்கத்தினர்கள் நீண்ட நேரத்தைச் செலவிட்டிருக்கிறார்கள். முனிவர்களை யொத்த மகாபுருஷர்கள் நிறுவிய மகத்தான ஸ்தாபனங்களை அப்பெரியார்கள் இட்ட பெயரிலேயே நீடிப்பதுதான் அழகு. பழைய பெயரினால் அவற்றின் நடவடிக்கை குறித்து யாருக்கும் சந்தேகம் உண்டாகி விடாது.

'Fortnightly' என்றால் 'மாத மிருமுறை' என்று பொருள். 'Fortnightly Review' என்ற மாதமிருமுறைப் பத்திரிகை பிற்பாடு மாத சஞ்சிகையாக மாறிற்று. எனினும், 'மாதமிருமுறைப் பத்திரிகை' என்ற பெயரை மாற்றிக் கொள்ளவில்லை.

சென்னையின் பிரபல தினப் பத்திரிகையான 'ஹிந்து' இவ்வாறு பெயர் பெற்றிருப்பினும், ஹிந்து பத்திரிகை சமயச்சார்பின்றி, தேசிய நோக்குடனேயே நடத்தப்பட்டு வருவதை அனைவரும் அறிவோம். பனாரஸ் சர்வகலாசாலை பெற்றுள்ள 'ஹிந்து' என்ற அடைமொழி அந்தப் பெரும் நிறுவனத்தின் சரித்திரத்தை ஓரளவுக்கு நினைவூட்டுவதாகும். இதனால் இந்த சர்வகலாசாலை ஒரு குறிப்பிட்ட மதச்சார்புடையது என்றோ, தேசியக் கண்ணோட்டமற்றது என்றோ யாரும் எண்ணிவிடவில்லை. ஹிந்து மதம் எல்லாச் சமயங்களையும் தழுவுகிறது; உலகமாகிய தோற்றத்துக்குப் பின்னாலுள்ள ஆன்மசத்தியத்தை அடைய உதவும் எல்லா சமய வழிகளையும் ஹிந்து மதம் ஏற்கிறது என்பதற்கு 'ஹிந்து' சர்வ கலாசாலை என்ற பெயரே ஒரு விளக்கமா யிருந்தது.

இதயத்தில் ஓர் இலட்சியம் ஊறாமல், மேலெழுந்தவாரியான தர்க்கத்துக்காகவும், 'சமயோசிதத்'துக்காகவும் பெயர்களைமாற்றுவதால் எந்த இலட்சியத்தையும் அடைய முடியாது என்பதை நினைவில் கொள்வோமாக!

அலிகார் முஸ்லிம் சர்வகலாசாலை என்ற பெயரிலிருந்து 'முஸ்லிம்' என்ற பதத்தை நீக்க விரும்புவதால் பனாரஸ் ஹிந்து சர்வ கலாசாலையின் பெயரிலிருந்தும் 'ஹிந்து' என்ற பதத்தை நீக்கிவிடுவது சரியல்ல. இப்படியே செய்து கொண்டு போனால் சென்னையிலுள்ள கிறிஸ்துவக் கல்லூரி, ஜெயின் கல்லூரி, வைஷ்ணவக் கல்லூரி இவற்றின் பெயரை எல்லாமும் மாற்ற வேண்டியிருக்கும். ஸ்தாபனங்களின் தோற்றுவாயை நினைப்பூட்டும் பெயர்களை அழிக்காதிருப்போம்; சூழல் மாறினாலும் மாறாத உட்பொருளை மறவாதிருப்போம்.

ஃ ஃ ஃ

பழைய காயத்ரீ மந்திரத்தைத் திரும்பத் திரும்ப ஜபிப்பது போல், நானும் சட்டசபைகளில் எதிர்க்கட்சிகள் பலம் பெற வேண்டியது பற்றித் திரும்பத் திரும்ப எழுதி வருகிறேன். இதற்குக் காரணம் எழுதுவதற்கு வேறுவிஷயம் இல்லாததல்ல. பாகிஸ்தானின் ஆக்கிரமிப்பு நிகழ்ந்துள்ளபடியால் அரசாங்கத்தை எவ்விதத்திலும் எதிர்ப்பது தகாது என்றும், அது தேசத் துரோகத்துக்குச் சமானம் என்றும் தற்போது சர்க்காரும் பத்திரிகைகளும் மக்களும் தவறாக எண்ணி வருவதாலேயே நான் எதிர்க்கட்சிகளின் பங்கைப் பற்றி வலியுறுத்தி வருகிறேன். ஆஸ்துமா வியாதி கொடியது. மூச்சு விடுவதற்கு அது இன்னல் விளைவிக்கிறது என்பதற்காக சுவாசத்தையே நிறுத்திவிடவேண்டும் என்று கூறினால் எவ்வளவு அபத்தமாக இருக்குமோ அவ்வளவு அபத்தமே ஆபத்துக் காலத்தில் எதிர்க் கருத்துக்களைத் தடுக்க வேண்டுமென்பதும். சட்டத்தின் ஆட்சி, எதிர்க்கட்சி இவ்விரண்டின் மீதே ஜனநாயகத்தின் ஜீவஇயக்கம் அமைந்துள்ளது. இவற்றில் ஏதேனு மொன்றைத் தடை செய்தாலும் அராஜகம்தான் விளையும்.

ஃஃஃ

சுகர்ணர் அவர்கள் வெளித் தோற்றத்துக்கு எவ்வாறு காணப்படினும், இப்

போது இந்தோனேஷிய ஆட்சி அவர் கையில் இல்லை என்பதும், ராணுவத்தின் வசம்தான் உள்ளது என்பதும் தெளிவு. ஹிட்லருடைய காலத்துக்கு முன்பு ஜெர்மனியில் கம்யூனிஸ்ட் கட்சி எவ்வளவு சக்தி வாய்ந்ததாக இருந்ததோ அவ்வளவு சக்தியுடனே அக்கட்சி இந்தோனேஷியாவிலும் இயங்கி வந்தது. எனினும் மக்கள் அதனை விரட்டியடித்து விட்டார்கள். இதை சுகர்ணரும் உணர்ந்து விட்டார்; தமது பழைய பற்றுகளை விட்டு விட்டார். இந்தோனேஷிய ராணுவமே இன்று அந்நாட்டுக்குப் பிரதிநிதித்துவம் தாங்குகிறது.

ஃஃஃ

நம்மை நாமே நம்பி நமது தேவைகளைப் பூர்த்தி செய்து கொள்வது மிகவும் நல்ல இலட்சியம்தான். எனினும், இவ்வாறு நாம் சுயதேவைப் பூர்த்தி பெறுவதற்கு மேடைப் பிரசாரம் மட்டும் போதாது. நாம் இப்போது மிகவும் பலசாலிகளாகி விட்டோமென மந்திரிகள் தினந்தோறும் பேசுவதைக் கொட்டை எழுத்துக்களில் பிரசுரிப்பதால் பயனில்லை. ஒரு விஷயம் குறித்து அதிகமாகப் பேசினாலே அது ஐயத்தைத்தான் உண்டாக்கும்.

"வெளி உதவி இல்லாமல் சமாளித்துக் கொள்ளக் கூடிய நிலையில் நாம் இப்போது இல்லை.... அமெரிக்காவுடனும் மற்ற ஜனநாயக நாடுகளுடனும் நாம் நெருக்கமாக ஒத்துழைப்பதே கம்யூனிஸ விஸ்தரிப்பைத் தடுக்க உதவும் தலைசிறந்த வாய்ப்பாகும். உலகத்தில் நமது பகுதியில் சமாதானமும் சுதந்திரமும் நிலைபெற இதுவே வழி" என்று 'ஹிந்து'ப் பத்திரிகை (நவம்பர் 18ந் தேதி) எழுதியுள்ளது. அமெரிக்காவுடன் நெருக்கமான நட்பு கொள்வதால் ருஷியா விரும்பாத காரியத்தைச் செய்ததாகுமோ என்ற பயத்தை இந்திய சர்க்கார் கைவிட வேண்டும். நமது நலனையொட்டி, இவ்விரு வல்லரசுகளில் எதனுடன் நாம் நட்பு பூண்டாலும், மற்ற வல்லரசு அதனை வித்தியாசமாக எடுத்துக் கொண்டு விரோதம் பாராட்டாது. இன்று உலகச் சூழ்நிலை இவ்விதம் உருவாகியுள்ளது.

நம்மைப் பற்றி உயர்ந்த அபிப்பிராயம் கொண்டிருப்பதில் தவறில்லை. எனினும், பாகிஸ்தானின் ஆக்கிரமிப்பைத் தடுத்து விட்டோம் என்ற ஒரே காரணத்துக்காக நாமும் ஒரு வல்லரசாகி விட்டோம், நம் நட்பை அனைவரும் விரும்பித் தேட வேண்டும் என எண்ண வேண்டியதில்லை.

பிரிட்டன் இந்தியாவின் விரோதி என்பதே தீவிர தேச பக்தர்கள் தற்போது பரப்பி வரும் அரசியல் வியாதி. இது கேலிக்கிடமானது; அதோடு நன்றிமறப்பதுமாகும். பிரத்தியட்ச கண்ணோட்டமுள்ள அரசியலுக்கு மாறாக, சரித்திரத்தின் காரணங்களால் எழுந்த வெறுப்பும், அறிவற்ற உணர்ச்சிப் பெருக்குமாகச் சேர்ந்து இந்நிலையை உண்டாக்கியுள்ளது. நாம் கௌரவமான நண்பராக இருக்க முற்பட்டால் இன்றும் நமக்கு மிகவும் நம்பகமான நட்பு தரக்கூடிய நாடுகள் அமெரிக்காவும் பிரிட்டனுமேயாகும். அதே சமயத்தில் ருஷியாவிடமிருந்தும் நாம் எத்தகைய உதவியும் பெறலாம். ஆயினும் சீனத்துக்கு எதிராக ருஷியா உதவக் கூடிய வாய்ப்பை நாம் மிகையாக மதிப்பிட்டுவிடக் கூடாது.



## அடுத்த இதழ் : ராணுவ மலர்

இந்தியப் பாதுகாப்புக்கு ராணுவத்தினர் ஆற்றும் செயல் திறன்களை யெல்லாம் விளக்கும் கட்டுரைகளும், புகைப்படங்களும் அடங்கி டிசம்பர் 5-ந் தேதி இதழ் அதிக பக்கங்களுடன் ராணுவ மலராக வெளி வருகிறது.

### இந்த மலரில் :

முப்படைத் தலைமைத் தளபதிகள்
சரித்திரம் கண்ட போர்த்திறம் —விசேஷ புகைப்படப் பகுதி
ஆவடியில் ராணுவத் தொழிற்சாலைகள்
காவலரைக் கண்ட கலைஞர்கள்
பார்த்தனுக்காக மட்டும் அன்று-தி. சா. ராஜு எழுதும் —போர்முனைக் கதை
சமாதானப் பணியில் பாரத வீரர்கள்
ஐ. என். ஏ. வீரர்களின் அற்புத சாதனை —ஜெயமணி
உயிர் கொடுங்கள் —டாக்டர் வி. ஆர். கிருஷ்ணமூர்த்தி
களம் கண்டேன் —எஸ். எஸ். மாரிசாமி
ராணுவத்தில் நகைச்சுவை - மற்றும் பல சிறப்பு அம்சங்கள்

வெள்ளை

# டெட்

சலவையின் மேன்மை
வெண்மையுடன் தூய்மை




வெள்ளை டெட் பவுடரினால் மட்டும்தான் உங்கள் வெள்ளைத் துணிகளை பளிச்சிடும் வெண்மையுடனும் வண்ண நிறத் துணிகளை துப்புரவாகவும் வெளுக்க முடியும். நவீன டெட் ஒன்றுதான் துணிகள் பழுதாகாமல் சலவை செய்ய உதவுகிறது.

**ஸ்வஸ்திக் ஆயில் மில்ஸ் லிட் பம்பாய்**





கூடலி சிருங்கிரி சுவாமிகள் மயிலாப்பூரில் பட்டணப் பிரவேசம் செய்கிறார்கள்.

காஞ்சி காமகோடி ஸ்ரீ சங்கராசாரிய சுவாமிகள் காட்டுப்பள்ளி கிராமத்திலிருந்து புறப்படும் காட்சி.

●



கோடைக்கானல் வானிலை ஆராய்ச்சி நிலையத்துக்கு அமெரிக்க சர்க்கார் நில அசைவுகளைத் தெரிவித்துப் பதிவு செய்யும் கருவிகளை வழங்கப்போகிறது. அதற்கான தஸ்தாவேஜுகளை அமெரிக்க கான்சல் ஜெனரல் ஆராய்ச்சி நிலைய டைரக்டரிடம் வழங்குகிறார்.



தென்னிந்தியாவிலுள்ள ஆங்கிலோ இந்திய சங்கத்தின் தலைவர் பியர்ஸன் ஜோசப் பாதுகாப்பு நிதிக்கு ஆயிரத்தொரு ரூபாய் அடங்கிய செக்கைச் 'சென்னை' சுகாதார மந்திரி ஜோதி அம்மையாரிடம் கொடுக்கிறார்.




# நமது வல்லூறுகள்

எஸ்.எஸ்.மாரிசாமி.எம்.பி

அட்டாரியைத் தாண்டி வாகா என்னும் கிராமத்தை வந்தடைந்தோம். இந்தக் கிராமம் பாகிஸ்தானுக்குச் சொந்தமானது. இங்கிருந்துதான் இந்தியப் படை வீரர்களின் வெற்றி நடை தொடங்கியிருக்கிறது.

வாகாவின் வாசலில் எதிர் எதிரே இரு சிறு கட்டடங்கள் உள்ளன. இந்தக் கட்டடங்கள் இரண்டும் வெள்ளைச் சுண்ணாம்பைத் தாங்கியிருந்தாலும் முகப்பில் பாகிஸ்தானின் பச்சை வர்ணத்தைப் பூசியிருந்தன. இவற்றைச் சுட்டிக் காட்டியவர், 'அதுதான் பாகிஸ்தானின் சுங்க இலாகா காரியாலயம். இது எல்லைப்புற காவல் நிலையம்' என்றார். இக் கட்டடங்கள் மீது இப்போது இந்தியக் கொடிகள் பறக்கின்றன. கட்டடங்களின் பரந்த வராந்தாக்களில் களைப்பாற நமது ஜவான்கள் படுத்திருந்தார்கள்.

இங்கிருந்து ஆரம்பமாகும் மைல் கற்களில் உருதுவில் எழுதியிருந்தார்கள். லாகூருக்கு இன்னும் எத்தனை மைல் என்பதை ஒவ்வோர் எல்லைக் கல்லும் காட்டியது. நாம் பாகிஸ்தான் பிரதேசத்தில் இருக்கிறோம் என்ற உணர்வு எங்களுக்கு ஏற்பட்டதும் என்னவோபோலிருந்தது.

சுமார் பத்து மைல் வரை நெடுஞ்சாலையில் எங்கள் பயணமிருந்தது. நாங்கள் ஏறியிருந்த ராணுவ மோட்டார் நல்ல மோட்டார் என்றாலும் அது போட்ட குதியாட்டம் எங்களது ஒவ்வோர் எலும்பையும் பதம் பார்ப்பதாக இருந்தது. மேற்கூரையில் தலை முட்டி விழுமோ என்று பயந்து லாகவமாக உட்கார்ந்து கொண்டேன். ''ஏன் இந்த ஆட்டம்?'' என்று கேட்டேன்.

இதற்குப் பதில் சொன்ன அதிகாரி, ''ரஸ்தாவைப் பாருங்கள்'' என்றார். அப்போதுதான் எங்களுக்கு விஷயமே புரிந்தது. அதாவது ரஸ்தா புதிதாக இருந்தாலும், அடிக்கு அடி குண்டும் குழியுமாக இருந்தது. இக்குழிகள் எப்படி ஏற்பட்டன என்பதை ஒரு நண்பர் விளக்கினார்.

''நிலக் கண்ணிகள் பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறீர்களல்லவா? அந்தக் கண்ணிகள் நிறையப் பதிக்கப்



மேலே: இந்திய வீரர்கள் வெற்றி கண்ட பாகிஸ்தானிய பீரங்கிக் கோட்டைகளுள் ஒன்று. 'பில் பாக்ஸ்' என்பது இதுதான்.



பாகிஸ்தான் ஊடுருவல்காரரிடம் கைப்பற்றிய கைக்குண்டின் தோற்றம்.



லாகூர் பகுதியில் டோக்ராய் வீழ்ச்சிக்குப் பிறகு பிரதம தளபதி சௌத்ரி ஜீப்பில் வெற்றி ஊர்வலம்.



பாகிஸ்தானியர் வீசிய 750 ராத்தல் குண்டு வெடிக்காமல் கிடக்கிறது!



போர்நிறுத்த உடன்படிக்கைக்குப்பிறகு தளபதி சௌத்ரி இச்சோகில் கனவாய்ப் பகுதிக்கு வந்து, படையினரோடு அளவளாவுகிறார்.

பட்டிருந்த இடம் இந்த ரஸ்தாதான். அங்குலத்துக்கு அங்குலம் கடும் எதிர்ப்பைக் காட்டிய பாகிஸ்தானியர் இறுதியில் பின் வாங்கிய போது இப்படிக் கண்ணிகளைப் பதித்து விட்டுச் சென்றார்கள். அவற்றில் பெரும் பகுதியை நாங்கள் எடுத்தோம். அப்போது ஏற்பட்ட குழிகள் இவை. இன்னும் சில கண்ணிகள் வெடித்தன. அதனாலும் குழிகள் ஏற்பட்டன...'' என்றார் அவர்.

நிலக் கண்ணிகள் பற்றி இன்னும் சில விவரங்கள் கிடைத்தன. எங்களுக்கு இந்த விவரங்கள் அடிவயிற்றைக் கலக்கின.

நிலக் கண்ணிகளில் மூன்று நான்கு வகை உண்டாம். அதில் ஒன்று புதிதாக வந்திருக்கும் பிளாஸ்டிக் கண்ணி. இதைத் தரையில் அரை, முக்கால் அடி ஆழத்தில் பதித்துவிட வேண்டும். பிறகு அந்த இடத்தில் மணலையோ, தாரையோ ஊற்றிவிட்டால் பதித்திருப்பது தெரியாது. இக்கண்ணியின் தலையில் மெழுகுவத்திக்குத் திரி இருப்பது போல, ஒரு சிறு கம்பி நீண்டிருக்கும். அந்தக் கம்பி கொட்டிய மணலிலோ, ஊற்றிய தாரிலோ துருத்திக் கொண்டு இருக்கும். இதை எளிதில் காண முடியாது. தரை தானே என்று நடக்கும்போது இக் கம்பியில் காலோ, வாகனமோ பட்டு விட்டால் குபீரென உள்ளேயிருக்கும் கண்ணி வெடிக்கும். அப்படி வெடிக்கும் போது மேலே ஆள் இருந்தால் அவரது உறுப்புகள் அக்கக்காய்ச் சிதறும். வாகனமாயிருந்தால் அது ஆகாயத்தில் தூக்கி எறியப்படும். கண்ணிகளில் இது பயங்கரக் கண்ணி.

இன்னொரு வகையும் உண்டு. அதாவது ஜவான்களின் கால் பட்டால் அவரது இரு கால்களும் அடியோடு போய்விடுமாம். பிறகு அவர் பிழைப்பது அரிது.

மூன்றாவது வகைக் கண்ணி சற்றுப் பருமனானது. இதைச் சற்று ஆழமாகப் புதைக்க வேண்டும். இது வெடிக்கும் போது 450 அடி சுற்றளவில் எது இருந்தாலும் யார் இருந்தாலும் அவர்கள் துவம்சம் ஆவார்கள்.....

இந்த விவரங்களைக் கேட்கவே அச்சமாக இருந்தது. இவற்றை எப்படி நமது ஜவான்கள் சமாளித்தார்கள், முன்னேறினார்கள் என்று வியப்புக் கடலில் ஆழ்ந்தோம்.

இக்கண்ணிகளை அகற்றிக் கொண்டு போக வேண்டிய நிர்ப்பந்தம் நமது படையினருக்கு இருந்ததால் முன்னேற்றம் தடைப்பட்டிருக்கிறது. இந்த முன்னேற்றம் தடைப்படவே பாகிஸ்தானியர் சந்தோஷப்பட்டு விமானப் படையை ஏவிக் குண்டு போடச் செய்திருக்கிறார்கள். இந்த விமானங்கள் நிகழ்த்திய சேதம் ஏராளம். இதில் வந்த ராக்ஷஸ 'பாம்பர்' விமானங்களைப் பற்றி அறிந்த போது மெய் சிலிர்த்தது.

அதாவது 'பாம்பர்' விமானங்கள் ஏக காலத்தில் பத்து குண்டுகளைத் தாங்கி வர முடியும். இந்தக் குண்டுகளின் எடை தலா ஆயிரம் ராத்தல். ஆகவே ஒரு விமானம்

பத்தாயிரம் ராத்தல் குண்டுகளை எடுத்துவர முடியும். இக்குண்டுகள் வெடித்தால் எப்படி இருக்குமென்பதற்கு ஓர் உதாரணம்:

இச்சோகில் கால்வாயிலிருந்து திரும்பி வந்து கொண்டிருந்தேன். எங்கள் கார் ஓட்டியான கேரளத்து நண்பர் முழு வேகத்தில் வந்து கொண்டிருந்தார். காரணம் புழுதியிலும் மண்ணிலும் நடந்து வந்த எங்களுக்கு மிகக் களைப்பு. மேலும் காலை எட்டு மணிக்குக் காப்பி சாப்பிட்ட நாங்கள் மாலை நாலு மணியாகியும் எதுவும் சாப்பிடவில்லை.

ஒரு குறிப்பிட்ட இடம் வந்ததும் திடீரென ஐந்தாறு அதிகாரிகள் ஓடி வந்து, 'நிறுத்து—நிறுத்து' என்று கத்தினார்கள்.

எங்கள் டிரைவர் காரை உடனே நிறுத்தினாலும் அது நிற்கச் சில விநாடிகள் பிடித்தன. இதற்குள்ளாக நாங்கள் பல கெஜ தூரம் வந்துவிட்டோம். பின்னாலிருந்த அதிகாரிகள் காரை நோக்கி ஓடி வந்தனர். அவர்கள் வருவதற்குள் திடீரென என் உடல் நடுங்கியது. ஏன் உடம்பு நடுங்குகிறது என்று பக்கத்திலிருந்தவரைப் பார்த்தேன். அவர் சாமி வந்தவர் போல் கிடுகிடு வென ஆடிக் கொண்டிருந்தார். அடுத்த கணம் திடீரென காரே குலுங்கியது. அப்படிக் குலுங்கும் போது காரிலிருந்த சகல உறுப்புகளும் ஆடின. அது எழுப்பிய சத்தம் என்னவோ போல் கேட்டது. பூகம்பம்தான் ஏற்பட்டிருக்கிறது என்று நினைத்தேன்; இப்படி நினைத்த அடுத்த கணம், 'டமால்' என்று பயங்கர ஓசை ஒன்று கேட்டது. ஓசை வந்த திசையில் திரும்பிப் பார்த்தேன். இரண்டுபனை உயரத்துக்குப் புழுதிப் படலம் எழுந்து விண்ணை முட்டியது. இதற்குள்ளாகக் காருக்கு ஓடி [வந்த அதிகாரிகள் 'கீழே இறங்குங்கள்—மூன்று வெடிக்காத குண்டுகள் கண்டெடுக்கப்பட்டுள்ளன. அவற்றை வெடிக்கிற வரை போக வேண்டாம்' என்றார்கள்.

நாங்கள் கீழே இறங்கி ஒரு குழிக்குள் நின்று கொண்டோம். எங்களுக்குத் துணையாக மிஷின் கன் தாங்கிய ஜவான்கள் இருவர் வந்து நின்றார்கள். திரும்பவும் திரும்பவும் நில நடுக்கம். எங்களுக்குப் பழையபடியும் உதறல். அடுத்தடுத்து இரு பயங்கர சப்தம். வான மண்டலம் புழுதி மயமான நிலை......

இந்தக் குண்டுகள் முழுமையாக வெடிக்கப் பட்ட பிறகுதான் எங்களை மேற்கொண்டு செல்ல அனுமதித்தார்கள் அதிகாரிகள். திரும்ப மோட்டாருக்குள் ஏறும் போது ஓர் அதிகாரியைப் பார்த்து, ''வெடிக்கப்பட்ட குண்டுகள் எத்தனை ராத்தல்?'' என்று கேட்டேன். ''முதல் குண்டு 300, இரண்டாவது 500, மூன்றாவது 750 இருக்கும்'' என்றார்.

முந்நூறு ராத்தலுக்கே இத்தனை ரகளை என்றால் பாகிஸ்தான் 'பாம்பர்கள்' போட்ட ஆயிரம் ராத்தல்கள் என்ன பாடுபடுத்தியிருக்கும் என்று எண்ணிய போது எதிரே வந்த ஜவான்களைக் கையெடுத்துக் கும்பிடச் செய்தது. அவர்களில் ஒருவர், ''வணக்கம் ஐயா!'' என்றார். நெல்லை மாவட்டத்துத் தோழர். தாமிரவருணித் தண்ணீரல்லவா ? அழகிய தமிழில் அவர் பேசினார். குண்டு விளைவித்த பயங்கரம் இந்தத் தமிழ் ஓசையில் தானாகவே மறைந்தது.

இக்கண்ணிகளை நம்மவர்கள் எப்படி அகற்றினார்கள் என்பது மிகப் பெரிய காரியம்.

சுமார் 400, 500 பேரைக் கண்ணி அகற்ற இரவில் அனுப்புவார்கள். கண்ணிகளைக் கண்டு பிடிக்கும் கருவிகளோடு இவர்கள் இருட்டில் வேலை செய்வார்கள். வெளிச்சம் இருந்தால் எதிரிக்குத் தெரிந்து விடுமல்லவா? எனவே, உயிரை ஒரு கையிலும் கருவியை மற்றொரு கையிலும் பிடித்துக் கொண்டு அந்த வீரர்கள் வேலையில் இறங்குவார்கள். சூரியன் மறைந்ததும் இந்த வேலை தொடங்கும். வைகறைக் கோழி அங்கு கூவியதோ என்னவோ, அந்த நேரம் வரை வேலை நீடிக்கும். அப்படிச் செய்தாலும் 'சுத்தப்படுத்தப் பட்ட' இடம் 200 அடிதான் இருக்குமாம். அவ்வளவு கடின வேலை. இந்த வேலையில் ஆபத்து ஏற்படுவதற்குக் கணக்கு வழக்கில்லை.

இப்படியாகக் கண்ணி அகற்றும் படை நத்தை போல ஊரும். பின்னால் ஜவான்களும் வருவார்கள். வாகனங்களும் வரும். இப்படியாக முன்னேறியவர்களுக்கு வேகமில்லையே என்ற வருத்தம் ஏற்பட்டிருக்கிறது. இந்த வருத்தம் ஏற்பட்டதும் மற்றோர் ஏற்பாடு செய்திருக்கிறார்கள். அதாவது எதிரிகள் விமானங்களில்தானே வருவார்கள்! இதைச் சமாளித்து விட்டால்...? பிறகு வேகம் துரிதமடையுமல்லவா?

''ஆமாம் — ஆமாம்'' என்று ஜவான்கள் கூறியிருக்கிறார்கள். உடனே 'நாட்டாரை அனுப்புங்கள்' என்று உத்தரவு பிறந்திருக்கிறது. உத்தரவு பிறந்ததும் 'புர்ர்ர்ர்ர்.....' என்ற இரைச்சல். 'நாட்' விமானங்கள் விண்ணில் ஜாம் ஜாமென்று பறந்து வந்து குடை பிடித்திருக்கின்றன. கீழே வேலை செய்பவர்களுக்கும் முன்னேறுகிறவர்களுக்கும் பிறகு என்ன கவலை? எதிரியின் சாபர்ஜெட்டோ, பாம்பரோ இனி தலை காட்ட முடியுமா? கழுகை வல்லூறு அடிக்க முடியுமல்லவா? அது போல நமது நாட் வல்லூறுகள் சாபர் ஜெட் — பாம்பர் கழுகுகளை விரட்டியுள்ளன.

இந்த வரலாறுகளைக் கேட்டுக் கொண்டே பிரயாணம் செய்தோம். சாலையின் இரு மருங்கிலும் வாகனங்கள், மார்கழிக் குளிரில் எப்படி முடங்கிப் படுக்கிறோமோ அப்படி உருத் தெரியாதபடி முடங்கியும் கருங்கியும் வளைந்தும் நெளிந்தும் அடிபட்டுக் கிடப்பதைக் கண்டோம். இவை கண்ணித் தாக்குதலுக்கும் வெடிகுண்டு வீச்சுக்கும் பலியானவை. ரஸ்தாவில் காணப்பட்ட குழிகளையும், சாலை ஓரத்தில் கிடக்கும் வாகனங்களையும் பார்த்த போது சண்டை எவ்வளவு பயங்கரமாக நடந்திருக்க வேண்டுமென்பது புரிந்தது.

''இந்த இடம் இப்போது எவ்வளவோ சுத்தமாக இருக்கிறது. நீங்கள் சற்று முன்னால் வந்திருக்கவேண்டும். வானில் கழுகுகள் கூட்டமாகப் பறப்பதைப் பார்த்திருப்பீர்கள்.....''

''கழுகுகளா, ஏன் பறந்தன?'' என்றார் ஒருவர். மற்றவர்கள் விளக்கம் சொல்ல முனைந்தனர். நானோ தலையை நீட்டி வானைப் பார்த்தேன். என் கண்களுக்கு அப்போதுகூடப் பயங்கரக் கழுகுகள் சிறகடித்துச் செல்லுவதாக ஒரு பிரமை. இந்தப் பிரமை நீங்க வெகு நேரம் பிடித்தது. இதற்குள் ''இதுதான் துக்ராய் நகரம்'' என்றார் அதிகாரி.

# மக்ளீன்ஸ் பற்பசையின் புதிய புல்லரிக்கும் ருசியே சொல்லும் உங்களுக்கு, அது செயலாற்றுகிறதென்று!

## சுத்தமாக்க

–உங்கள் பற்களிலிருந்து அந்த மங்கிய மஞ்சள் திரையைப் போக்குகிறது

## வெண்மையாக்க

–அவைகளுக்கு அந்த அதிகமான வெண்மையைத் தருகிறது

## காக்க

–சொத்தைக்குக் காரணமான கிருமிகளை நீக்கி உங்கள் வாயைப் புத்துணர்ச்சியுடன் சுத்தமாக வைக்கிறது.




**மக்ளீன்ஸ்–அதிவெண்மையான பற்களுக்கு**



# இந்தியாவும் நேப்பாளமும்

ஜி. என். தாஸ்

'இதுவரை ஒரு நேப்பாளிக்கும் நடைபாதையில் படுத்துத் தூங்கும் நிலை ஏற்படவில்லை. ஒரு வேளைச் சாப்பாட்டுடன் திருப்தி அடைய வேண்டிய நிலை ஏற்பட்டிருக்கலாம். ஆனால் பட்டினி கிடந்து இறந்தான் என்று கேட்டது கிடையாது. தேசத்துக்காகவும், சமுதாயத்துக்காகவும் தியாகம் செய்ய வேண்டிய சந்தர்ப்பங்கள் நிகழ்ந்த பொழுது நேப்பாளியர்கள் என்றுமே தயங்கியது கிடையாது.'' – இவ்வாறு நேப்பாளமன்னர் மஹேந்திரர் சமீபத்தில் கூறினர். நேப்பாளம் மிகப் பழைமையான நாடு. ஆயினும் அங்கு எவ்வகை மாறுதலும் இதுவரை ஏற்படவில்லை. பழைய நம்பிக்கைகளும், பயங்களும், கற்பனைகளும், கனவுகளும் இன்றும் மக்களால் பாதுகாக்கப்பட்டு வருகின்றன. மற்றப் பிரதேசங்களில் கால வெள்ளம் பல மாறுதல்களை ஏற்படுத்தியிருக்கின்றன; பழைய பண்பாடுகளை மறக்க அடித்திருக்கின்றன. ஆனால் நேப்பாளத்தில் ஒரு மாறுதலும் நிகழவில்லை! இந்தச் சிறிய நாட்டின் பரப்பு 56,300 சதுர மைல்கள்தாம். ஜனத்தொகை 95 லக்ஷம்தான். எனினும், ஆதி நாட்களிலிருந்து ஏறத்தாழத் தொடர்ந்தாற்போலவே தனது சுதந்திரத்தைக் காப்பாற்றி வந்திருக்கிறது. உலகத்திலேயே இது ஒன்றுதான் ஹிந்து தேசம். அதனுடைய அரசியல் நிர்ணயச் சட்டம் ''பிரிக்கப்படக் கூடாததான சுதந்திர ஹிந்து முடியாட்சியுள்ளநாடு'' என்கிறது.

'நேப்பாள்' என்ற சொல் உண்மையில் இரண்டு சொற்கள் சேர்ந்ததாகும். ''நே'' என்றால் இந்திய, சீனமொழிகளில் ''வசிக்கும் இடம்'' என்று பொருள். திபெத்திய மொழியில் பாள் என்றால் ஆட்டு ரோமத்தைக் குறிக்கும். நான்காவது நூற்றாண்டைச் சேர்ந்த சமுத்திரகுப்த மன்னரின் அலகாபாத் கல்வெட்டிலும், கௌடில்யனின் அர்த்தசாஸ்திரத்திலும்தான் முதன்முதலில் நேப்பாளத்தின் மழையைத் தாங்கும் கம்பளிப் போர்வைகளைப் பற்றிய குறிப்புக்கள் காணப்படுகின்றன. நீண்டகால வழக்கில் நேப்பாள மக்களை ''நேவார்'' என்று திரித்து அழைக்கலாயிற்றோ என்று எண்ணத் தோன்றுகிறது.

பண்பாட்டின் அடிப்படையில் நேப்பாளத்தை மூன்று பகுதிகளாகப் பிரிக்கலாம். நேப்பாளத்தின் தென்பகுதியில் பாதிக்குமேல் இந்தியப் பண்பாட்டின் ஆதிக்கத்தையும் ஹிந்து சமயச் செல்வாக்கையும் காணலாம். வடபகுதியில் திபெத்திய பண்பாட்டை காணலாம். அங்கு ஒரு பகுதியில் 'லாமா' மதக் கோட்பாடுகளையும் 'பாலி'யையும் காணலாம். இவற்றுக்கு இடையில் நடுப்பகுதியில் ஹிமாலயப் பண்பாட்டைக் காணலாம். அதாவது ஹிந்துமதமும் லாமாக்களின் மதமும் சேர்ந்த ஒரு கலவையைக் காணலாம்.

மேலே :
காட்மண்டுவிலுள்ள பௌத்தர் ஆலயமான சுயம்புநாத் கோயில்

★

கீழே :
நேப்பாள மன்னர் மஹேந்திரரவும், ராணி ரத்னவும்





நேப்பாள நாடோடி நடனம் நடக்கிறது.

★

நேப்பாள ராஜ்யத்தைத் தோற்றுவித்த ராஜா பிரிதிவி நாராயண்ஷா

சரித்திரம் தொடங்கிய காலத்திலே ஸம்ஸ்கிருதப் பெயர்களைக் கொண்ட மாடு மேய்க்கும் இனத்தினர் இந்த நாட்டை ஆண்டு வந்தனர். மூன்றாவது நூற்றாண்டின் தொடக்கத்தில் அபீரர்கள் அதாவது வட மகாராஷ்டிரத்திலும் தென் குஜராத்திலும் புதிய ராஜ்யத்தை ஸ்தாபித்த அதே இனத்தவர் நேப்பாளத்தைக் கைப்பற்றினர். அவர்களுக்குப் பின்னர், ஆறாவது நூற்றாண்டில் வட கிழக்கு இந்தியாவைச் சேர்ந்த சீன, திபெத்திய மொழி பேசும் மங்கோலிய இனத்தைச் சேர்ந்த கிராடர்கள் நேப்பாளத்தைக் கைப்பற்றினர். 29 கிராட மன்னர்கள் இந்த நாட்டை ஆண்டனர். அவர்களை இந்திய மன்னன் நிமிஷன் விரட்டி விட்டுத் தான் ஆட்சி புரியத் தொடங்கினான். அவனுடைய சந்ததியார் கி. பி. மூன்றாம் நூற்றாண்டு வரையில் தொடர்ந்து ஆட்சி புரிந்தனர்.

பிறகு தோன்றினர் லிச்சாவியர்கள். அவர்கள் வடபீஹார் மாகாணத்தைச் சேர்ந்த பலம் பொருந்திய க்ஷத்திரியர்கள். அவர்கள் பகவான் புத்தரின் காலத்திலிருந்து இருந்து வருபவர்கள். ஐந்நூறு ஆண்டுகள் வரை இருபத்தெட்டு மன்னர்கள் தொடர்ந்து ஆட்சி செலுத்தி வந்தனர். இவர்கள் காலத்தில்தான் பசுபதிநாதர் ஆலயம் பிரசித்தி பெற்றது. ஹிந்து மதம் நேப்பாளத்தில் பலமாக வேரூன்றியது. ஏழாம் நூற்றாண்டில் இந்த ஆட்சி நிலை கலங்கத் தொடங்கியது. இந்த நிலைமையை அம்சுவர்மன் என்ற ஒரு மந்திரி பயன்படுத்திக் கொண்டு சிம்மாசனத்தைக் கைப்பற்றித் தானே மன்னன் என்று அறிவித்தான். இவன்தான் நேப்பாளத்தில் தாகுர் வம்சத்தை நிலைநாட்டியவன். இந்த தாகுர்கள் இமயமலைப் பகுதியைச் சேர்ந்த க்ஷத்திரியர்கள்.

நேப்பாளத்தில் புத்த மதம் தோன்றியதைப் பற்றி நம்பகமான குறிப்புக்கள் யுவாங் சுவாங் எழுதியவற்றிலிருந்துதான் கிடைக்கின்றன. யுவாங்சுவாங் ஏழாவது நூற்றாண்டில் இந்தியாவுக்கு வந்த சீன யாத்திரிகர். அடுத்தாற்போல் புத்த மதத்தைப் பற்றிய குறிப்புக்கள் அம்சுவர்மனின் கல்வெட்டிலிருந்து தெரிய வருகின்றன. ஆனால் புத்தமதம் இவற்றுக்கு முன்னதாகவே அங்கு பரவியிருக்க வேண்டும் என்பதில் சந்தேகமில்லை. ஒரு வேளை அசோகர் காலத்தில் அங்கு பரவத் தொடங்கி யிருக்கலாம்.



நேப்பாளத்தில் நவீன யந்திரம் புகுந்து விட்டது. புது ரகக் கலப்பைகளால் உழுகின்றனர்.

லிச்சாவியர்கள் வம்சத்தைச் சேர்ந்த நரேந்திர தேவன் என்பவன் கி. பி. 643ல் மீண்டும் அவ்வமிசத்துக்கு அரச பதவியைப் பெற்றுத் தந்தான். அவனுடைய பேரன் ஜெய தேவனின் காலத்துக்குப் பிறகு எட்டாம் நூற்றாண்டில் நேப்பாளம் திபேத்தின் ஆதிக்கத்துக்கு உட்பட்டது. இப்படி ஒன்றரை நூற்றாண்டு காலம் திபெத்தைச் சார்ந்து இருந்து விட்டு நேப்பாளம் மீண்டும் கி. பி. 879ல் முழு சுதந்திர ராஜ்யமாகப் பிரகடனப் படுத்திக் கொண்டது. அதைத் தொடர்ந்து நாட்டில் மகத்தான பொருளாதார வளர்ச்சிகள் ஏற்படலாயின. காட்மண்டு போன்ற பெரிய நகரங்களும் தோன்றலாயின.

மல்லர்கள் என்னும் இனத்தார் பதின்மூன்றும் நூற்றாண்டில் ஆட்சிக்கு வந்தனர். இவர்கள் எப்படியோ பதினெட்டாம் நூற்றாண்டு வரை ஆண்டனர். இவர்கள் காலத்தில்தான் இலக்கியம், கலை, சிற்பம், சங்கீதம் ஆகியவற்றுக்குப் புதிய ஊக்கம் பிறந்தது. அவர்கள் பல நல்ல சாலைகள் அமைத்தனர். பதினான்காம் நூற்றாண்டில் ஆண்ட ஜெய ஸ்திதிமல்லன் என்ற அரசன் நேவார் சமுதாயத்தில் சில மைத்திலி பிராமணர்களின் யோசனையின் பேரில் சாதிமுறையை வகுத்தான். எனினும், அது நிலைபெறவில்லை. நேப்பாள மக்களின் மலைப் பிரதேசப் பழக்க வழக்கங்களை மாற்ற முடியவில்லை.

இந்தியாவிலிருந்து இந்துமதம் நேப்பாளத்துக்குள் மெல்லப் பிரவேசித்தது; நன்றாக வளர்ந்தது; தாயகமாகவும் கொண்டது. எனினும் அது மெள்ளமுந்தவாரியாகத்தான் வெற்றி கொண்டது. ஏனெனில், உள்ளூர் மக்களின் பூர்விக சமய பழக்கவழக்கங்களை ஜீரித்து மதம் ஏற்று அதற்குத் தகுந்தபடி இயங்கியது என்று அறிஞர் குஸ்ஸிபி துக்கி கூறுகிறார்.

மல்ல வம்சத்தைச் சேர்ந்த மன்னர்களுள் யக்ஷமல்லன் என்பவன்தான் மிகவும் பிரசித்தமானவன்; பல வெற்றிகளைக் கண்டவன். ஆனால் அவன் ஒரு தவறு செய்தான். ராஜ்யத்தைத் தனது புதல்வர்களுக்குப் பகிர்ந்து கொடுத்தான். நேப்பாளத்தின் ஒற்றுமை சிதைந்து பூசல்கள் தொடங்கின.

இத்தகைய சூழ்நிலையில் ராஜ்யம் 1768ம் ஆண்டு மேற்கு நேப்பாள கூர்கா மாகாணத்தின் அரசனான பிரிதிவி நாராயண்ஷா என்ற சிறந்த போர்வீரனின் ஆளுகைக்கு உட்பட்டது. இவன்தான் நேப்பாளத்தின் ஒற்றுமையை முதன் முறையாக நிலைநாட்டியவன். பல ஆண்டுகளுக்குப் பின்னர் பானுபக்த ஆசார்ய என்ற கவி, நாட்டில் பேச்சு வழக்கிலிருந்த பல மொழிகளின் சிறந்த அம்சங்களையெல்லாம் சேர்த்து ஓர் உறுதியான தேசிய மொழியை உண்டாக்கினார். பிரிதிவிநாராயண்ஷா தேசத்தை ஒன்றுபடுத்தியதைப் போல், இக்கவியும் மொழிகளை ஒன்றுபடுத்தி உயிர் ஊட்டினார். அடிமை விடுதலைக்காகப் பாடுபட்டவர்களில் உலகிலேயே முதன்மையானவன், முன்னோடி பிரிதிவிநாராயண் ஷா என்று சொல்ல வேண்டும். வீர சாகஸ குணங்களுக்குப் பெயர் பெற்ற கூர்க்காக்களில் இவன் முதன்மையானவன். இவர்கள் ராஜஸ்தானத்தின் வீர மறக் குலச் சாதியாரின் வம்சத்தைச் சேர்ந்தவர்கள் என்று சொல்லிக் கொள்கிறார்கள். இவர்களது வம்சாவழியைச் சேர்ந்தவர்கள்தான் பிரசித்திபெற்ற ஷா குடும்பத்தினரும், இன்றைய நேப்பாள மன்னரும், ராணா குடும்பங்களும்.

இவ்வாறு இந்தியாவுக்கும் நேப்பாளத்துக்கும் மிக அழகும் நெருக்கமும் வாய்ந்த பல தொடர்புகள் இருக்கின்றன. நேப்பாளத்தில் மகாயான புத்தமதம், சைவம், வைணவம், சாக்தம் ஆகிய நான்கு மதங்களும் நிலவுகின்றன. புத்தர் அந்த நாட்டில்தான் பிறந்தார். நேப்பாள மன்னர் பசுபதிநாதரின் சார்பில் தேசத்தை ஆள்வதாகக் கருதப்படுகிறது. இந்தப் பசுபதிநாதரின் ஆலயத்தின் பிரதான குருக்கள்மார்கள் நால்வரும் தென் இந்தியாவிலிருந்து வந்தவர்கள். புத்தர் ஆலயம், ராதாகிருஷ்ணர் கோயில் இன்னும் இங்குள்ள பல கோயில்கள், இந்தியக் கோயில்களை ஒத்திருக்கின்றன. பைரஹவா, தௌலிஹவா என்ற இடங்களில் புதைபொருள் ஆராய்ச்சியாளர்கள் அகழ்ந்து பார்த்ததில் பல பிராமண மத விக்கிரகங்களும் பொம்மைகளும் கிடைத்துள்ளன. குஷானர் காலத்து நாணயங்களும் மட்பாண்டங்களும் மற்றும் பாத்திரங்களும் கிடைத்துள்ளன. நேப்பாளம் ராணாக்களின் ஆட்சியிலிருந்து விடுபட்டு 1951ல் ஜனநாயக ஆட்சி ஏற்பட்டதற்குக் காரணம் நேப்பாள சுதந்திர இயக்கம் இந்தியாவினின்று தொடங்கியதுதான். சமீப காலத்தில் பல வெளிநாட்டுப் பிரச்னைகளில் இந்தியாவுக்கும், நேப்பாளத்துக்கும் ஒன்றுபட்ட கருத்து நிலவுவதைப் பார்க்கிறோம். 1950ல் இந்தியாவுக்கும், நேப்பாளத்துக்கும் ஒரு நேச உடன்படிக்கை கையெழுத்து ஆயிற்று. அதில் ஒரு முக்கியமான அம்சம், அண்டை நாடுகளுடன் ஏதாகிலும் பகை ஏற்பட்டால் உடனே ஒன்று மற்றதற்குத் தெரிவிக்க வேண்டும் என்பது. நேப்பாளத்துக்குப் பொருளாதாரத் துறையில் இந்தியா கணிசமான உதவி செய்து வந்திருக்கிறது. மூன்றுவது ஐந்தாண்டுத் திட்டத்தில் நேப்பாளத்துக்கு இருபத்திரண்டு கோடி கொடுத்திருக்கிறது. நான்காவது திட்ட காலத்தில் இருபத்தைந்து கோடி கொடுக்கவிருக்கிறது. நேப்பாளத்தில் சாலைகள் அமைப்பது, கிராம, விவசாய அபிவிருத்திகளுக்கு உதவுவது, நீர்ப்பாசன வசதி செய்து தருவது, மேலும் குடிதண்ணீர் வசதி, மின்சார விநியோகம், கழிவு நீர்த் திட்டம், தாய், சேய் நலத் திட்டம் ஆகிய பல காரியங்களுக்கு இந்தியா உதவி வருகிறது.

பதிலுக்கு நேப்பாளமும் எவ்வளவோ உதவ முடியும். அதனுடைய அறிவு சான்ற முடியாட்சி, கிராமப் பஞ்சாயத்து, ஜில்லா போர்டு, மற்ற மண்டலங்கள் இவற்றில் நிலவும் கட்சிச் சார்பற்ற ஆட்சி முறைகள் இந்திய மக்கள் கூர்ந்து பார்த்து ஆராய்ந்து பயனடைய வேண்டியவை ஆகும். 1960ல் நேப்பாள காங்கிரஸ் ஆட்சி அகற்றப்பட்டபோது இந்தியாவுக்கும் நேப்பாளத்துக்கும் இருந்த உறவு முறை சிறிது பாதிக்கப்பட்டது. இப்பொழுது அந்த மன வேறுபாடுகளெல்லாம் தீர்ந்து நல்ல சுமுகமான நேச உறவு வளரத் தொடங்கியிருப்பது மகிழ்ச்சிக்குரியது.

# வெற்றித் திருநகர்

அகிலன்

## அத்தியாயம் பத்து

## ஆளப் பிறந்தவர்

சக்கரவர்த்தி கிருஷ்ண தேவராயரின் நெஞ்சு வைரம் பாய்ந்த நெஞ்சு; மலையே புரண்டு வந்த போதும் மனம் கலங்காதவர். அத்தகைய மன வலிமை பெற்றவர் வடக்கிலிருந்து வந்த செய்தியைக் கேட்டவுடன் இடிந்து போய் விட்டாரென்றால், அது மிகவும் அதிர்ச்சிக்குரிய செய்தியாக இருக்குமென்றே நினைத்தான் விசுவநாதன்.

எதற்குமே அதிர்ச்சியடையாத நெஞ்சுரம் பெற்றவர் அவர். ரெய்ச்சூர்ப் போரில் எதிர்ப்பட்ட பயங்கரமான சோதனையை விடக் கொடுமையானது வேறொன்றுமே இருக்க முடியாது. அதை இப்போது நினைத்துப் பார்த்தான் விசுவநாதன்.

அவர் ஆட்சிக்கு வந்தவுடன் விஜயநகரப் பேரரசிலிருந்து பிற நாடுகள் கைப்பற்றிக் கொண்டிருந்த பகுதிகளின் மீது கவனம் செலுத்தினார். அவற்றை மீட்பதே அவருக்கு முதற் கடமை என்று தோன்றியது. வெறும்

மண்ணாசை காரணமாக அவர் அவற்றை மீட்கத் துணியவில்லை. சாம்ராஜ்யத்தின் வீரம், மானம் இவற்றைக் காக்கவே அவர் அந்தப் பகுதிகளை மீட்க வேண்டியிருந்தது.

விஜயநகரத்துக்குச் சொந்தமான ரெய்ச்சூர் அப்போது பீஜப்பூர் சுல்தான் அதில்ஷாவின் பிடியிலிருந்தது. பீஜப்பூர் அரசர்களின் பெயர்களே விஜயநகரத்துக்குச் சிம்ம சொப்பனமாக இருந்த காலம் அது. மக்கள் மனத்திலிருந்த அந்த அச்சத்தைக் கட்டெரிப்பதற்காகவே அவர் ரெய்ச்சூரைக் கைப்பற்றத் திட்டமிட்டார். காலமெல்லாம் அஞ்சி வாழ்ந்த ஒரு வாழ்க்கையை அறவே ஒழித்துக் கட்டுவதற்கு அவர் முனைந்து விட்டார்.

போர் தொடங்கி விட்டது:

ரெய்ச்சூர் நகருக்கு வெளிப்புறம் மேற்குத் திசையில் ஆற்றங்கரையை அடுத்து அணி வகுத்து நின்றன பீஜப்பூர் படைகள். நூற்றுக் கணக்கில் பீரங்கிகளும், அவற்றை இயக்குவதற்கு இரு மடங்கு போர்த்துகீசிய வீரர்களும் அங்கு ஆயத்தமாக நின்றார்கள். ஆயிரக் கணக்கில் யானைப் படை வீரர்கள், பல்லாயிரக் கணக்கில் குதிரை வீரர்கள், லட்சோப லட்சம் காலாட் படை வீரர்கள் அங்கங்கே பீரங்கிகளின் இடைவெளிகளில் செருக்கோடு நின்றனர். சுல்தான் அதில்ஷாவே படைகளை முன்னின்று நடத்தலானார். கிருஷ்ணதேவராயரின் விஜயநகரத்து வீரர்களும் எண்ணிக்கையில் எதிர்ப் பகுதியினரை விட மிகுதியாகவே இருந்தார்கள். ஆனாலும் ராயரிடம் அப்போது போதிய பீரங்கிகளோ அவற்றில் பழக்கப்பட்ட வெளிநாட்டு வீரர்களோ கிடையாது.

முரசுகள் முழங்கின; சங்கொலி விம்மியது; தொடங்கியது போர்.....

பீஜப்பூர் பீரங்கிகள் முன்னேறித் தாக்கிய விஜயநகரத்து வீரர்களைக் கதிகலங்க அடித்து விட்டன. ஆயிரமாயிரம் இடிகள் ஒன்றாக இடிப்பதுபோல் செவிகளைப் பிளந்து கொண்டு, ஆயிரமாயிரம் மின்னல்கள் ஒன்றாகச் சாடுவதுபோல் கண்களைக் குருடாக்கிக் கொண்டு, அவை நெருப்புப் பந்தங்களை மழை போல் பொழிந்து கொண்டிருந்தன. அதனால் வீரர்களுக்கிடையில் நேர்ந்த குழப்பத்தைப் பயன்படுத்திக் கொண்டு பீஜப்பூர் படைகள் விஜயநகரத்துப் படைகளைப் பல்லாயிரக் கணக்கில் கொன்று குவித்தன.

பீரங்கித் தாக்குதல்களையும் அதோடு சேர்ந்த பகைவர்களது மூர்க்கத்தனமான ஆயுதங்களின் வீச்சுக்களையும் தாங்காது, குழப்பமடைந்த விஜயநகரத்து வீரர்கள் பின்வாங்கி ஓடத் தலைப்பட்டார்கள். நிலை தடுமாறி, சுயநினைவைப் பறிகொடுத்துவிட்டு, பீதியோடு அவர்கள் பின்வாங்கும் அலங்கோலத்தைச் சக்கரவர்த்தியும் பார்த்துக் கொண்டுதான் இருந்தார்.

சக்கரவர்த்திக்கு அருகில் மற்றொரு குதிரை மீது மெய்க்காவலுக்கு நின்ற விசுவநாதனுக்கு எல்லாமே போய்விட்டது போல் தோன்றியது. 'தோல்வி வெறும் தோல்வியல்ல; பயங்கரமான படுதோல்வி; மீண்டும் எழும்பவே முடியாத தோல்வி' என்ற முடிவுக்கு வந்து விட்டான் அவன்.

'விஜயநகரத்தின் வீறுகொண்ட புத்தெழுச்சியா? அல்லது அதன் சர்வநாசமா?' என்று முடிவு கட்ட வேண்டிய போர்க்களம் அது. கண்ணெதிரில் பேரழிவுப் பெருவெள்ளம் இரத்த ஊழியாகி விஜயநகர வீரர்களின் சடலங்களைச் சுமந்து வந்து கொண்டிருந்தது.

தமக்குப் பின்னால் எஞ்சியிருந்த வீரர்களின் அணிகளை ஒரு முறை திரும்பிப் பார்த்தார். ஒரு படைத் தலைவனின் முகத்தில்கூட, வீரனின் முகத்தில்கூட, நம்பிக்கையின் ஒளி மின்னவில்லை. திடீரென்று தமது குதிரையை அவர்கள் முன்னால் கொண்டு வந்து நிறுத்தி, ''நானே தலைமை ஏற்றுக் கொண்டு இப்போது போர் நடத்தப் போகிறேன்!'' என்று முழங்கிவிட்டு, ஒரு வீரனை மட்டும் தனியே அழைத்துத் தமது இலச்சினை மோதிரத்தை எடுத்து அவனிடம் கொடுத்தார்.

''போர்க்களத்தில் நான் மாண்டு விட்டால், இதை அரண்மனையில் காட்டி அந்தப்புரத்துப் பெண்கள் எல்லோரையும் தீக்குளிக்கச் சொல்லி விடு! பகைவர் கூட்டம் அங்கு வருவதற்குள் தீக்குளிப்பு முடிந்துவிட வேண்டும்!'' என்றார்.

பிறகு வீரர்களிடையே அவரது கர்ஜனை ஒலித்தது :

''மனிதனுக்கு ஆறிலும் சாவு; நூறிலும் சாவு. சாகப் பயந்தவனை நாம் விஜயநகரத்து மண்ணில் பிறந்தவனாக மதிக்க வேண்டாம். புறமுதுகிட்டு ஓடி வருவதோ, தோல்வியை உயிரோடு ஏற்றுக் கொள்வதோ, இப்போதே இங்கேயே நிறுத்தப்பட வேண்டும். முதலில் பின்வாங்கி ஓடி வரும் தமது கோழைகளின் மார்பில் வேல் பாய்ச்சிக் கொல்லுங்கள்! அவர்களை எதிர்முனைக்குத் திருப்புங்கள்! நாம் இன்றைக்கே இங்கு வெற்றி பெற்று ஆளவேண்டும்; அல்லது வீர மரணம் எய்தி மாள வேண்டும்!.... உம்! முதலில் நம் கோழைகளையெல்லாம் தாக்கித் திருப்புங்கள்!''

முதலில் சக்கரவர்த்தியே புயலெனச் சீறிப் பாய்ந்து, தமது வாளாலேயே ஓடிவரும் வீரர்களில் ஒருவனைச் சாய்த்தார். ''பீரங்கி என்ன செய்யும்? அதற்கு உன் மார்பைக் காட்டு! ஆயிரம் பீரங்கிகளுக்குள்ள வலிமை உன் மார்பில் இருக்கிறது!'' என்று எக்காளமிட்டுக் கொண்டே களத்துக்குள் புகுந்து விட்டார் அவர்.

அப்புறம் அங்கு நடந்த பேரதிசயம் இருக்கிறதே, அதை விசுவநாதன் தன் வாழ்நாளில் வேறு எங்குமே கண்டதில்லை. ஒவ்வொரு வீரனுமே சக்கரவர்த்தியாக மாறி விட்டான். ஊழிப் புயல் திடீரென்று எதிர்ப்புறம் திரும்பி வீசத் தொடங்கிவிட்டது. பீரங்கிகள் சந்தன மழை பொழிவதாக நினைத்துக் கொண்டார்கள் போலும் அவர்கள் !

மீண்டும் எழும்பவே முடியாத தோல்வி என்று நிச்சயமாகிவிட்ட அந்தப் போர்க்களம், சர்வநாசப் படுகளம் அதுவே என்று அச்சமூட்டிய அந்தப் போர்க்களம், சாம்ராஜ்யத்தின் இடுகாடாக எக்களித்துக்கொண்டிருந்த அந்தப் போர்க்களம் எப்படித்தான் வெற்றிக்களமாக மாறியதோ, தெரியவில்லை!

வெற்றி என்றால் மறக்கக் கூடிய வெற்றியா அது? கிருஷ்ணதேவராயரின் பெயரைக் கேட்டவுடனேயே பகைநாடுகளைப் பணிந்து பதறச் செய்த வெற்றியல்லவா அது? பீஜப்பூர் அரசர் அதில்ஷாவும் சில வீரர்களும் மட்டி லும் யானையில் தப்பியோட, அங்கு பகைவ ரில் யாருமே உயிருடன் எஞ்சியிருக்கவில்லை.

களத்தைக் கண்ட விசுவநாதன் கிருஷ்ண தேவராயர் யார் என்பதை அன்றுதான் முதன் முறையாகக் கண்டு கொண்டான். அவருடைய அன்பு, இரக்கம், கனிவு, பகைவருக்கருளும் பண்பு இவற்றை மட்டி லுமே கண்டிருந்தவனுக்கு இப்படி ஒரு வைரம் பாய்ந்த நெஞ்சுள்ள மாவீரர் அவர் என்பது அன்றுதான் புலப்பட்டது.

நெருப்பைக் கக்கி வந்த போர்த்துகீசியப் பீரங்கிகள் அவற்றை இயக்கிய போர்த்து கீசியச் சிப்பாய்களின் சடலங்களுக்கிடையே போர் வெறி கொண்டோரின் எலும்புக் கூடுகள் போல் பரிதாபமாக நின்று கொண் டிருந்தன. ரத்த வெள்ளத்தில் மிதந்த வீரர் களின் சடலங்களுக்கிடையே மலைக் கூட்ட மென யானைகள், குன்றுகளை யொத்த குதிரைகள், குவியல் குவியலாகப் படைக் கலன்கள்....

வெற்றி வெறி கொண்டு பழி வாங்க வேண்டுமென்று கூக்குரலிட்ட விஜயநகரத் துப் படைவீரர்களிடையே சக்கரவர்த்தி மீண்டும் முழங்கினார்:

''குடிமக்களுக்கோ, பெண்களுக்கோ, குழந்தைகளுக்கோ எவனாவது நம்மில் கொடுமை செய்தால், அவனை அதே இடத் தில் வெட்டி வீழ்த்தும்படி நான் கட்டளையிடு கிறேன். அவர்கள் யாராக இருந்தாலும் என் மக்கள்! அவர்கள் என் மக்கள்! இந்த நினைவு உங்களுக்கு இருக்கட்டும் !''

நேருக்கு மாறான நிகழ்ச்சியை அநுபவித் திருந்த விஜயநகரத்து வீரர்கள் தமது கரங் களில் சக்கரவர்த்தி விலங்கிட்டு விட்டது போல் உணர்ந்தார்கள். ''நாமும் மிருகங்க ளல்ல; நமது குடிமக்களும் மிருகங்களல்ல, வேட்டையாடுவதற்கு!'' என்று கோபத் தோடு சீறினார் அவர்.

---

அந்த நிகழ்ச்சிகளையெல்லாம் நினைத்துப் பார்த்தான் விசுவநாதன். நாட்டின் தலை விதியையே தமது நெஞ்சுரத்தால் அன்று மாற்றி அமைத்தவர், இன்று இந்தச் செய்தி யைக் கேட்டவுடன் இப்படிக் கலங்குவானேன்?

அமைச்சர் சாளுவ நரசிம்மரும் சக்கரவர்த்தி களின் சொல்லுக்காக அமைதியோடு காத் திருந்தார்.

''இந்தப் பரத கண்டத்தின் தலைவிதியை என் வாழ்நாளுக்குள் முடிந்த வரையில் மாற்றிவிடலாம் என்று நம்பியிருந்தேன். அதற்கு இப்போது சோதனை வந்திருக்கிறது!'' என்றார் சக்கரவர்த்தி.

''வடக்கில் அன்னியப் படையெடுப்புக்கள் நடப்பது ஒன்றும் புதுமையில்லையே!'' என் றார் அமைச்சர்.

''படையெடுப்புக்கள் நடப்பதும் புதுமை யில்லை; அன்னியர்களைத் தூண்டிவிட்டுத் துரோகம் செய்வதும் புதுமையில்லை. ஆனால்......''

சக்கரவர்த்திகள் நீண்ட பெருமூச்சுவிட்டு மேலே தொடர்ந்து பேசினார்: ''தைமூரின் வழியில் பாபர்தான் இப்போது காபூலில் ஆட்சி நடத்துகிறவன். அவனுடைய சாம் ராஜ்யப் பெரும் பசிக்கு இரை போட விரும்பு கிறவன் போல்தான் லாகூர் சுல்தானும் துரோகம் செய்திருக்கிறான். வெடிமருந்துக் கருவிகளில் புதுமையான ஆயுதங்களும் அவற்றை இயக்கத் தெரிந்த படைகளும் அவனிடம் இருக்கின்றன. அவனுடைய பேராசைக்கு ஏற்றபடிதான் இப்போது தொடங்கும் உட்பகை, பொறாமை, மனக் குறை, பேராசை முதலிய தன்னலப் பிசாசுகள் ஆட்டம் போட்டுக் கொண்டிருக் கின்றன. உள்ளே விரோதமும் துரோகமும் இல்லாமல் ஒற்றுமை இருந்தால்தானே அன்னியன் அஞ்சுவான்?''

''நாம் தெற்கிலிருக்கிறோம். அதனால்....''

''பரத கண்டத்தில் பாதியளவுக்கு நம் சாம்ராஜ்யம் பரந்து கிடக்கிறது, அமைச் சரே!'' என்று சீறினார் சக்கரவர்த்தி; ''இன்றைக்கு டில்லி சுல்தான்களுக்கு நேரும் கதிதான் நாளைக்கு நமக்கும் நேரும். நாம் இணைந்து ஒன்றாக நிற்காவிட்டால் யாருக் குமே இந்த நாட்டில் வாழ்விருக்காது!''

சக்கரவர்த்திகளின் ஒற்றர்களும் தூதுவர் களும் டில்லி வரையிலும் பரவியிருந் தார்கள். அவர்களது வாயிலாகவும் செய்திகள் சக்கரவர்த்திக்கு எட்டியிருக்கு மென்பதை அறிந்து கொண்டார் அமைச்சர்.

''சரி, முதலில் தமிழ் நாட்டு அரசர்களை அழைத்து வா!'' என்று விசுவநாதனிடம் கூறினார் சக்கரவர்த்தி.

## அத்தியாயம் பதினொன்று

# விழுப்புண் பெற்றவன்

சந்திரசேகர பாண்டியரும் திருவல்லப னும் வந்து சக்கரவர்த்திக்கு வணக்கம் செலுத்திவிட்டு இருக்கைகளில் அமர்ந்தனர். பாண்டியரின் முகத்திலிருந்தே அவரது துயரங்களை உணர்ந்துகொண்ட சக்கர வர்த்தி நெருங்கிய உறவினரை வரவேற்பது போல் வரவேற்று அவரிடம் அன்பு மொழிகள் பேசினார். வழிப் பயணத்தைப் பற்றியும் அங்கு விருந்தோம்பல் வசதிகளைப் பற்றியும் கனிவோடு கேட்டார். திருவல்லப பன் ஒரு பண்பின் திருஉருவத்துக்கு முன்னால் தாங்கள் இருப்பதைக் கண்டு பேரானந்தம் அடைந்தான்.

செய்திகளை விவரமாகக் கூறினார் சந்திர சேகர பாண்டியர். வீரசோமன் தமக்குச் செய்த துரோகத்தையும் விளக்கினார். திருவல்லபனைச் சக்கரவர்த்திக்கு அறிமுகம் செய்து வைத்த போது, பராக்கிரம பாண்டி

யரின் வழியில் வந்தவன் அவன் என்பதை எடுத்துக் கூறினார்.

''ஓ! தெற்குக் கோடியிலிருந்து ஒரு பாண்டியரை முன்பு சிறைப்படுத்திக் கொண்டு போனார்களாமே டில்லிக்கு? அவர் வழியில் வந்தவரா இந்த இளைஞர்?''

''ஆமாம்; அங்கு சென்ற பாண்டியரின் கதி என்ன ஆயிற்றோ தெரியவில்லை.''

சக்கரவர்த்தி நீண்ட பெருமூச்சு விட்டார். சற்று முன்பு வடக்கிலிருந்து வந்த நிகழ்ச்சிகளால் அவர் மனம் கலக்கமுற்றிருந்ததால், கடந்து போன பழைய விஷயங்கள் அவருக்கு இப்போது நினைவில் வந்தன. பல தலைமுறைகளுக்கு முன்பு நடந்ததென்றாலும் வழி வழியாக அந்தச் செய்தி அடுத்த தலைமுறைகளுக்கு வந்து கொண்டிருந்தது.

''விஜயநகர சாம்ராஜ்யத்தின் மேலாட்சி எப்படித் தமிழ் நாட்டில் ஏற்பட்டது தெரியுமா? எதற்காக ஏற்பட்டது தெரியுமா?''

''ஒன்று மட்டும் தெரியும். அதை அழிவிலிருந்து காப்பாற்றுவதற்காகச் சக்கரவர்த்திகளின் முன்னோர்கள் அங்கு படை எடுத்து வந்திருக்கிறார்கள். மாலிக்காபூரின் படைத் தலைவர்கள் மதுரையைக் கைப்பற்றிக் கொண்டு நடத்திய கொடுமைகளிலிருந்து எங்களை விடுவித்திருக்கிறார்கள். இந்த நன்றியை நாங்கள் என்றென்றும் மறக்க மாட்டோம்.''

''மறந்து விட்டானே வீரசோழன்?'' என்று சீறினார் சக்கரவர்த்தி. ''இந்த வீராதி வீரனின் முன்னோர்கள் அப்போது என்ன செய்து கொண்டிருந்தார்கள்? எங்கே ஓடி ஒளிந்தார்கள்? ராமேசுவரம் வரையிலும் சென்று, நாடு நகரம் கோவில் குளமெல்லாம் கொள்ளையடித்து, குடிமக்களைக் கொன்று குவித்து, ஒரு லட்சம் மணங்குப் பொன் ஆபரணங்களையும், முத்துக்களையும், நவரத்தினங்களையும் யானைகளின் மீது வைத்து மாலிக்காபூர் கொண்டு சென்றானே, அப்போது இந்த வீர சோழர்கள் எங்கே போயிருந்தார்கள்? அவனுடன் வந்த ஆட்கள் மதுரையிலிருந்து கொண்டு காட்டாட்சி நடத்தி வேட்டையாடினார்களே, அப்போது இந்த வீரர் பரம்பரை என்ன செய்து கொண்டிருந்தது?''

சந்திரசேகர பாண்டியர் தலைகுனிந்தார். காலம் காலமாக வீரம் பேசித் தனக்குள் உட்பகையை வளர்த்துச் சீரழிந்த தமிழ்க்குலத்தின் உருவத்தைச் சக்கரவர்த்தி கட்டிக்காட்டியபோது அவருக்குத் தம் அங்கமெல்லாம் பதறியது.

''பாண்டியரே! விஜயநகரம் என்று ஒன்று தோன்றியிருக்காவிட்டால், அதன் லட்சியத்தைச் சுமந்து கொண்டு தெற்கே குமார கம்பண்ணர் அப்போதே அங்கு வந்திருக்காவிட்டால், உங்களது மூவேந்தர்களின் பெயர்களைச் சொல்லக்கூட அங்கு யாரும் மிஞ்சியிருக்க மாட்டார்கள். எங்களுடைய சாம்ராஜ்யத்தின் நேரடியான ஆட்சிக்குக் கொண்டு வரத் தெரியாமலா நாங்கள் உங்களைத் தேடிப் பிடித்து, உங்களிடம் நாட்டைக் கொடுத்தோம்? விஜயநகரத்தின் இலட்சியத்துக்கே எதிராக, தனது சொந்த வாழ்வையே இப்போது தமிழ் நாடு


''முன்பு ஒரு தடவை உங்களுக்கு 'ஃப்ளு'க்காக வைத்தியம் செய்திருக்கிறேன் இல்லையா?''

''ஆமாம், ஆமாம்! 'கிட்னி' கோளாறு இருந்தபோது!''

அழித்துக் கொண்டு வருகிறது. நடந்து போன கொடுமைகளிலிருந்து ஒரு நாடோ மனிதனோ அறிவு பெறத் தவறினால் அந்த நாட்டையோ மனிதனையோ இறைவனும் கூடக் காப்பாற்ற முடியாது. காலம் மாறி விட்டது, பாண்டியரே! ஊருக்கோர் அரசன், நகரத்துக்கு ஓர் அரசன், சிறுநாட்டுக்கொரு தலைவன் என்ற காலமெல்லாம் மலை ஏறிப் போய் விட்டது! எங்கோ நாட்டின் வடக்கு எல்லையிலிருந்து இப்போது மறுபடியும் ஒருவன் வரப் போகிறானாம். இப்போதே வரவேற்று உபசரிக்கத் தொடங்கி விட்டான் வாகூர் கல்தான்!''

சந்திரசேகர பாண்டியருக்கோ திருவல்லையனுக்கோ வாய் திறந்து பேச நா எழவில்லை.

''பாவம், நீங்கள் என்ன செய்வீர்கள்!'' என்று எரிமலையாய்க் குமுறிய தமது உள்ளத்துக்கு அமைதி தேடுவதுபோல் கூறினார் சக்கரவர்த்தி. ''நீங்கள் கவலைப்படாதீர்கள். உன் நாட்டில் கலகம் விளைவிக்கும் அந்தத் துரோகி வீரசோழனுக்குக் காலம் முடிந்து விட்டது. உங்களுடன் நாங்கள் படைத் தலைவரை அனுப்பி வைக்கிறோம். நாட்டைப் பெற்று அதற்குப் புத்துயிரூட்டி வீறு பெற்றெழச் செய்யுங்கள். விஜயநகரத்தின் செல்லப் பிள்ளையாகத் தமிழ் நாடு வளர்ந்து கொண்டு, அதன் வலிமைக்கே சோதனை தருவதை இனியும் விஜயநகரத்தால் பொறுக்க முடியாது.''

பாண்டியர்களை அனுப்பிவிட்டு, அமைச்சர் சாளுவ நரசிம்மரை அழைத்து விசாரித்தார் சக்கரவர்த்தி.

''சோழ நாட்டின் பொறுப்புத் தங்களிடமிருந்ததே. வீரசோழன் இப்படிச் செய்யக் கூடியவன் என்பதை முன்பே தாங்கள் அறிந்திருக்கக் கூடுமே?''

சாளுவநரசிம்மர் கதி கலங்கிப் போனார். என்றாலும் தமது அதிர்ச்சியைக் காட்டிக்

கொள்ளாமல், "நான் தஞ்சையிலிருந்த வரையில் அவன் ஒழுங்காகத்தான் இருந்தான்; மேலும் நாம் அவர்களுடைய உள்நாட்டு ஆட்சியில் தலையிடக் கூடாது என்று இருந்து விட்டதால், ஆழ்ந்து நோக்கவும் தவறி விட்டேன்" என்றார் அந்தத் தவறுதலுக்கு அப்போது வருந்துபவர் போல்.

சக்கரவர்த்தி யோசனையில் ஆழ்ந்தார். அவரது விழிகள் விசுவநாதனையே உற்று நோக்கின.

"நாகம நாயக்கரையே படைகளுடன் பாண்டியருக்குத் துணையாக அனுப்புவோம். ஊருக்கொருவன் இருந்து கொண்டு அங்கே தலைக்குத் தலை அரசுரிமை கொண்டாடி வருகிறார்களாம். யாருக்குமே குடிமக்களின் நன்மையில் ஆர்வமில்லை என்று தெரிகிறது. தெற்கில் வலிமையான ஆட்சி நிலவினால்தான் நம்மால் வடக்குப் புயல் வீச்சைத் தடுத்து நிறுத்த முடியும். நாகம நாயக்கரே அதற்கு ஏற்றவர்" என்றார் சக்கரவர்த்தி.

"அவர் அங்கு சென்று விட்டால்?......"

"தளபதியின் பொறுப்பைச் சுமப்பது யார் என்கிறீர்களா?"

"நமது சாம்ராஜ்யத்து வலிமையின் அடிப்படையே அதன் பொக்கிஷத்தில்தான் இருக்கிறது. சக்கரவர்த்திகளே கவனிக்கக் கூடிய பொறுப்பாக இருப்பதால் அதை நாயக்கர் கவனித்து வந்திருக்கிறார். அவர் புறப்பட்டால்......"

"அவரைப் போல் நம்பிக்கையும் திறமையும் உள்ள வேறொருவர் வேண்டுமென்கிறீர்கள். என்னுடைய உயிர் காக்கும் மெய்க்காவலனாக இருந்தவனே, நான் உயிர்போல் காத்து வரும் பொருளுக்கும் காவலனாக இருப்பான்!" என்று சொல்லி விட்டு, "விசுவநாதா! நீதான் உன் தந்தை திரும்பி வரும் வரையிலும் நம்முடைய தளபதி!" என்றார்.

இதைக் கேட்டுத் திகைத்துப் போன விசுவநாதனுக்குப் பேசுவதற்கே நா எழவில்லை. ஒருபுறம் அச்சமும் மறுபுறம் ஆனந்தமும் அவனைச் சூழ்ந்து கொண்டன. வயதில் மிகவும் இளைஞனாகிய தனக்கு அவ்வளவு உயர்ந்த பதவியா!

"நீ பொறுப்போடு அதை நிறைவேற்றுவாய் என்று எனக்குத் தெரியும். சிக்கனத்துக்கும் நேர்மைத் திறனுக்கும் பெயர் பெற்ற உன் அப்பா இதையும் உனக்குக் கற்றுக் கொடுத்திருப்பார்."

"நன்றி சக்கரவர்த்திகளே!" என்று நாத் தழுதழுக்கக் கூறினான் விசுவநாதன்.

அரண்மனை அலுவல்கள் முடிந்து விசுவநாதன் தன் மாளிகைக்குப் புறப்படுவதற்காக வெளியில் வந்தான். அவனுக்காகக் காத்து நிற்பவர் போல் சாளுவநரசிம்மர் வாயிலில் தமது சிவிகையருகில் நின்று கொண்டிருந்தார்.

"முதலில் என் மாளிகைக்கு நீ வந்து விட்டுச் செல்!" என்று அவனை ஏறிக் கொள்ளச் சொல்லிவிட்டு, தானும் அவனருகில் அமர்ந்தார். "நாகமநாயக்கரையும் என் மாளிகைக்கு அழைத்திருக்கிறேன்; உங்கள் இருவருக்குமே இன்றைக்கு அங்கே விருந்து" என்று பூரிப்போடு கூறினார் அமைச்சர்.

விசுவநாதனுக்கு அமைச்சர் கூறிய விருந்தில் நாட்டமில்லையென்றாலும் அவன் எதிர்பார்த்து ஏங்கிய மற்றொரு விருந்து அவரது மாளிகையில் இருந்தது. லட்சுமியை ஒரு கணம் அவனால் காண முடியுமென்றாலும் அதுவே அவன் விரும்பிய பெருவிருந்து. குதூகலத்துடன் மனத்தைக் கனவுகளில் பறி கொடுத்தவாறு அவன் சிவிகையில் சாய்ந்து கொண்டான்.

தமது மாளிகைக் கூடத்தில் அவனைத் தனியே விட்டு விட்டு உள்ளே ஓட்டமும் நடையுமாகச் சென்றார் சாளுவநரசிம்மர். அரைநாழிகைப் பொழுதுக்கு மேல் அங்கு யாருமே வரவில்லை. உள்ளே அவர் பேச்சுக் குரல் மட்டிலும் கேட்டது. நடந்த நிகழ்ச்சிகளை அவர் உற்சாகத்துடன் யாரிடமோ கூறிக் கொண்டிருந்தார். மேலும் சிறிது நேரம் சென்றது. லட்சுமியைக் காண வேண்டுமென்று துடியாய்த் துடித்துக் கொண்டிருந்தான் விசுவநாதன். அலை பாய்ந்த மனத்தை ஒருநிலைக்குக் கொண்டு வருவதற்கு அவன் அரும் பாடுபட்டுக் கொண்டிருந்தான்.

முதலில் சதங்கை ஒலி கேட்டது. அடுத்தாற்போல் ரோஜாவின் நறுமணம் அந்தக் கூடத்துக்குள் புகுந்து அவனைக் கிறங்க வைத்தது. லட்சுமி நடப்பதையே ஒரு தனிக் கலையாகப் பயின்றிருந்தவள். மெல்ல நடந்து வந்தாள்.

"என் வாழ்த்துக்களை முதலில் ஏற்றுக் கொள்ளுங்கள்!" என்றாள் குயிலினும் இனிய குரலில்.

அவளுடைய விழிகளின் இந்தப் புத்தொளிக்காக, அவளது முகத்தில் படரும் இந்த நாணச் சிவப்புக்காக, அவளது குரலின் இந்த இனிமைக் குழைவுக்காக, அவளது மிடுக்கும் செருக்குமற்ற இந்த நளினமான நடைக்காக எத்தனை எத்தனை மாதங்கள் ஏங்கித் தவித்தவன் அவன்! அவள் தன்னை அலங்கரித்துக் கொண்டு வருவதற்காகவே இப்படித் தாமதம் செய்திருக்கிறாள் என்பதையும் அவன் கண்டு கொண்டான். அவனால் தன் விழிகளை அவள் முகத்திலிருந்து அகற்றவே முடியவில்லை.

"லட்சுமி!" என்று நீண்ட பெருமூச்சு விட்டான் அவன்.

லட்சுமி மெல்ல அவனருகில் வந்து ஆசனத்தில் அமர்ந்தாள். அவள் அமர்ந்திருந்த தோற்றம் ஏனோ அவனுக்குப் புத்தம் புது ரோஜா மாலை சரிந்து கிடக்கும் நினைவை ஊட்டியது.

"என்னை மன்னித்துக் கொள்ளுங்கள்!" என்றாள் குரல் தழுதழுக்க.

"எதற்காக?"

"இவ்வளவு நாட்கள் உங்களைத் தெரிந்து கொள்ளாமல் இருந்ததற்காக" என்றாள். "என் செருக்கால் உங்கள் மனத்தை நான் மிகவும் புண்படுத்தி விட்டேன்."

"அவ்வளவும் விழுப் புண்கள்!" என்று வெற்றிக் களிப்பின் பெருமிதத்தோடு கூறினான் விசுவநாதன். (தொடரும்)

"பத்து வருடங்களுக்கு முன்பு
... நினைவிருக்கிறதா? உங்கள்
திருமணத்தன்று என்னையும்
உங்கள் வாழ்க்கைத் துணையாகத்
தேர்ந்தெடுத்ததை?"



# ஹெர்குலிஸ்

வெறும் சைக்கிள் மட்டுமன்று; வாழ்நாள் முழுதும் உழைக்கும் ஓர் உறுதுணை



திருமண நாளின் இந்த பத்தாவது நினைவு நாள் ... ஹெர்குலிஸுக்கும் சரி, அதன் சொந்தக்காரருக்கும் சரி ... பெருமிதமூட்டும் நன்னாள்.

நீங்கள் ஒரு ஹெர்குலிஸ் சைக்கிள் வாங்கும்போது உங்கள் வாழ்க்கையுடன் அது ஒன்றிவிடுகிறது. ஆண்டுகள் செல்லச் செல்ல உங்கள் வாழ்க்கை மாறும் ... உத்தியோக உயர்வுகள் கிடைக்கும் ... உங்கள் குழந்தைகள் வளர்ந்து பெரியவர்களாவார்கள் ... மணம் புரிந்து வேறிடங்களில் புது வாழ்க்கை தொடங்குவார்கள். ஆனால் உங்கள் ஹெர்குலிஸ் எப்போதும் உங்களுடனேயே இருக்கும் — எப்போதும் நன்கு பணி புரிந்தபடியே இருக்கும்.

டி. ஐ. சைக்கிள்ஸ் ஆப் இந்தியா
அம்பத்தூர், மதராஸ் 53

உரிமையாளர்கள் :
டியூப் இன்வெஸ்ட்மென்ட்ஸ் ஆப் இந்தியா லிமிடெட், சென்னை

# கந்தன் கருணை

திருமுருக கிருபானந்த வாரியார்

## 56. மனம் இணங்கியது: மானம் பிணங்கியது!

சக்கரவாகப் பறவை வெட்டி வீழ்த்தப் பட்டதும், சூரபன்மன் அண்ட முகட்டை உரசும் உயரத்துக்கு மண் வடிவாக உருமாறினன். ஏழு கடல்களையும் வற்றச் செய்து கதிரவன் செல்லும் வழியையும் மறைத்தான். திக்குகளையெல்லாம் மூடினன். முருகக் கடவுள் ஏழு பாணங்களை விடுத்தார். அவை ஏழு கடல்களாகச் சென்று சூரபன்மனின் அம்மாய உருவை அழித்துக் கடல் வடிவம் மாறி முருகக் கடவுளை வந்தடைந்தன. சூரபன்மன் தண்ணீர் வடிவாகி விண்ணுலகத்தைத் தொடும் வண்ணம் எழுந்து நின்றான். முருகப் பெருமான் நூறு பாணங்களை விடுத்தார். அவை ஊழித் தீயின் வடிவம் எடுத்து நீரை உண்டு திரும்பின. சூரபன்மன் அனல் வடிவமாக அண்டங்களெல்லாம் தீயுமாறு வந்தான். எம்பெருமான் ஆயிரம் கணைகளை விடுத்தார். அவை பெருங்காற்று வடிவங் கொண்டு சூரபன்மனின் மாய அக்னியை அழித்து எம்பெருமானிடம் திரும்பி வந்து சேர்ந்தன. சூரபன்மன் சூறாவளியாகி மலைகள் பஞ்சுபோல் பறக்கும்படி ஆர்த்து நின்றான். ஆறுமுகக் கடவுள் இலட்சம் பாணங்களை விடுத்தார். அவை பாம்பு வடிவாய்ச் சென்று சூரனின் புது வடிவை விழுங்கி மீண்டன. (பாம்புகள் காற்றைப் புசிக்கும் என்பது ஒரு நம்பிக்கை.)

சூரபன்மன் நான்கு நாட்கள் வரையும் தொலையாது நின்று பலப் பல உருவங்களில் முருகப் பெருமானுடன் போர் புரிந்தான். மும்மூர்த்திகள் போல் வந்தான்; இந்திரன் போன்று வந்தான். இயமனைப் போன்று வந்தான். பேயைப் போன்று வந்தான்; கடல் போன்று வந்தான்; முகில் போன்று வந்தான்; இடி போன்று வந்தான்; நாகங்களாக வந்தான்; நஞ்சு போல் வந்தான்; மலைபோல் வந்தான்; சூரியனைப் போன்று வந்தான்; திக்கஜங்கள் போன்று வந்தான்; சிங்கம் போன்று வந்தான்; தாரகாசுரனைப் போன்று வந்தான்; சிங்கமுகனைப் போன்று வந்தான்; பானுகோபனைப் போல் வந்தான்; அக்கினிமுகாசுரனைப் போன்று வந்தான்; தருமகோபனைப் போல வந்தான்; இவ்வாறாக மாயமாகப் பற்பல உருவங்களையெடுத்த சூரபன்மன் யாண்டும் நிறைந்த முருகப் பெருமானைச் சூழ்ந்தான். இவ்வற்புதத்தைக் கண்ட தேவர்கள் மூலைக்கொருவராய் அஞ்சியோடினார்கள். ''பாணங்களே! நீங்கள் சென்று சூரபன்மன் மாயங்கள் அனைத்தையும் அழித்து வாருங்கள்'' என்று ஆறுமுகக் கடவுள் ஆயிரங் கோடி பாணங்களை விடுத்தார். அவை சூரபன்மன் எடுத்த ஒவ்வொரு வடிவத்துக்கும் தனித்தனியே ஏழு மடங்கு வடிவம் எடுத்து மாய வேஷங்களையெல்லாம் அடியோடு அழித்து மீண்டன.

மாய வேஷங்கள் யாவும் தீர்ந்த பின் சூரபன்மன் போர்க்களத்தில் பெருங்கோபத்துடன் தனித்து நின்றான்.

முருகப் பெருமான் அவனை நோக்கி, ''அறிவிலியே! அழியும் மின்னலைப் போன்று நீ எடுத்த மாய வேஷங்களையெல்லாம் நாம் அழித்தோம். அழியாத நமது பெரிய வடிவத்தை உன் தவத்தினால் நீ காண்பாயாக'' என்று விசுவரூபத்தைச் சூரபன்மனுக்குக் காட்டியருளினார். அதனைப் பார்ப்பதற்குரிய ஞானக்கண்ணையும் சூரனுக்குத் தந்தார்.

பகைவனுக்குப் பரமன் புரிந்த பேரருளைப் பாருங்கள். தமது மகத்தான சொரூபத்தினைத் திவ்விய தரிசனம் காட்டுகிறார். பாரதப் போர்க்களத்தில் பக்தனான பார்த்தனுக்குப் பரந்தாமன் விசுவரூபம் காட்டி அருளினார். முருகனோவெனில் எதிரிக்கு அந்த எழிற்கோலத் தரிசனம் தந்தருள் செய்கிறார்!

முருகப் பெருமான் விசுவரூபம் எடுத்த போது, கடல், உலகம், திசை, அண்டம், தேவர்கள், உயிர்கள் யாவும் அவரது திருமேனியில் அடங்கின. அந்தத் திருமேனியின் உள்ளடியில் மலைகளும், புறவடியில் கடல்களும், பாத விரல்களில் இடியும், நட்சத்திரங்களும், சிகரங்களும் அடங்கியிருந்தன. பரட்டில் வருணனும், குபேரனும், நிருதி அரக்கர்களும், கணைக்கால்களில் முனிவர்களும் சிந்தாமணி முதலிய மணிகளும் அடங்கியிருந்தன. முழந்தாளில் வித்தியாதரர் முதலியவர்களும், தொடையில் இந்திரனும், சயந்தனும், தொடைமூலத்தில் இயமனும், காலனும் அடங்கியிருந்தனர். அரையின் முற்பக்கத்தில் அசுரர்களும், விலாப்புறங்களில் தேவர்களும்,

மூலாதாரத்தில் நாகர்களும், குறியில் அமிர்தமும், நாபியில் உயிர் வர்க்கங்களும், மார்பில் சர்வ கலைகளும் உபவீதத்தில் ஞானமும் அடங்கியிருந்ததைக் கண்டான் சூரபன்மன். உரோமத்தில் அண்டங்களும், அங்கையில் சகல போகங்களும் அடங்கியிருந்தன. தோள்களில் திருமாலும், பிரமனும் அடங்கினர். கைவிரல்களில் தெய்வப் பெண்களும், கண்டத்தில் ஒலியின் கூட்டங்களும் அக்கினியும், வாயில் வேதங்களும், பற்களில் அட்சரங்களும், நாவில் சிவாகமங்களும், உதட்டில் ஏழுகோடி மகா மந்திரங்களும், நாசியில் வாயுவும், கண்களில் சூரிய சந்திரர்களும், காதுகளில் திக்குகளும் அடங்கியிருந்தன. நெற்றியில் பிரணவமும், தலையில் பரசிவமும் பொருந்தித் தோன்றியதும், அநந்த கோடி சூரியர்கள் ஒருங்கே கூடினாற் போல் பேரொளியுடன் கூடியதுமான ஒப்பற்றவிசுவரூபத்தைக் கண்டதும் சூரபன்மனின் அறிவு தெளிந்தது. அவன் பெரும் வியப்புற்றான்.

முருகப் பெருமானின் விசுவரூபத்தைக் கண்ட தேவர்கள், அத்திருவுருவத்தைக் கண்டு அஞ்சி நடுங்கினார்கள். ஆறுமுகக் கடவுள் தமது திருக்கரத்தை யமைத்து, ''அஞ்ச வேண்டாம்; அஞ்ச வேண்டாம்'' என்று திருவருள் புரிந்தார். தேவர்கள் உள்ளம் உவந்து தனித் தனியே போற்றி செய்து புகழ்ந்தார்கள்.

விசுவரூபத்தைக் கண்டு வியப்படைந்த சூரபன்மனுக்கு எம்பெருமான் சிறிது நல்லுணர்ச்சி தந்தருளினார். நல்லுணர்வு பெற்ற சூரபன்மன், 'அன்று தூது வந்த வீரவாகு தேவர், 'முருகனும் ஈசனும் ஒருவரே' எனக் கூறினாரே; அது முற்றிலும் உண்மை' என்று தெளிந்தான். 'முருகனைப் பாலன் என்று இகழ்ந்தேனே' என நொந்து கொண்டான். முருகப் பெருமான், தேவர்க்கும் மூவர்க்கும் முதலாய் நின்ற முழு முதற் பொருள் என்ற உணர்ச்சி உண்டாகியது.

''கோலமா மஞ்ஞை தன்னில்
குலவிய குமரன் தன்னைப்
பாலன் என்றிருந்தேன் அந்நாள்
பரிசிவை உணர்ந்தி லேனால்
மாலயன் தனக்கும் ஏனை
வானவர் தமக்கும் யார்க்கும்
மூலகா ரணமாய் நின்ற
மூர்த்தி இம்மூர்த்தி அன்றோ?

முருகப் பெருமானுடைய பெருமையை நினைந்து வியப்புற்று, முருகப் பெருமானின் அழகில் பரவசமடைந்தான் சூரபன்மன். தம்பி சிங்கமுகாசுரனும் இரணியனும் ''முருகன் பாலன் அன்று'' எனச் சொன்னது உண்மை என்று உணர்ந்தான். தனக்கு முருகப் பெருமான் ஞானக் காட்சி தந்தருளியது தவப்பயன் என்று புகழ்ந்து கொண்டான். ''விசுவரூபத்தில் உள்ள ஒளியும் சீரும் இளமையும் அழகும்



ஆகிய இவைகளெல்லாம் உலகில் வேறு யாரிடத்தில் உள்ளன! ஆகா! அற்புதத்தோடு பலகால் பார்க்கினும் இன்னும் என் பார்வையும் தெவிட்டவில்லையே! சமானமில்லாத இத்தனிப் பெருங் கடவுளுடைய விசுவரூபத்தை நோக்கி மிகவும் அஞ்சுவதன்றி தேவர்களுள்ளும் இதனைக் காண வல்லார் யார்? நான் அழியாத சிறந்த வரத்தைப் பெற்றுள்ளேன். ஆதலால்தான் காண்கின்றேன். நான் மன்மதனைப் பார்த்திருக்கிறேன். அவன் மிகுந்த அழகன் என்று எனக்குத் தெரியும். அவன் எரிந்து விட்டான். இவரது விசுவரூபத்தில் நான் ஆயிரங்கோடி மன்மதர்களைப் பார்க்கின்றேன்.

ஆயிர கோடி காமர்
  அழகெலாந் திரண்டொன் றாகி
மேயின எனினும் செவ்வேள்
  விமலமாஞ் சரணந் தன்னில்
தூயநல் எழிலுக்காற்றா தென்றிடில்
  இனைய தொல்லோன்
மாயிரு வடிவிற் கெல்லாம்
  உவமையார் உருக்க வல்லார்?

'மன்மதன் கருவேள்; இவரோ செவ்வேள். ஆயிரங் கோடி மன்மதர்களின் அழகைத் திரட்டி உருட்டியெடுத்தாலும் அது முருகப் பெருமானின் பாத நுனியில் தங்கும் அழகுக்கு ஈடாகாது' என எண்ணினான்.

முருகப் பெருமான் அழகே வடிவானவரன்றோ ?

எழுதரிய அறுமுகமும் அணிநுதலும்
  வயிரம் இடை
யிட்டுச் சமைந்தசெஞ் சுட்டிக்
  கலன்களும் துங்கநீள்பன்
னிருகருணை விழிமலரும் இலகுபதி
  னிருகுழையும்
ரத்னக் குதம்பையும் பத்மக் கரங்களும்
  செம்பொன்நூலும்
மொழிபுகழும் உடைமணியும் அரை
  வடமும் அடியிணையும்
முத்தச் சதங்கையும் சித்ரச்சிகண்டி
  யும் செங்கைவேலும்
முழுதும் அழ கியகுமர கிரிகுமரி
  யுடனுருகு
முக்கட் சிவன் பெறும்சற்புத்ர
  வும்பர்தம் தம்பிரானே

என்று அருணகிரிநாதர் பாடுகிறார்.

மனத்துக்கும் நோக்குக்கும் வாக்குக்கும் எட்டாத கடவுள், 'மனத்துக்கும் நோக்குக்கும் வாக்குக்கும் எட்டும் வடிவழகு உருவமாய்' வந்து விட்டார்!

வாசித்துக் காணொணாதது பூசித்துக்
  கூடொணாதது
வாய் விட்டுப் பேசொணாதது
  நெஞ்சினாலே
மாசர்க்குத் தோணொணாதது நேசர்க்குப்
  போரொணாதது
மாயைக்குச் சூழொணாதது விந்துநாத
ஓசைக்குத் தூரமானது மாகத்துக்
  கேறதானது
லோகத்துக் காதியானது கண்டு
  நாயேன்
யோகத்தைச் சேருமாறு மெய்ஞ்
  ஞானத்தைப் போதியாயினி
யூனத்தைப் போடிடாது மயங்கலாமோ?

சூரபன்மன் விம்மிதமடைந்தான். அந்தக் காட்சியைக் கோடிக்கணக்கான யுகங்கள் பார்த்தாலும் அவனது மனம் அடங்காது போன்றிருந்தது.

ஒற்றென முன்னம் வந்தோன்
  ஒருதனி வேலோன் தன்னைப்
பற்றிகல் இன்றி நின்ற
  பராபர முதல்வன் என்றே
சொற்றனன் சொற்ற எல்லாம்
  துணிபெனக் கொண்டிலேனால்
இற்றைஇப் பொழுதில் ஈசன்
  இவன்எனுந் தன்மை கண்டேன்

சூரபன்மன் யுத்தத்தில் சரணாகதி செய்யவில்லை. வீர லட்சணத்துக்கேற்றபடி உறுதியாகப் போர் புரிந்து வேறு விதத்தில் சரணாகதி செய்து பேறு பெற்றான்; போர் முடிவில் அவன் அழியவில்லை. சேவலும் மயிலுமாக ஆக வேண்டும் என்று பண்டைக் காலத்தில் தவம் செய்தவன் சூரபன்மன். அத்தவம் நிறைவு பெறுவதற்கே — சூர வடிவம் நீங்கி ஐயன் கைஆயுதம் பட்டுச் சேவலும் மயிலுமாவதற்கே— அவன் இனி போர் புரியப் போகிறான்.

தீயவை புரிந்தா ரேனும்
  குமரவேள் திருமுன் உற்றால்
தூயவ ராகி மேலைத்
  தொல்கதி யடைவர் என்கை
ஆயவும் வேண்டுங் கொல்லோ
  அடுசமர் இந்நாள் செய்த
மாயையின் மகனும் அன்றே
  வரம்பிலா அருள்பெற் றுய்ந்தான்.

சேறு படிந்த உடம்புடைய ஒருவன் நீரிற் படிவானாயின் அவன் உடம்பு தூய்மையுறும். அதுபோல் அகத்தில் ஆணவ மலச்சேறுடையவர்களும் ஞான தேசிகராகிய எந்தை கந்தவேள் திருமுன்னுற்றால் ஆணவச் சேறு நீங்கித் தூயவராகி மேலைத் தொல்கதியடைவர். இதனை ஆராய வேண்டா; சூரபன்மனே போதிய சான்று என்கின்

ஞர் கச்சியப்ப சிவாச்சாரியார். கொடிய வணுகிய சூரபன்மன் நெடிது போர் செய்து எல்லையில்லாத திருவருளுக்கு ஆளானுன்.

முருகப் பெருமானின் விசுவரூபத்தைக் கண்ட சூரபன்மனின் சினம் தணிந்தது. உரோமங்கள் பொடித்தன: கண்ணீர் பெருகியது: எலும்பு உருகியது; அன்பு பெருகியது. அகந்தை நீங்கி ஞானம் உண்டாகியது. க்ஷேமத்தைக் குறிக்கும் வகையில் அவனது வலப் புயமும் வலக் கண்ணும் துடித்தன. 'இது நான் செய்த தவப் பயனே யாகும்' என்று எண்ணிப் பெருமிதம் கொண்டான். ''அருட்கடலாகிய எம் பெருமான் என் மீது போருக்கு வந்திருக்கிருரே; அதற்கு என்ன நோக்கம் இருக்க முடியும்? இந்த மூடனுக்கு அருள் புரிய வேண்டும் என்ற கருணையினுல் வந்திருக்கிருர்'' என்று எண்ணினுன். 'நான் மிகுந்த பாக்கியசாலி. பரம்பொருளை நேருக்கு நேர் பார்த்த நான் சாதாரணமானவனு?' என்று இறும்பூது எய்தினுன்.

வான்காணு மறைகாணு மலரோன்
காணுன்
மால்காணுன் உருத்திரனும் மறித்துக்
காணுன்
நான்காணு இடத்தனைக் காண்போம்
என்று
நல்லோர்கள் நவில்கின்ற நலமே

கந்தப் பெருமானைத் தொழுதிட வேண்டும் என்று எண்ணினுன் சூரபன்மன். அவனுடைய மனம் வணங்கியது. ஆனுல் மானம் வணங்கவில்லை. தடுத்தது. அது ஒன்றே முருகவேளைத் தொழ விடாமல் அவனைத் தடுத்து விட்டது.

சூழுதல் வேண்டும் தாள்கள்
தொழுதிடல் வேண்டும் அங்கைத்
தாழுதல் வேண்டும் சென்னி
துதித்திடல் வேண்டும் தாலு
ஆழுதல் வேண்டும் நீமை
அகன்றுநான் இவற்கு ஆ ளாகி
வாழுதல் வேண்டும் நெஞ்சம்
தடுத்தது மானம் ஒன்றே

(தாலு — நாக்கு)

கச்சியப்பரின் வாக்குத் தித்திக்கிறது.

''வானுளோர் சிறையை நீக்கி
வள்ளலை வணங்கி யிந்த
ஊனுலாம் உயிரைப் போற்றி
அளியர்போல் உறுவன் என்னில்
ஆனதோ எனக்கிதம்மா ஆயிர
கோடி யண்டம்
போனதோர் புகழும் வீரத்
தன்மையும் பொன்றிடாவோ?'

''கூன், குருடு, செவிடு போன்ற ஊனங்கள் எல்லாம் இந்த உடம்போடு போய் விடும். ஆனுல் தன்மானம் இழந்து தவிப்பதால் ஏற்படும் விளைவு ஏழு ஏழு பிறப்புக்கும் தொடர்ந்து வரும்'' என்று சொல்லுகின்றுன் சூரபன்மன். ''நான் தன்மானம் இழந்து வாழமாட்டேன்'' என்று முன்பு அறிவுரை கூறிய இரணியவிடம் சொல்லி விட்டான்.

அந்தத் தன்மானம்தான் இப்போது சூரனை முருகனைத் தொழவொட்டாமல் தடுத்தது. (தொடரும்)



# சேவைக்கு ஒரு சகோதரி

மோனிகா ஃபெல்டன்

— அநுத்தமா





மூன்றாம் பாகம்

## விதவைகள் இல்லம்

### 1

**சு**ப்புலக்ஷ்மி மாநிலக் கல்லூரியில் இரண்டாவது ஆண்டைத் தொடங்கும் போது அவள் தகப்பனார் சைதாப்பேட்டையில் வேலை புரியவில்லை. ஏனெனில் அரசினர் விவசாயக் கல்லூரி கோயமுத்தூருக்கு மாற்றப்பட்டு விட்டது.

ஆயினும், அவர்கள் எழும்பூர் வீட்டை விட்டுவிடவில்லை. சுப்புலக்ஷ்மிக்கு மட்டும்தான் சென்னையில் வீடு தேவைப்பட்டது என்பதில்லை. அவளுடைய சிறிய தங்கைகள் இன்னும் படிக்க வேண்டியிருந்தது. முன்பு சுப்புலக்ஷ்மி சில மாதங்கள் வரை படித்த கோயமுத்தூர் பெண்கள் பள்ளியில் சொர்ணமும் நித்யாவும் போய்ச் சேர்ந்திருக்கலாம். ஆனால் அங்கிருந்த உபாத்தியாயினிகள் திறமை மிக்கவர்களல்லர். சுப்புலக்ஷ்மியைப் போல மற்றும் அநேக மாணவிகள் பன்னிரண்டு வயதை அடைவதற்கு முன்பே அப்பள்ளியை விட்டு விலகிவிட்டார்கள். தங்கைகள் இருவரும் நன்றாக ஆங்கிலம் பேசக் கற்றுக் கொண்டு தேர்ச்சி பெறவோ, கல்லூரியில் சேர்ந்து பட்டம் பெறவோ எண்ணினால் பி.டி. ஸ்கூல் ஒன்றுதான் அதற்குத் தகுந்த இடமாக இருந்தது.

விசாலாட்சி தன் கணவர் கூடவே கோயமுத்தூரில் கல்லூரி நடந்த சமயத்தில் குடும்பம் நடத்தினாள். எழும்பூரில் வீட்டைச் சித்தி நிர்வகித்துக் கொண்டாள். பெற்றோர் இருவரும் இயன்றவரையில் விடுமுறை நாட்களைத் தங்கள் பெண்களோடு கழிக்க வேண்டுமென்று தீர்மானித்திருந்தார்கள். ஆயின், எப்பொழுதுமே இது சாத்தியமாகவில்லை. 1909ம் வருடம் கிறிஸ்துமஸ் விடுமுறையின்போது சுப்பிரமணிய ஐயருடைய அலுவல்கள் அவரைக் கோயமுத்தூரிலேயே தங்கியிருக்கும்படி செய்து விட்டன.

அதன் விளைவுதான் மிஸ் லின்ச்சைச் (Miss Lynch) சந்தித்தது.

கிறிஸ்துமஸ் தினம் கழித்து ஓரிரு நாட்களுக்குப் பிறகு இளம் உபாத்தியாயினிகளின் கூட்டம் ஒன்று விவசாயக் கல்லூரியின் தோட்டத்தில் உல்லாச விருந்துக்காக வந்திருந்தது. அவர்கள் எல்லோரும் இந்தியர்கள் தாம். ஆனால் நான்கு வருஷங்களாக அந்த ஜில்லாவில் பெண் கல்விக்கு இன்ஸ்பெக்டராகப் பணியாற்றிய அவர்களுடைய தலைவி அயர்லாந்தைச் சேர்ந்த மாது. உயரமாக, கம்பிரமான அழகுடன் திகழ்ந்த அந்த மாது இந்தியாமீது கொண்டிருந்த பற்றுதலை அளவிட்டுச் சொல்ல முடியாது. ஒரு வித ஆவேசத்துடன் இந்நாட்டை விரும்பியவள் அவள். பெண்களின் முன்னேற்றத்தில் ஆர்வம் கொண்டவள். அவள் பெயர் கிரிஸ்டினா லின்ச்.

பேராசிரியர் சுப்பிரமணிய ஐயர், அவளுக்குக் கல்லூரியைச் சுற்றிக் காண்பிக்க முன்வந்தபோது அவள் மனமார்ந்த சந்தோஷத்தோடு அதை ஏற்றுக்கொண்டாள். அவர் விஷயமறிந்தவராகவும், எதையும் சிரத்தையுடன் கவனிப்பவராகவும், அதே சமயத்தில் நகைச்சுவை மிக்கவராகவும் விளங்கினார். மகிழ்ச்சியளிக்கும் விதத்தில் நல்லதொரு தோழனைப் பழகினார். இருவருக்கும் பொதுவாகப் பிடித்த விஷயங்களில் பேச்சுத் திரும்பியது. அவர்கள் இருவரும் மொட்டை மாடியை அடைந்து, கைப்பிடிச் சுவரின் மீது சாய்ந்து நீலகிரி மலையின் அடிவாரத்தை நோக்கியபடி நின்று கொண்டிருந்தபோது, இவரிடம் தான் உண்மையிலேயே மனம் திறந்து பேசலாம் என்று மிஸ் லின்ச் உணர்ந்தாள்.

இந்திய ஸ்திரீகளுக்கும், பெண்களுக்கும் கல்வி வசதிகள் மிக மிகக் குறைவாகத்தான் கிடைத்தன என்று இந்தியாவுக்கு வருவதற்கு முன்பே தான் ஓரளவு உணர்ந்திருந்ததாகக் கூறினாள் அவள். ஆயின், 1905ம் வருஷம் ஆகஸ்ட் மாதம் இன்ஸ்பெக்டர் வேலையை ஏற்றுக் கொண்டு கோயமுத்தூரில் அரசினர் உயர்தரப் பயிற்சிப் பள்ளியைப் பார்வையிடப் போன போதுதான் இந்தியப் பள்ளி ஆசிரியைகள் அந்த வேலைக்கு எவ்வளவு தகுதி இல்லாதவர்களாக இருந்தனர் என்று அவளுக்குத் தெரிந்ததாம். உபாத்திமை வேலைக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள், தாழ்த்தப்பட்ட வகுப்பினர். அவர்களிடம் படிக்கும் மாணவிகளோ அவர்களைவிட உயர் ஜாதியினராகக் கருதப்பட்டனர். மாணவிகள் வளர்ந்து வந்த சமூகத்துக்கு ஏற்றபடி கல்வி அளிக்க இவர்களுக்குப் போதிய பண்பாடு இருக்கவில்லை. முக்கால்வாசி ஆசிரியைகள் 'அரிசிக் கிறிஸ்துவர்கள்'- ஹரிஜனங்களாக இருந்து மதம் மாற்றப்பட்டவர்கள். அவர்கள் ஐரோப்பியர்களின் வழிகளை அரை குறையாகக் காப்பியடித்தனர். இந்திய சம்பிரதாயங்களில் அவர்களுக்கு விருப்பமில்லை. ஏன், அவற்றை வெறுக்கக்கூடச் செய்தார்கள். இந்தியாவினுடைய புராதனப் பண்பாடுகளில் நல்ல உயர்ந்த அம்சங்களைக் காப்பாற்றுவதின் முக்கியத்துவத்தை அவர்களால் புரிந்து கொள்ள முடியவில்லை. இந்தியப் பெண்கள் வழி வழி வந்த தங்களுடைய இயல்புகளை மாற்றிக்கொள்ளாமலிருந்து, மேனாட்டுக் கல்வியில் உள்ள நன்மைகளை மட்டும் பெற வேண்டுமானால், ஆசிரியைகள் அதற்கு ஏற்றாற்போல் அமைய வேண்டும். தங்களுடைய மாணவிகளைப் போலவே இவர்களும் இந்தியப் பண்பாடுகளை மதிக்கும் நல்லதொரு சூழ்நிலையில் பிறந்து வளர்ந்தவர்களாய் இருக்க வேண்டும். தங்கள் மாணவிகள் எந்த நம்பிக்கைகளுக்கு வாரிசுகளாயிருந்தார்களோ, எந்தப் பண்புகளை உயர்வாக மதித்தார்களோ, அந்த நம்பிக்கைகளிலும் பண்புகளிலும் இவர்களும் பங்கு பற்ற வேண்டும். இந்த நிலை உருவானால்தான் இந்நாட்டில் உண்மையாகவே பெண் கல்வி மேன்மையுறும்.

எல்லாப் பெண்களும் கல்யாணம் செய்து கொண்டு குடும்பம் நடத்தத் தொடங்கிவிடும் ஒரு சமூகத்தில் இவ்வாறு சிறந்த ஆசிரியைகளாக வரக்கூடிய பெண்கள் எங்கு கிடைக்கப் போகிறார்கள் என்று வெகு நாட்களாகத் தான் ஆழ்ந்து ஆலோசித்து வருவதாகப் பேராசிரியரிடம் மிஸ் லின்ச் கூறினாள். இந்தியாவுக்கு அவள் வந்து முதல் ஆண்டு முடியும் தறுவாயில் அவள் உள்ளத்தில் அதற்கு ஒரு வழி பளிச்சிட்டது. 1901ம் வருடம் ஸென்ஸஸ் கணக்குப்படி சென்னை ராஜதானியில் மட்டும் ஐந்து முதல் பதினைந்து வயது வரை உள்ள 22,395 பிராமண விதவைகள் இருந்ததாகத் தெரிந்தது. இவர்களில் ஒரு சிறு பகுதியினரையேனும் அவர்களுடைய சூழ்நிலையிலிருந்து காப்பாற்றிப் படிக்க வைத்து ஆசிரியைகளாக விளங்கப் பயிற்சியளித்துவிட்டால், கல்வித் துறையில் ஒரு புதிய சகாப்தமே ஆரம்பமாகிவிடும் என்று அவள் அபிப்பிராயப் பட்டாள்.

பேராசிரியர் சுப்பிரமணிய ஐயர் குறுக்கே பேசாமல், மிக உன்னிப்பாகக் கேட்டுக் கொண்டிருந்தார். மிஸ் லின்ச் தொடர்ந்து சொல்லிக் கொண்டே போனுள். ஆசிரியைத் தொழிலுக்குப் பயிற்சி பெற விரும்பும் இளம் பிராமண விதவைகளுக்குச் சர்க்கார் உதவியுடன் ஓர் இல்லம் நடத்தத் திட்டம் ஒன்று வகுத்திருந்தாளாம். கோயமுத்தூரில் உள்ள பிராமணப் பெரியார்களில் முற்போக்கான சிலர் இந்தத் திட்டத்தில் சிரத்தை காட்டினுர்கள். தங்கள் இனத்தைச் சேர்ந்த ஆசாரம் பார்க்கும் அதிதீவிரவாதிகள் அவளுடைய திட்டத்தைக் கடினமாகத் தாக்குவார்கள் என்று எச்சரித்தும் இருந்தார்கள் அந்த முற்போக்காளர்கள். ஆயினும் அவர்கள் மிஸ் லின்ச்சின் இந்த எண்ணத்தை ஆமோதித்தது மாத்திரமல்லாமல் சென்னை சர்க்காருக்குச் சமர்ப்பிக்க வேண்டிய விண்ணப்பத்தை எழுதுவதற்கும் உதவினுர்கள்.

1908ம் வருஷம் பிப்ரவரி மாதம், அதாவது சுமார் இரு வருஷங்களுக்கு முன் அரசினரிடம் இத் திட்டம் சமர்ப்பிக்கப்பட்டதாக அந்த அம்மாள் கூறினுள். இதுவரை அதுகுறித்து எந்த ஒரு முடிவும் எடுக்கப்படவில்லை. இந்தியாவில் எதுவுமே ரொம்ப ரொம்ப நிதானமாகத்தான் நடக்கும்; அனுவசியக் காலதாமதமாகும் என்பதை மிஸ். லின்ச் அறிவாள். அவள் பொறுமையோடிருக்க முயன்றுள்; முயன்றும் வந்தாள்! அவள் அவசரப்படுவதும் பேராவல் கொண்டிருப்பதும் தான் எதையோ சாதித்துவிட வேண்டும் என்பதற்காக அல்ல. இந்தியாவில் வளர்ந்து வரும் இளம் பெண்கள் நல்ல கல்வி அறிவு பெற்று, வாழ்க்கையில் பயனுள்ளவர்களாகத் திகழ வேண்டுமே என்பதில்தான் அவள் ஆர்வம் காட்டினுள். அந்தச் சிறுமிகள் இப்போது அந்த வாய்ப்பை இழக்க நேரிட்டால் பின்னுல் என்றைக்கும் கிட்டாதே அது என்பதினுல் அவள் அவசரப்பட்டாள்.

அப்போதுதான் மெதுவாகப் புன்னகை புரிந்து கொண்டே சுப்பிரமணிய ஐயர் அவள் சிறிதும் எதிர்பாராத விதமாக அவளுக்குச் சந்தோஷமும் வியப்பும் அளிக்கும் அந்தத் தகவலைக் கூறினுர். அவளால் முதலில் அவர் கூறியதை நம்பவே முடியவில்லை. மிஸ் லின்ச்சைப் போலவே சிந்தித்து, அதே போன்ற லட்சிய நோக்கங்களைக் கொண்ட ஒரு விதவைப் பெண் தனக்கு இருப்பதாகவும், அவள் தற்போது மாநிலக் கல்லூரியில் பி. ஏ. வகுப்பில் படித்துக் கொண்டிருப்பதாகவும் அவர் கூறிய போது மிஸ் லின்ச்சினுல் தன் காதுகளையே நம்ப முடியவில்லை. இருந்தாலும் அவரிடம் சந்தேகப்படவும் ஹேது இல்லை. அவர் எவ்வளவோ ஆபத்துக்களுக்குத்துணிந்து தமது பெண்ணின் நலனுக்காகப் பாடுபடுவதை அவள் உணர்ந்தாள். அவ்விதம் தான் உணர்ந்ததாக அவள் பிரிதொரு சந்தர்ப்பத்தில் எழுதியும் இருக்கிருள். இவ்வளவு புரட்சிகரமான செய்கை சாதாரணமாக அந்தக் கைம் பெண்ணின் தகப்பனுருக்கு மட்டுமல்ல, குடும்பத்துக்கே ஜாதிப் பிரஷ்டத்தைத் தேடித் தந்திருக்கும். பேராசிரியர் சுப்பிரமணிய ஐயர் நல்ல தைரியசாலி என்பது தெள்ளெனத் தெரிந்தது. தமது கருத்துக்களை ஒப்புக் கொள்ளாதவர்கள்கூடத் தமக்கு மதிப்புத் தரும் வகையில் நடந்து கொள்ளும் திட சித்தம் அவருக்கு இருந்தது என்பதும் புரிந்தது.

மிஸ் லின்ச்சுக்குப் பல காரணங்களால் அளவுக்கு மீறிய சந்தோஷம். முதன் முதலில் இந்தத் திட்டம் அவளுக்குத் தோன்றியதிலிருந்தே ஒரு சந்தேகமும் இருந்து கொண்டு வந்தது. ஓர் அந்நிய நாட்டினள் தனியாக இந்தத் திட்டத்தை எவ்வாறு நிறைவேற்ற முடியும்?

பிராமணக் குலத்தினரே தனக்கு உதவ முன்வருவார்கள் என்ற உறுதி



கணவர்: இந்தச் சமாசாரம் உனக்குத் தெரியுமோ! நம்ம வீட்டில் வெகு நாளாகத் தொல்லை கொடுத்த அந்தப் பெரிய எலி இறந்துவிட்டது! எனக்கு இதிலே என்ன வருத்தம்னு, வீட்டில் இரண்டு பூனை செல்லமாக வளர்த்துண்டு ஒரு எலி 'ஹார்ட் அட்டா'க்னுலே செத்துப் போனதை நினைச்சா எனக்கு ரொம்ப வெட்கமா இருக்கு!

மொழியைப் பெறாத போது எப்படி இந்தக் காரியத்தைச் சாதிக்க முடியும்? அவர்கள் தங்கள் குலத்தைச் சேர்ந்த படித்த விதவைகளில் ஒருத்தியை இக் காரியத்துக்குக் கொடுத்து உதவ வேண்டும். அவள் தன்னுடைய வாழ்க்கைக் குறிக்கோளாக இதைக் கருதி முழு மனத்துடன் உழைக்க வேண்டும். 'இவை யெல்லாம் எங்கே நடக்கப் போகின்றன' என்று அவள் தனக்குத் தானே கேட்டுக் கொண்டிருந்தாள்.

ஆனால் இப்போது அந்தப் பிரச்னைக்குப் பதில் கிடைத்து விட்டது. சுப்புலக்ஷ்மி பட்டம் பெற்றவுடனே அவளைத் தான் சந்திக்க வேண்டும். இதற்குள் அரசாங்கமும் தன் திட்டத்துக்குச் சம்மதத்தை அளித்துவிடும் என்று மிஸ் லின்ச் சந்தேகமற நம்பினாள். அரசாங்க அனுமதி கிடைக்கு முன்பே தானும் தன் இளம் கூட்டாளியும் சேர்ந்து இந்த நல்ல காரியத்தைத் தொடங்க வேண்டியிருந்தாலும் அவ்வாறு செய்து முன்னேறலாம் என்று அவள் உறுதி கொண்டாள்.

ஆனால் உண்மையில் இந்த 'ஆரம்பம்' சுப்புலக்ஷ்மியின் கடைசிக் கல்லூரி வருஷத்திலேயே நிகழ்ந்து விட்டது. அதுவும் மிஸ் லின்ச்சின் உதவி இன்றியே; சென்னை சர்க்காரின் ஆதரவும் இல்லாமலேயே! பேச்சுவாக்கில் ஆரம்பிக்கப்பட்ட மிகவும் சிறிய தொடக்கம் அது. எல்லோருடைய மனத்திலும் அவ்வாறு ஓர் அபிப்பிராயம் ஏற்கனவே நிலைத்து நின்றிருக்கா விட்டால் இது ஏதோ யதேச்சையாக நேர்ந்த ஒரு தொடக்கம் என்றே கூறலாம்.

ஒரு நாள் காலை விசாலாட்சி கோயமுத்தூரில் தன் வீட்டில் வேலையில் ஈடுபட்டிருந்தபோது, அங்கு ஒரு புதிய மனிதர் அவளைப் பார்க்க வந்தார். அவர் உட்கார்ந்திருந்த அறையில் அவள் சென்று நோக்கிய போது, முதலில் இதற்குமுன் அவரைப் பார்த்ததாகவே அவளுக்கு நினைவு வரவில்லை. அவர் இரு கைகளையும் கூப்பி 'நமஸ்காரம்' என்று கூறிய போதுதான், அவர் கணிதப் பேராசிரியர் என்றும் அவர் வீட்டில்தான் எட்டாண்டுகளுக்கு முன்பு எர்ணாகுளத்தில் தானும் தன் கணவரும் சுப்புலக்ஷ்மியும் விருந்தினராகத் தங்கியிருந்தார்கள் என்பது அவளுக்கு ஞாபகம் வந்தன.

அவர் மிகவும் மூப்படைந்தவராகத் தோற்றமளித்தார். விசாலாட்சி காப்பி கொண்டு வந்து வைத்து அருந்துமாறு கோரியபோது, அவர் தோற்றம் ஒரு தினுசாக, நரம்புத் தளர்ச்சியில் கஷ்டப்படுகிறவர் போல், தென்பட்டது. அவர்கள் க்ஷேமலாபங்களைப் பேச ஆரம்பித்தவுடனேயே அவர் திடீரென்று, "என் சிறு பெண் அம்முக் குட்டியை நினைவிருக்கிறதா?" என்று கேட்டார்.

"நன்றாக நினைவிருக்கிறதே!" என்று விசாலாட்சி பரிவோடு பதிலளித்தாள். அம்முக்குட்டி மிகவும் அசாதாரண அழகு வாய்ந்த குழந்தை. அவளது சுறுசுறுப்பான, இனிமையான முகம் யாராலும் மறக்க முடியாதது. அப்போது குழந்தைக்கு வரன் தேடுவதில் சிரமம் இருந்ததும் அவளுக்கு ஞாபகம் வந்தது. "அவள் சௌக்கியமாகவும், சந்தோஷமாகவும் இருக்கிறாள் அல்லவா?" என்று விசாலாட்சி கேட்டாள்.

"எவ்வளவு சௌக்கியமாக இருக்க முடியுமோ அவ்வளவு சௌக்கியமாக இருக்கிறாள் என்றுதான் சொல்ல வேண்டும். ஆனால் சந்தோஷத்துக்கும் அவளுக்கும் மட்டும் வெகுதூரம்." அவர் சுற்றுமுற்றும் பார்த்தார். ஒரு விநாடி கழித்து, "அவளை உங்களிடம் அழைத்து வந்திருக்கிறேன். அவளுக்கு நீங்கள் ஏதாவது உதவி செய்ய முடியும் என்று நம்பி யிருக்கிறேன்" என்றார்.

ஏதோ மாயாஜாலத்தில் தோன்றியவள் போல் அச்சிறுமி திடீரென்று தன் தந்தையின் அருகில் வந்து நின்றாள். அவள் கதவுக்குப் பின்னால் தன் தகப்பனாரின் அனுமதிக்காக மறைந்து நின்று காத்துக் கொண்டிருந்திருக்க வேண்டும்.

சற்று முன்னால் அவள் தகப்பனார் அவளைப் பின்னோடு அழைத்து வந்திருப்பதாகக் கூறியிருக்கா விட்டால், விசாலாட்சிக்கு அவளை அடையாளம் கண்டு கொள்ளவே முடிந்திருக்காது. அம்முக் குட்டிக்கு இப்போது வயது பதினெட்டு. நன்கு உயர்ந்திருந்த போதிலும் பரிதாபப்படும் அளவு மெலிந்தும் இருந்தாள். ரவிக்கை போடாமல் வெள்ளைப் புடவை மட்டும் உடுத்தியிருந்தாள். அவளது அழகான கண்கள் அழுதழுது சிவந்து வீங்கி யிருந்தன. கிழவியைப் போல அவள் கன்னங்கள் ஒட்டி உலர்ந்திருந்தன. அவள் கேசம் வழிக்கப்பட்டு விடவில்லை. ஆனால் தலை எண்ணெயைக் கண்டு பல மாதங்கள் ஆகியிருக்க வேண்டும். தலை மயிர் காய்ந்து, சடை பிடித்துத் தொங்கிக் கொண்டிருந்தது.

"ஆமாம், இவள் கணவனை இழந்து தான் விட்டாள்!" என்று பேராசிரியர் மிகுந்த வருத்தத்தோடு பேசத் தொடங்கினார். (தொடரும்)




## அத்தியாயம் 48

# அபயக் குரல்!

"இன்னு, தொரை! 'பாரு'க்குப் போனப்ப நீயும் ஒரு 'பெக்' போட்டுக்கிட்டு வந்துட்டியா?" என்று கிண்டலாகக் கேட்டான் மருதமுத்துவின் அந்தரங்கக் காரியதரிசியான கறுப்பண்ணன்.

கையிலிருந்த தட்டைக் கீழே போடாத குறையாகப் பதறித் தடுமாறிய சபேசன் எப்படியோ தன்னைச் சமாளித்துக் கொண்டு போய் மேசைமேல் வைத்து விட்டுச் சரேலென வராந்தாவுக்கு வந்தான்.

அவன் உடலிலும் உள்ளத்திலும் ஏற்பட்ட நடுக்கம் இன்னும் அடங்கவில்லை. விநாடிக்கு விநாடி அது மிகுதியாகவே செய்தது. 'என்ன விந்தை! இவர்களோடு இந்தப் பெண் ஏன் வந்திருக்கிறாள்?' — அவனுக்கு ஒரே குழப்பமாகி விட்டது. ஒருவித பயமும் பிடித்து உலுக்கியது. அத்துடன் தன்னை மீறி எழுந்த கோபம், வெறுப்பு, அருவை, அநுதாபம் எல்லாம் சேர்ந்து அவனைக் குலுக்கிக் கலக்கின. நெருப்பின் மேல் நிற்பவன்போல் பரபரத்துக் கொண்டு வராந்தாவில் அப்படியும் இப்படியுமாக நடமாடிய அவன், பாதித் திரையிட்ட சன்னல் வழியே அறையினுள் எட்டிப் பார்த்தான். வேதாவின் குனிந்த தலையை மட்டுமே அவனால் காண முடிந்தது.

முதலில் 'குளித்து' விட்டுப் பிறகு குளிப்பதா? அல்லது குளித்து விட்டு வந்து 'குளிப்பதா?' — என்ற விஷயமாக அம்மூவருக்கிடையே அப்போது பலத்த வாக்குவாதம் நடந்து கொண்டிருந்தது. ஒரே சிரிப்பு, கிண்டல், சுரொட்டான சொற்பிரயோக அரட்டை!

சபேசனால் அதையெல்லாம் காது கொடுத்துக் கேட்கவே முடியவில்லை. 'பெரிய அரசியல்வாதி; மேடையேறிப் பிரசங்கம் பண்ணுகிறவர்; அவருடைய பேச்சைக் கேட்க மக்கள் ஆயிரக்கணக்கில் கூடுகிறார்கள். ஆகா என்று கை தட்டி ஆர்ப்பரிக்கிறார்கள். அவர் சொற்படி நடக்கச் சித்தமாகிறார்கள், வாழ்த்துகிறார்கள், வணங்கு

கிறார்கள், மரியாதை செலுத்துகிறார்கள், மலர் மாலை சூடுகிறார்கள்; தங்கள் 'வாழ்வையே சிலர் பணயம் வைக்கவும் முன் வரத் துணிகிறார்கள். அப்படிப்பட்ட ஒரு ஜன நாயகரின் அந்தரங்க நடவடிக்கையோ? எத்தனை கேவலமாக, எவ்வளவு மோசமாக இருக்கிறது!' — அவன் மனம் எரிமலையாகக் குமுறியது.

ஏழாம் நம்பர் அறையிலிருந்து 'அழைப்பு மணி' அடித்தது. ஆனால் அது சபேசனின் காதில் மறுமுறை அலறியபோதுதான் கேட்டது. கால்கள் பின்னுக்கு இழுக்கத் தட்டுத் தடுமாறியபடி ஓடினான்.

அந்த அறையில் கடந்த ஒரு வாரமாக மூன்று பேர்கள் தங்கி யிருக்கிறார்கள். அவர்கள் மூவரும் திரைப்படப் பிரமுகர்கள். ஒருவர் டைரக்டர்; இன்னொருவர் கதை வசன கர்த்தா; மற்றொருவர் இவ்விரண்டு பேருக்கும் தாசாது தாசராக விளங்கிய புதுப் பட நிறுவனமொன்றின் முதலாளி.

அவர்கள் தாம் எடுக்கவிருந்த படம் ஒன்றுக்குத் தேவையற்ற தேவையான 'ஸ்டோரி'யைப் பற்றி 'டிஸ்கஷன்' நடத்துவதற்காக வந்து தங்கியிருக்கிறார்கள். ஆனால் அந்த 'டிஸ்கஷ'னைத் தவிர மற்றதெல்லாம் அங்கு தாராளமாகத் தவறாமல் நடந்துகொண்டிருந்தன!

''ஏ, பாய்! ஒன் பாக்கெட் கோல்டு ஃபிளேக்! பிரிங், குய்க்லி!''

கதாசிரியர் கட்டளையிட்டார். அவருக்கு 'ஸ்டோரி' எழுதுகிற 'மூட்' வந்து விட்டதோ என்னவோ! அம்மூன்று பேரும் சேர்ந்து ஊதிச் சாம்பலாக்கிய சிகரெட்டுத் துண்டுகள் தரையில் ஆங்காங்கே பரவலாக விழுந்து கிடந்தன.

ஒரே ஓட்டமாகக் கீழே இறங்கி ஓடிச் சிகரெட் வாங்கிக்கொண்டு வந்து கொடுத்து விட்டு அதே வேகத்தில் திரும்பிப் போய்ப் பதினைந்தாம் நம்பர் அறைக்கு வெளியே நின்று கொண்டான். அவனுக்கு ஏனோ அங்கிருந்து அப்படியிப்படி நகர்ந்து செல்லக் கூட மனம் ஒருப்படவில்லை.

ரூம் நம்பர் பதினைந்தின் பிரமுகர்கள் கடைசியாகத் தமக்குள் ஒரு சமரச முடிவுக்கு வந்தனர். முதலில் போய்க் குழாய்த் தண்ணீரில் குளித்துவிட்டு வந்து, பிறகு பாட்டில் தண்ணீரால் ஸ்நானம் பண்ணலாம் என்ற முடிவே அது !

ஆனால் அதிலும் ஒரு பெரிய 'பிரச்னை' அவர்களிடையே எழுந்தது. 'யார் முதலில் குளிக்கப் போவது?' — தலைவர் மருதமுத்துதான் இதில் முந்திக்கொண்டார்; மற்றிருவரும் அவருக்கு விட்டுக் கொடுத்து விட்டனர். காரியதரிசிகளாயிருப்பவர்கள் இந்த அளவுக்குக்கூட ஒத்துப் போகவில்லையென்றால் அப்புறம் தலைவருக்குத்தான் என்ன மதிப்பு? மேலும் இந்த 'உல்லாசப் பயணத்'துக்கான செலவுப் பணம் முழுவதும் தலைவரின் ஜேபியிலிருந்து அல்லவா வந்துகொண்டிருக்கிறது !

உள்ளேயே இருந்த குளியலறைக்குப் போனார் மருதமுத்து. அவர் போன சற்றைக்கெல்லாம், ''டேய், தடிப் பசங்களா! ரெண்டு பேரும் இப்படி வாங்கடா, முதுகைக் கொஞ்சம் தேய்ச்சு விடுங்க!'' என்று குரல் கொடுத்தார். தாம் இல்லாத சமயத்தில் அவர்களை அந்த அறையில் தனியாக விட்டு வைக்க அவருக்குப் பயமாயிருந்தது போலும். பாம்புக்குத்தானே பாம்பின் காலடி தெரியும்?

கறுப்பண்ணனும் செங்கோடனும் ஏதோ தம்முடைய மதிப்பு, கௌரவமெல்லாம் பறிபோய் விட்டாற்போல் ஒருவரையொருவர் பார்த்து முகத்தைச் சுளித்துக் கொண்டனர். குளியலறையிலிருந்த தலைவர் மறுபடியும் என்ன நினைத்துக்கொண்டாரோ தெரியவில்லை. ''சரி, சரி; வேண்டாம். நானே தேய்த்துக் கொள்கிறேன். நீங்கள் ரெண்டு பேரும் கீழே போய் ஹோட்டல் மானேஜர் கிட்ட, இன்றைய ஓட்டத்திலே 'எது' ரொம்ப 'ஹோப்'பிலே இருக்குதுன்னு விசாரிச்சுப் பாருங்க. அதோடுகூட ஒரு 'டிப்ஸ்' புஸ்தகமும் வாங்கிக்கிட்டு வாங்க.''

உற்சாகமடைந்த கறுப்பண்ணன் வெகு அமர்த்தலாக சிகரெட்டைப் பற்ற வைத்துக்கொண்டு வெளியே சென்றான். அவனோடு செல்லக் கிளம்பிய செங்கோடன் சட்டென்று திரும்பி, ''இன்னா, டீச்சர்! வந்ததிலேயிருந்து நின்னுக்கிட்டே இருக்கிறியே? சும்மா, கட்டில் மேலே உட்காரு! பயப்படாதே !'' என்றான் குறும்பாக.

புயலில் சிக்கிய பூங்கொடிபோல் நடுநடுங்கி நின்ற வேதா தன்னிடமிருந்த தைரியத்தையெல்லாம் வரவழைத்துக்கொண்டு மெல்லத் தலை நிமிர்ந்து, ''என்ன, சார் ! என்னை ஏன் இங்கே அழைத்து வந்தீர்கள்?...'' என்று குமுறிக் கேட்டாள்.

''அடடே! இன்னா டீச்சர், இப்படிக் கேட்டு விட்டே? தலைவர் உனக்காக எவ்வளவு பணம் செலவழிச்சு 'இண்டர்வ்யூ'க்காக உன்னை இங்கே அழைச்சு வந்திருக்கிறார், தெரியுமா ? அதுக்குள்ளாற ரொம்ப அர்ஜண்ட் படறியே!'' என்றான் செங்கோடன் விஷமப் புன்னகையுடன்.

''இண்டர்வ்யூவா?...... இங்கேயா?..... எப்போது?''

''கவலைப்படாதே! சாயந்திரத்துக்குள் நடந்து விடும். ஆபீஸர் வரவேண்டாமா ?''

''ஆபீஸரா?......''

''ஆமாம்; உன் டீச்சர் வேலைக்கு ஆர்டர் கொடுக்க வேண்டிய ஆபீஸர் இந்த ஊரிலே ஒரு காரியமா வந்திருக்கிறார். அவரை இங்கேயே மீட் பண்ணி விஷயத்தை முடிச்சுடலாம்னு நம் தலைவர் திட்டம் போட்டிருக்கிறார். களைப்பாக இருந்தால் கொஞ்ச நேரம் படுத்து எழுந்திரு.'' — இவ்வாறு சொல்லிக்கொண்டே செங்கோடன் கறுப்பண்ணனைப் பின்தொடர்ந்தான்.

இவ்வளவையும் கேட்டுக் கொண்டு வராந்தாவில் நின்ற சபேசனுக்கு ஒன்றுமே புரியவில்லை. குழம்பிக் கிடந்த அவன் மூளை இதனால் மேலும் குழம்பவே செய்தது. சுற்றுமுற்றும் பார்த்துக்கொண்டு சன்னல் அருகில் போய் நின்று மெல்ல உள்ளே எட்டிப் பார்த்தான். அதே சமயம், வேதாவும் தலை நிமிர்ந்து அவனைப் பார்த்தாள். மறுகணம் அவள் முகம் பேயறைபட்டது

# மூல நோயை

முற்றவிடாமல்
நம்பிக்கையான

# ஹெடன்ஸா

உபயோகித்து
நிவாரணம் அடையுங்கள்
—ரண சிகிச்சையையும்
தடுங்கள்

பொறுக்க முடியாத வலியா! தாங்க முடியாத அரிப்பா! எரிச்சலெடுக்கும் உணர்ச்சியா! ரத்தக் கசிவா! உடனடியாக சிகிச்சை செய்யத் தாமதி யாதீர்கள்! அலட்சியம் செய்தால், நோய் முற்றி ரணசிகிச்சை செய்ய வேண்டிவரும். 108 தேசங் களிலுள்ள டாக்டர்களால் சிபாரிசு செய்யப்பட்ட, நம்பிக்கையான ஜெர்மன் மூலநோய் களிம்பு ஹெடன்ஸா உபயோகித்து இப்பொழுதே நிவா ரணம் பெறுங்கள்! ஹெடன்ஸா வலியையும் அரிப்பையும் சீக்கிரம் நிறுத்தி, மலப் பிரவிருத்தி யைச் சுலபமாக கஷ்டமில்லாமல் செய்கிறது. முக்கியமாக, ஹெடன்ஸாவிலுள்ள சக்திவாய்ந்த மருந்துப் பொருள்கள் நீடித்த நிவாரணமளிப்ப தோடு, வெடிப்புகளைச் சுருங்கச் செய்து, ஆரோக் கியமான தசைகளை வளர்க்கிறது. மூலநோய்க்குக் காலாகாலத்தில் ஹெடன்ஸா உபயோகித்தால் பிற்காலத்தில் ரணசிகிச்சை செய்யவேண்டிய நிலை ஏற்படாது என்பது ஞாபகமிருக்கட்டும்.

**ஹெடன்ஸாவில் உணர்வழிக்கும் மருந்துகள் ஒன்றும் கிடையாது.**

ஒரிஜினல் ஜெர்மன் முறைப்படி
இந்தியாவில் தயாரிக்கப்பட்டது.

## தி டாலர் கம்பெனி

337, தம்பு செட்டி தெரு,
சென்னை-1

பிரபல மருந்து வியாபாரிகளிடம்
கிடைக்கும்.

63-DOL-3 A TH

---

மிடுக்கான மற்றும் சிரமமின்றி
உபயோகிக்கத்தக்க
**பிரைட்** பிளாஸ்டிக் சாமான்கள்.

பிரைட் பிரதர்ஸ் பிரை. லிட்.,



புதிய ஜவுளிக்கடைக்காரர்: எவ்வளவு துணிகள் குவிச்சிருக்கேன், பார்த்தியா?

அவர் மனைவி: அடேயப்பா! இவ்வளவையும் போட்டால் எவர்சில்வர் எவ்வளவு கிடைக்கும்!

---

போல் முன்னிலும் அதிகமாக வெளுத்துச் சிறுத்தது. பயப்பிராந்தியுடன் பின்னால் நகர்ந்தான் அவன்.

காரணம், சபேசன் அவனைப் பார்த்து ஒரு சிரிப்புச் சிரித்தான்! சிரிப்பா அது? அடக்க முடியாத ஆத்திரம், பொங்கிக் குமுறும் கோபம், தாளவொண்ணாத் துயரம், அளவுக்கு மீறிய வெறுப்பு, அலட்சியம், ஏளனம் இவ்வளவும் அந்தச் சிரிப்பிலே வெடித்துப் பொரிந்ததைக் கண்டுதான் அவன் அப்படி நடுங்கி யொடுங்கிப் பின்னால் நகர்ந்தான்!

'என்ன நடந்தது? ஏன் இப்படி?' என்று கேட்பதுபோல் கையால் சமிக்ஞை செய்தான் சபேசன்.

உலகத்தின் சோகத்தை யெல்லாம் வாரிச் சுமந்து கொண்டு வந்து நிற்கும் வானத்துத் தேவதை போல் நின்ற வேதாவின் கண்களில் மாலை மாலையாகக் கண்ணீர் வடிந்தது. அவள் தன் வெளிறிய உதடுகளை மடித்துக் கடித்துக் கொண்டு மௌனமாகவே நின்றாள்.

மறுபடியும் சபேசன் அவளிடம் ஏதோ கேட்க முற்பட்டபோது, ஆனந்த ஸ்நானம் செய்த குஷியுடன் மட்டமான சினிமாப் பாட்டு ஒன்றைப் பாடிக் கொண்டே குளியலறையிலிருந்து வெளியே வந்த மருதமுத்துவைக் கண்டு சட்டென்று கீழே குனிந்து நகர்ந்து விட்டான்.

''என்ன, மிஸ் வேதகுமாரி! எப்படி இருக்கிறது இந்த ஊர்? ரொம்ப ரொம்பக் குளிரா இல்லே?'' என்று கலகலப்பான குரலில் கேட்டவாறு சோபாவில் வந்து அமர்ந்தார் மருதமுத்து. அவரையும் அவருக்கு எதிரே யிருந்த 'சரக்குத் தட்டை'யும் மாறி மாறிப் பார்த்துப் பீதியடைந்த வேதா, சுவரோடு சுவராக ஒடுங்கிப் புதைந்தாள்.

''எதுக்கு இப்படி வெட்கப்படறே?..... சீச்சீ, எனக்கு இதெல்லாம் பிடிக்காது!'' என்று செல்லமாகக் கடிந்து கொண்ட மருதமுத்துவின் பார்வை வராந்தா பக்கம் சென்றது. அங்கு வேண்டுமென்றே அவர் கண்ணில் படும்படியாக வந்து நின்று கொண்டிருந்தான் சபேசன்.

இதைச் சகிக்க முடியாதவர் போல், ''டேய், பையா! ரெண்டு பொட்டலம் வாசனைப் பாக்கு வாங்கிக்கிட்டு வாடா!'' என்று விரட்டினார் மருதமுத்து.

''ஆகட்டும், சார்!'' என்று திரும்பிய சபேசன், தன் சகாவான ரூம் பாய் ஒருவனை அழைத்துப் பாக்குப் பொட்டலம் வாங்கி வரச் சொல்லி அனுப்பிவிட்டு மீண்டும் அதே இடத்தில் வந்து நின்று கொண்டான்.

வேதாவிடம் ஏதோ பேச வாயெடுத்த மருதமுத்து இதைக் கண்டு, ''என்னடா, போகலியா?'' என்று சிடுசிடுத்தார்.

''அவசரப்படாதீங்க சார், வரும்!'' என்றான் சபேசன் அடித் தொண்டையில்.

'பையன் என்ன, கோபப்பட்டுக் கொள்கிறான்?' என்று தமக்குள் முனகிக்கொண்டார் மருதமுத்து.

கீழே சென்றிருந்த கறுப்பண்ணனும், செங்கோடனும், ''ப்ளூ ஸ்டார்! ப்ளூ ஸ்டார்!'' என்று உற்சாகமாகச் சொல்லிக் கொண்டே வந்து அறையில் நுழைந்தனர்.

''நம்ப காரைப் பார்த்தீங்களா? நிழல்லே தானே நிக்குது?.... ஊரான் வீட்டுக் கார்; உருப்படியா கொண்டு போய்ச் சேர்க்கணும்'' என்றார் மருதமுத்து.

''இப்பத்தான் ஒரு பையனை விட்டுக் காரைத் துடைக்கப் பண்ணினேன்'' என்ற செங்கோடன், ''அது கிடக்கட்டும் அண்ணே! விஷயத்தைக் கேட்டீங்களா?'' என்றான் அருகில் வந்து உட்கார்ந்து.

''இன்றைய ஃபர்ஸ்ட் பிளேட்டுக்கு ஃபேவரிட்டா இருக்கிறது ப்ளூ ஸ்டார் தானே! நானும் அதைத்தான் செலக்ட் பண்ணி வைச்சிருக்கிறேன்'' என்று அலட்சியப் பெருமையுடன் கூறியவாறு நிமிர்ந்து உட்கார்ந்தார் மருதமுத்து.

''அதுதான் ரொம்ப 'ஹோப்பி'லே இருக்குதாம். ஆனால் இது இன்னர் சீக்ரெட்டாம்'' என்றான் கறுப்பண்ணன்.

சபேசன் பாக்குப் பொட்டலங்களைக் கொண்டு வந்து தட்டில் வைத்தான்.

''இந்தாடா, பையா!'' என்று ஒரு ரூபாய் நோட்டை எடுத்து நீட்டிய மருதமுத்து, ''போய் ஒரு மேட்ச் பாக்ஸ் வாங்கி வா! மீதிச் சில்லறையை நீயே வைத்துக் கொள்'' என்றார்.

''ஆகட்டும், சார்!'' என்று அவசரமாக ஓடிய சபேசன், அடுத்த சில நிமிடங்களில் நெருப்புப் பெட்டியோடு திரும்பி வந்து சேர்ந்து விட்டான்.

''நம்ம ரூம் பையன் ரொம்பச் சுறுசுறுப்பு!'' என்று முகத்தைச் சுளித்துக் கொண்டார் மருதமுத்து.

சபேசன் தன் வழக்கமான இடத்தில் போய் நின்று கொண்டான்.

தலைவரும் அவரது தொண்டர்களும் கண் சமிக்ஞையால் தமக்குள் 'கலந்து' உரையாடிக் கொண்டனர். பிறகு போனை எடுத்து டெலிபோன் ஆபரேடரிடம் ஏதோ ஒரு நம்பருக்குத் தொடர்பு கொடுக்கும்படி சொன்னார் மருதமுத்து. அதற்கு என்ன பதில் கிடைத்ததோ, தெரியவில்லை. ரிஸீவரை ஒரு நிறுசாகச் சாய்த்துப் பிடித்துக்கொண்டு, "ஹலோ! ஆபீஸர்தானே?..... ஆமாம்; நான்தான் பேசறேன்....... வணக்கம், வணக்கம்!...... இப்பத்தான் வந்தேன்.... அது சரி; நான் சொன்ன விஷயம் என்ன ஆச்சு? ஓ, ரொம்ப தாங்ஸ்!..... அந்தப் பெண்ணின் பெயரா?...... வேதகுமாரி! நல்ல மார்க் வாங்கிப் பாஸ் செய்திருக்கிறாள்! ரொம்பப் புவர் கேர்ள்... என்ன பண்ணறது? எனக்காக இந்தக் காரியத்தை நீங்கள் செய்யணும்...... ஹஹ்ஹா!...... அதெல்லாம் இல்லை...... நான் கவனிச்சுக்கறேன்... உங்களுக்குப் பிரமோஷன்தானே?.....அதையும் பார்த்துக்கறேன்!.... ஹஹ்ஹஹ்ஹா...! இண்டர்வ்யூவை இங்கேயே ராத்திரிக்கு வைச்சுக்கலாமா?..... ரொம்ப சரி; அப்ப?... ஓ. கே.......!" என்று சற்று உரக்கவே பேசி விட்டு போனை டக்கென்று வைத்தார். நிஜமாகவே அவர் இப்போது போனில்தான் பேசினாரா?

"என்ன, மிஸ் வேதா! நீ அதிர்ஷ்டக்காரிதான். காரியம் முடிஞ்சது. ஆபீஸர் கவனிச்சுக்கிறேன்னு சொல்லிட்டார். ராத்திரிக்கே ஓர் அப்பாய்ன்ட்மெண்ட் ஆர்டர் போட்டு வாங்கிப்பிடறேன்" என்று அலட்சியமாகச் சொன்ன அவர், "ஏன் அங்கேயே நிற்கிறே? சும்மா இப்படி வந்து உட்கார்! நம்மகிட்டே எல்லாரும் ஃப்ரீயாக இருக்கணும்!" என்று தாம் அமர்ந்திருந்த சோபாவைத் தட்டிக் காட்டினார்.

வெளியில் நின்ற சபேசன் ஏனோ மெல்லக் கனைத்தான்.

"யாரு அண்ணே இப்போ போனில் பேசினது?" என்று அக்கறையாக மருதமுத்துவிடம் விசாரித்தான் செங்கோடன்.








எஹவேஸ் இலாகாவின் கண்ணில் படாத இந்தச் சோலைகளடர்ந்த சாலை சென்னையில் எங்கிருக்கிறது என்று கேட்கிறீர்களல்லவா? இது அன்றுள்ள ஆழ்வார்ப் பேட்டையிலுள்ள மௌபரேஸ் சாலை. பச்சைப்பசேல் என்று அன்றுபோல் இன்று மரங்களடர்ந்த சோலையாக மௌபரேஸ் சாலை விளங்காவிட்டாலும் ஒன்றிரண்டு மரங்களாவது இருந்து வெம்மிலுக்கு ஒதுங்கக் கிடைத்திருக்கிறதே, அது பாதசாரிகள் செய்த பாக்கியம்.



காட்பரி- ஃப்ரையிலிருந்து

# இனிய விருந்து...

Cadbury-Fry

பரவசமூட்டும் பல
சுவை இனிப்புகள்
ஆழ உட்பொதிந்தசத்து
வளமிக்க, ஆடை மயமான
பால் சாக்கலேட்.
இஷ்டம்போல் தேர்ந்
தெடுக்க எண்ணற்ற
ரகங்கள்:





ஹேஸல் கட்



ஸ்காச்ட் ஆமண்ட்ஸ்



டாஃப்பின்ஸ்



பட்டர்ஸ்காட்ச்



காரமெல்ஸ்



கேண்டி கட்ஸ்



ஹேஸல் கட்டிகள்



ஆமண்ட்கட்டிகள்



பட்டர்ஸ்காட்ச் கட்டிகள்

''அவன்தான், பலான ஆபீஸர்....! நாம்ம நூன்னூறுக்குக் கேட்டா அவன் ஒன்னூறுக்கு அடி போடறான்!... பார்க்கிறேன்னு சொல்லி யிருக்கிறேன். பாவம், பின்னேகுட்டிக்காரன். நம்மாலானதைச் செய்துடணும்'' என்ற மருதமுத்து கண் சிமிட்டிக் கோணல் புன் னகை பூத்தார். அதன் 'பொருளை'ப் புரிந்து கொண்ட செங்கோடன், ''இன்னு, மச்சர்! உள்ளேயே இருக்கிறது கஷ்டமாயிருக் குதா? வெளியே வராந்தாப் பக்கம் போய்க் கொஞ்சம் வேடிக்கை பாரேன்! இந்த ஊரை எவ்வளவு நேரமானாலும் பார்த்துக்கிட்டே இருக்கலாம்! எல்லாத்திலேயும் மயக்கம் தரு கிற ஊர் இது!'' என்றான் குறும்புச்சிரிப்புடன்.

அம்மூவரையும் மிரள மிரளப் பார்த்துக் கொண்டே தட்டுத்தடுமாறி வராந்தா வுக்குச் சென்று அதன் கடைசி மூலையில் நின்று கொண்டாள் வேதா.

அறையின் கதவு இலேசாக ஒருக்களிக்கப் பட்டது. உள்ளே அட்டகாசமான சிரிப் பொலி. பாட்டில்களின் கார்க் திறக்கப்படும் சத்தமும் சேர்ந்து ஒலித்தது.

வேதாவுக்குச் சற்று இப்பால் கைப்பிடிக் கிராதியண்டை நின்ற சபேசன் தன் தோளில் கிடந்த 'நாப்கின்'னைப் பித்தளைப் பூத்தொட்டி யொன்றைத் துடைப்பது போன்ற பாவனை யில் வேறு பக்கமாகத் திரும்பிக் குனிந்து கொண்டு, ''என்ன இதெல்லாம் நாடகம்?... எவ்வளவு காலமாக நடக்கிறது?...'' என்றான் அவளுக்கு மட்டுமே கேட்கும்படியான மெல்லிய குரலில். கூடவே தான் ஏதோ ஒரு பாட்டை முணுமுணுப்பது போல் அறையில் இருப்பவர்களுக்குக் கேட்கும்படியாக இராக மும் இழுத்துக் கொண்டான்.

அவனுடைய கேள்வியைச் செவிமடுத்த வேதாவின் உடல் அதிர்ந்து குலுங்கியது. ஆனால் அவள் அவனைத் திரும்பிப் பாராமல் வேறெங்கோ கவனமாக இருப்பதுபோல் நின்று கொண்டிருந்தாள்.

''உன் அருமை அண்ணன் நச்சி எங்கே? உன்னை இவர்களோடு இந்த ஹோட்டலுக்கு அனுப்பிவிட்டு அவன் வேறொரு ஹோட்ட லில் தங்கியிருக்கிறானோ?'' — மீண்டும் ஒரு போலியான இராக ஆலாபனையுடன் இவ் வாறு சொற்களை மென்று கரையவிட்டான் சபேசன்.

''நான் ஆபத்தில் சிக்கியிருக்கிறேன்!... பயங்கரமாக ஏமாற்றப் பட்டிருக்கிறேன்... தயைசெய்து தவறாகக் கற்பனை செய்ய வேண்டாம்!...'' — மிக மெல்லிய குரலில், அழுதுகொண்டே இப்படி முணுமுணுத்தாள் வேதா. ''என் அண்ணா நச்சியா?... அவருக்கு மட்டும் இந்த விஷயம் தெரிந்து, அவரும் இங்கு இருந்திருந்தால்... இந்நேரம் என்னைக் குத்திக் கொலை பண்ணிவிட்டிருப்பார்!...''

சபேசன் இதைக் கேட்டுச் சட்டென்று நிமிர்ந்தான். பிறகு பூத்தொட்டியை வேக மாகத் துடைத்துக் கொண்டே இராகம் இழுக்கலானான்.

''என்னடா பையா, பாட்டு பலமாயிருக் குதே!'' — மருதமுத்து குரல் கொடுத்தார்.




''அதென்னமோ தெரியலே சார். நெல்லுக்குப் பதில் ரேஷன் கார்டாக முளைச்சுப் போயிருக்கு!''

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

''ரேடியோ வையுங்க சார்! இப்ப 'நேயர் விருப்பம்'...'' என்று நகைத்தான் சபேசன். அந்தச் சத்தத்திலாவது வேதாவிடம் இன் னும் கொஞ்சம் விவரம் கேட்டறியலாம் என்பது அவன் எண்ணம்.

''ஓகோ! உனக்குப் பாட்டு வேண்டுமா? இன்னும் கொஞ்சம் நேரம் போனால் பாட்டில் கூட வேணும்னு கேட்பே போலிருக்கே!''

சபேசன் தலையைச் சொறிந்து கொண் டான். செங்கோடன் நிஜமாகவே ரேடி யோவைத் திருகிவிட்டான். எல்லாவற்றை யும் இன்றே அநுபவித்துவிட வேண்டும் என்ற துடிப்பு அவனுக்கு.

'இரவினில்ஆட்டம்... பகலினில் தூக்கம்... இதுதான் எங்கள்...' — ரேடியோ பாடியது.

உள்ளே அவர்களது 'ஜலக்கிரீடை' முடிந்துவிட்டதுபோலும். மூவரும் ஒரு 'ரீதும்' நடை போட்டு வராந்தாவுக்கு வந்தனர்.

இடீரென்று நிமிர்ந்த சபேசன், மூன்று வது மாடிப் படியில் ஏறிக்கொண்டிருந்த ஒரு ரூம் பாயைப் பார்த்து, ''பயப்படாதே! நான் கவனிக்கக்கிறேன்!'' என்று உரத்த குரலில் கத்தினான். அந்தப் பையன் ஒன்றும் புரியாமல் அங்கேயே நின்று 'என்ன' என்பது போல் கையை ஆட்டிக் கேட்டான். 'சரி தான், போடா!' என்பதாகத் தலையாலேயே சமிக்ஞை செய்துவிட்டுச் சிரித்தான் சபேசன். அவனும் மேலே ஏறிப் போய்விட்டான்.

'ரூம் பாய்'களின் இந்தக் குறும்புத்தனத் தைக் கவனித்ததாகக் காட்டிக் கொள்ள வில்லை மருதமுத்துவும், அவரது காரியதரிசி களும். ஆனால் வராந்தா மூலையில் நடுங்கிக் கொண்டு நின்ற வேதா, சபேசனின் அந்தச் சொற்களை ஏதோ ஒரு வகையில் புரிந்து கொண்டாற்போல் சற்றே தெம்பு பெற்று நிமிர்ந்தாள். (தொடரும்)



## கரண்டி டாக்டர்!

பதினைந்து குழந்தைகளைப் பெற்றெடுத்த ஓர் ஏழைத் தாயின் பத்தாவது குழந்தையாகப் பிறந்தார் புரூனோ வியோ பிரைடன். உயர்தரக் கல்வி பெறுவதற்குக் குறுக்கே நின்றது வறுமை. எனவே வர்ணம் தீட்டும் ஒருவருக்கு எடுபிடி வேலை செய்யும் பையனாகத் தம் பாலிய வாழ்வைத் தொடங்கினார் புரூனோ. ஆனால் ஆர்வமும், திறமையும் முடங்கிக் கிடக்குமா? வர்ணம் தீட்டுபவரிடமிருந்து விடைபெற்றுக் கொண்டு காலை நேரத்தில் கல்லூரியில் படிக்கவும், கல்லூரிச் செலவுக்காக மாலை நேரத்தில் ஒரு ஹோட்டலில் வேலை செய்யவும் திட்டம் வகுத்துக் கொண்டார் அவர்.

படித்துக் கொண்டிருக்கும்போதே அன்றைய டாக்டர்கள் வைத்திருந்த பல பத்தாம்பசலி மருத்துவக் கருவிகளை மாற்றி அமைத்தால் அவை இன்னும் நல்ல பயனைத் தருமென்று கண்டுணர்ந்த புரூனோ அத்துறையில் ஆராய்ச்சி செய்தார். இறுதியில் மேற்கு ஜெர்மன் குடியரசு நிறுவிய மருத்துவக் கருவிகள் சீரமைப்புக் குழுவுக்கும் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

இன்று, ஜெர்மன் கல்லக் களஞ்சியங்களெல்லாம் மருத்துவக் கருவி இஞ்சினீயர், பிரசவக் கேஸ்கள் பார்ப்பதில் நிபுணர், பேராசிரியர் என்று புரூனோ வியோ பிரைடனைப் புகழ்கின்றன!

இவர் அமைத்த கருவிகளனைத்தும் கரண்டி வடிவில் இருந்ததால் இவருக்குக் கரண்டி டாக்டர் என்று ஒரு பெயரும் உண்டு.

ஆதாரம்: ஜெர்மன் நியூஸ் வீக்லி பாரூக்



சிற்றுண்டியருந்தத் தினம் போல் அவர் ஹோட்டலுக்குச் சென்றார். ஒரு மேஜையில் இடம் பிடித்து உட்கார்ந்தார். அவருக்கோ கோரப் பசி. சர்வர் அவர் மேஜைப் பக்கம் வரும் வழியாகக் காணோம். ஆத்திரம் மீறவே சர்வரை அழைத்து, "ஏனப்பா! இங்கேயே நான் பட்டினி கிடந்து சாக வேண்டியதுதானா?" என்று கேட்டார்.

"வேண்டாம், சார்! இன்று திங்கட்கிழமை. மூன்று மணிக்கெல்லாம் ஹோட்டலை மூடிவிடுவோம். அப்புறம் வெளியே போய் உங்கள் உசிதம் போலச் செய்து கொள்ளுங்கள்!" என்றார் சர்வர்.

கைக் கடிகாரத்தில் சென்றது அவர் கண். அப்பொழுது மூன்று அடிக்க மூன்று நிமிஷம் பாக்கி யிருந்தது!

## அங்கேயும்தான்!

இது விஞ்ஞான யுகம் அல்லவா? ஆகவே நமது நாட்டில் மூட நம்பிக்கையிலே உழன்றுகொண்டிருக்கிறோம் என்று சொல்லிக் கொண்டிருப்பதையே சிலர் நாகரிகமாக நினைக்கிறார்கள்!

ஆனால் விஞ்ஞானம் கொடி கட்டிப் பறக்கும் அந்தச் சீமையில் உள்ள சில நம்பிக்கைகளைப் பாருங்கள்.

நம் நாட்டில் உப்பைச் சிதறக்கூடாது என்று வீட்டில் உள்ள தாய்மார்கள் சொல்வதைச் சிலர் பொருட்படுத்துவதேயில்லை. அயர்லாந்தில் உப்பைச் சிதறவிட்



டால் சிதறவிட்டவரின் இரண்டு தோள் பட்டையிலும் உப்பைத் தூவுகிறார்கள். உப்புச் சிதறினால் கலகம் வரும். அதற்கும் பரிகாரம் சிந்தியவரின் தோளில் கொஞ்சம் உப்பைச் சிதற வேண்டும் என்கிறார்கள்.

● ஆங்கிலக் குடும்பங்களில் நீல விழிகளுடன் பெண் குழந்தை பிறந்தால் அது அழகோடு அதிருஷ்டமும் வாய்ந்ததாய் விளங்கும் என்று நம்புகிறார்கள். சாம்பல் நிற விழி போராசையையும், தவிட்டு நிற விழி பொய்மைக் குணத்தையும், பச்சை நிற விழி பொறாமையையும் உணர்த்துவதாகும் என்றும் கருதுகிறார்கள்.

● யாருக்காவது முன்பற்கள் இரண்டுக்கு நடுவில் ஆறு பென்ஸ் நாணயத்தைச் செருகிக் கொள்ளக் கூடிய அளவு இடைவெளி இருந்தால் அது செல்வச் செழிப்புக்கு ஒரு நல்ல அறிகுறி என்று நம்புகிறார்கள்.

ஆங்கில நாட்டில் உள்ள மற்ற நம்பிக்கைகளையும் கவனியுங்கள்:

● ஒருவர் புறப்படும் போது முயல் குறுக்கே சென்றால் அது நல்ல சகுனம். பின்னால் பார்த்தால் அது கெட்ட சகுனம்.

● கரும் பூனையைப் பார்த்தால் அதிருஷ்டம். ஆனால், கருப்போ, வெள்ளையோ, மஞ்சளோ எந்தப் பூனையானாலும் இடமிருந்து வலமாகப் போனால் அது தீய சகுனம்.

● நம் நாட்டில் கருடனைப் பார்த்தால் எப்படி மகிழ்கிறார்களோ அப்படி ஆங்கிலேயர்கள் மாக்பை பறவையைக் கண்டால் மகிழ்கிறார்கள்.

● ஏணி சாத்தி வைத்திருந்தால் ஆங்கிலேயர்கள் அந்த ஏணிக்கும் சுவருக்கும் இடையில் நடந்து செல்ல மாட்டார்கள். தப்பித் தவறி நடக்க நேர்ந்துவிட்டால் சில ஊர் ஆங்கிலேயர்கள் ஐந்து நாய்களைப் பார்க்கும்வரை வாய் பேசாமல் நடந்து செல்வார்கள். ஐந்து நாய்களைப் பார்த்த பிறகுதான் அந்தக் கெடுதி விலகுமாம்!

ஆதாரம்: இலங்கை தமிழ்ச் சங்கம் கடர் கவிமணி மலரில் சோமு எழுதிய 'சில சீமை நம்பிக்கைகள்.'

தகவல்: மாறுமலன்

## ஒரு நாள் ஊதியம் அரை ரூபாய்!

இந்தியாவின் திரைப்படத் துறையில் தனிச் சிறப்புப் பெற்றவர் திரு வி. சாந்தாராம். தலைசிறந்த டைரக்டர்களில் முதல் வரிசையில் நிற்பவர். அத்துடன், 'ராஜ்கமல் கலாமந்திர்' ஸ்டுடியோவின் அதிபர். படங்களில் கதாநாயகனாக நடிப்பவரும்கூட!



சாந்தாராம் பதினாறு வயதில் எப்படி இருந்தார் தெரியுமா? ஹூப்ளி நகரில் மெகானிக் தொழிலில் ஈடுபட்டிருந்தார். தினம் பெற்று வந்த ஊதியம் அரை ரூபாய்!

*ஆதாரம்:* சினி அட்வான்ஸ்

*தகவல்:* ஏ. சுவாமிநாதன்



## யாரிவரோ!

தாகூரின் நூல்களைப் படித்து மகிழ்ந்த அவர், தாகூரின் சமயக் கருத்துக்கள் என்ற நூலை எழுதி வெளியிட்டார். அந்த நூலைப் படித்த தாகூர், அந்நூலாசிரியருக்கு ஒரு கடிதம் எழுதினார், என்னுடன் நெருங்கிப் பழகாமலே என் நூல்களைப் படித்தே என் கருத்துக்களை உள்ளவாறு உணர்ந்து வெளிப்படுத்திய உங்கள் பேரறிவு பாராட்டத்தக்கது. வேறு எவரும் என்னை உள்ளவாறு உணர்ந்தவர் இல்லை என்று பாராட்டி!



அந்த நூலாசிரியர் யார் தெரியுமா?

நமது ஜனாதிபதி தத்துவமேதை டாக்டர் ராதாகிருஷ்ணன்தான்!

—எம்மாரெஸ்

---

வசிப்பதற்கு ஒரு தனி அறை; ஒரு படுக்கை அறை; சமையலறை; தனியாகக் குளியலறையும் அத்துடன் இணைந்த சுகாதாரக் கக்கூஸ்; சுவரிலேயே கட்டப்பட்ட அலமாரி; சாமான்கள் வைக்க அடுக்கடுக்காகக் கட்டப்பட்ட சிமிட்டித் தட்டுகள்—இவ்வளவும் உள்ள, சாதாரண குடும்பத்துக்கு எல்லா வகையிலும் போதுமான நவீன வீடு ஒன்றை ரூ. 6600க்குள் இரண்டே மாதத்தில் கட்டிக்கொள்ள முடியும் என்று இந்தக் காலத்தில் யாராவது சொன்னால் நீங்கள் நம்புவீர்களா? சென்னை பிரபல என்ஜினீயர் ராவ் எஸ். கிருஷ்ணய்யர் இது முற்றிலும் சாத்தியமே என்று சொல்லுவதோடு விடாமல், நந்தனம் பகுதியில் மாதிரிக்கு ஒரு வீட்டையே கட்டி வைத்திருக்கிறார். அமைச்சர் திரு ஆர். வேங்கடராமனையும் திரு காமராஜரையும் கூப்பிட்டு இதன் அதிசயத்தை அவர்களுக்கு விளக்கி வைத்து, சென்னை மக்களையும் இதன் உண்மையை நேரில் பார்த்துத் தெரிந்துகொள்ளலாம் என்று அழைக்கிறார். அஸ்திவாரத்திலிருந்து வெள்ளையடிக்கும் வரையில் செலவைக் கட்டுப்படுத்தும் விதங்களைத் திரு கிருஷ்ணய்யர் விளக்கும்போது பிரமிப்பு ஏற்படுகிறது. சிமிட்டிக் கம்பங்களாலான அஸ்திவாரம், நாட்டுச் செங்கற் சுவர், ஒன்றே அரைக்கால் கனச் சுவருக்குள்ள அனுகூலங்களை ஆறரை அங்குலச் சுவரிலேயே பெறக்கூடிய அமைப்பு, காட்டு மரத்தையே தேக்கு மரத்தைப் போல் இழைத்த நான்கு ஜன்னல்களும் நான்கு கதவுகளும், மூன்று அங்குல கனமுள்ள சிமிட்டிக் கூரை, உமி, தனிட்டைக் கொண்டு தயாரிக்கப்பட்ட மேல் பூச்சு — இப்படி 462 சதுர அடி விஸ்தீரணமுள்ள வீட்டைப் பார்க்கும்போது சாதாரண வருமானமுள்ளவர்களுக்கும், சொந்த வீட்டு யோசனையைக் கைவிட்டவர்களுக்கும் புது ஆசை பிறக்கும். இந்தப் புதிய கட்டடம் பற்றி நிபுணர்கள் நோக்கிலும் உறுதியுள்ளது என்று திரு கிருஷ்ணய்யர் உறுதியளிக்கிறார்.







# செல்வத்தினிடையே வறுமை!




சுக்ரன் அசுரர்களின் குரு. நவகிரகங்களில் ஒருவன். ஒரு காலத்தில் அவன் மிகவும் செல்வந்தனாக இருந்தான். குபேரனையும் விடப் பணக்காரன். சுக்ரனின் செல்வம் தன் செல்வத்தையும் மிஞ்சியது என்றறிந்ததும் குபேரனுக்கு மிக வும் கவலை ஏற்பட்டது. உறக்கமே வரவில்லை. சுக்ரனைவிடச் செல்வந்தனாக வேண்டும் என்று ஆசைப்பட்டான் குபேரன். வேண்டியது வேண்டியாங்கு கொடுப்பது தவமல்லவா? ஆகவே குபேரன் சுக்ரபகவானையே குறித்துக் கடுந்தவம் புரிந்தான். பல வருடங்கள் அவன் கடுந் தவம் புரிந்ததும், சுக்ர பகவான் மிகவும் சந்தோஷமடைந்து குபேரன் முன்பு தோன்றினன். "குபேரா! உன் கடுந் தவத்தால் மிகவும் மகிழ்ச்சியுற்றேன். உனக்கு வேண்டிய வரம் என்ன?" என்று கேட்டான். "சுக்ர பகவானே! தங்கள் செல்வம் எல்லாம் எனக்கு வரும்படி கிருபை செய்ய வேண்டும்" என்று வேண்டிக் கொண்டான்.

"அப்படியே ஆகுக" என்று அருள் புரிந்தான் சுக்ரன்.

குபேரன் அளகாபுரியை அடைந்தான். சுக்ரன் செல்வ மனைத்தும் குபேரனின் கஜானாவில் வந்து சேர்ந்தன. அளகா புரி பன்மடங்கு பொலிவுற்று விளங்கியது. குபேரனின் செல்வமும் இன்பமும் எல்லையற்றுப் பெருகின.

சுக்ரனுடைய நிலைமை மிகவும் வருந்தத் தக்கதாயிற்று. ஏழைமை அவனைச் சூழ்ந்தது. ஏழைமை நிலையிலுள்ள ஆசாரியனை அசுரர்கள் கௌரவிப்பார்களோ, அவமதிப்பார்களோ என்று சுக்ரன் மிகவும் கவலைப்பட்டான். அவன் சிவபெருமானைக் குறித்து அன்ன ஆகாரமின்றிக் கடுந்தவம் செய்தான். நீர்கூடப் பருகாமல் பல வருடங்கள் தவம் செய்தான். கடைசியில் சிவபெருமான் சுக்ரன் முன்பு தோன்றினர். "சுக்ரனே! உன் கடுந் தவம் போற்றத் தக்கது. உனக்கு வேண்டும் வரம் யாது?" என்று கேட்டார். "எவ்வுலகத்துக்கும் இறைவனாகிய பெருமானே! முன்பு போல நான் மீண்டும் பணக்காரனாக வேண்டும். ஆனால் குபேரனுடைய செல்வத்துக்கு ஒருவிதமான குறையும் ஏற்படக்கூடாது" என்று வேண்டினன்.

சிவபெருமான் சற்றே யோசித்தார். "நீ செய்த தவம் சிறந்தது. ஆகவே, எப்பொழுதும் குறையாது வளரும் செல்வம் உனக்கு அருளினேன். உனது கஜானாவில் எப்பொழுதும் செல்வம் வந்து குவிந்து கொண்டே இருக்கும்" என்றார் ஈசன்.

"அது எப்படி?" என்றான் சுக்ரன். "பாடுபடாமல் சிரமமின்றிப் பணம் சம்பாதிக்க முயற்சி செய்பவர்கள் எதிர் பார்க்கும் லாபம் எல்லாம் உன்னைச் சேர்ந்தது. முதல் பரிசு ஒரு லட்ச ரூபாய் அடைய விரும்பி, ஒரு ரூபாய்க்கு ஒருவன் லாட்டரி டிக்கட் வாங்குவதாக வைத்துக் கொள்ளுவோம். அவனுக்குப் பரிசு வந்தாலும் சரி, வராவிட்டாலும் சரி, அவன் உனக்கு ஒரு லட்ச ரூபாய்க்குக் கடனாளி ஆகிவிடுவான். அன்று முதல் அவன் தன் வருமானத்தில் ஒரு பங்கை உனக்குக் கடனாகச் செலுத்தி வருவான். இது மாதிரியே சொந்த முயற்சியின்றி, பாடுபடாமல் பணம் சேர்க்க விரும்பும் ஒவ்வொருவனும் உனக்குக் கடனாளியாவான். ஏமாற்றிச் சம்பாதிப்பவனது பணம் நஷ்டம், களவு, வெள்ளம், நெருப்பு, டாக்டர் பில் முதலிய முறைகளில் அவனுக்குப் பயன்படாமல் உன்னை வந்தடையும்" என்றருளினார் சிவபெருமான்.

இறைவன் மறைந்ததும் சுக்ரன் பெருவகையுடன் தன் இருப்பிடம் சேர்ந்தான். அன்று முதலாகச் சுக்ரனை விடச் செல்வந்தர் யாரும் கிடையாது. சுக்ரனுக்குக் கடனாளிகள் தொகை நாளுக்கு நாள் வளர ஆரம்பித்தது. மக்களின் வறுமையும் இங்கு வளர ஆரம்பித்து விட்டது. சுக்ரனுடைய கடன் அடைபடும்வரையில் பல பிறப்புகளிலும் ஏழைமையில் உழல வேண்டியதுதானே! சுபிக்ஷத்தினிடையே வறுமை வளரும் கதை இது.

— வி. வேங்கடராமன்



**நல்ல**



**தீர்ப்பு!**

அகலமான நீர்ப்பரப்பை உடைய அந்த ஆற்றின் ஒரு கரையிலிருந்து அந்தப் படகு புறப்படுகிறது. படகில் இருவர் மட்டுமே அமர்ந்து துடுப்பு வலித்துக் கொண்டு செல்கின்றனர். சிறிது தூரம் சென்றவுடன் படகில் தண்ணீர் இருப்பதைக் கண்டவுடன் அதன் காரணமான இரண்டங்குல துவாரத்தையும் படகின் அடிப் பகுதியில் கண்டனர்.

அதிகமாகத் தண்ணீர் புகுந்து விட்டால் படகு முழுகி விடுமே!

படகை வேகமாக ஓட்டிச் சீக்கிரம் கரையை அடைந்து விடுவோம்— என்றான் ஒருவன்.

போடா, முட்டாளே. இன்னும் செல்ல வேண்டியது ஒரு மைல் தூரமிருக்கும். எவ்வளவுதான் வேகமாகச் சென்றாலும் கரையை அடைவதற்குள் படகு முழுகிவிடும். இதோ பார், இந்தத் துளைக்குப் பக்கத்தில் அதைவிடப் பெரிதாக நாலங்குலத்தில் ஒரு துளை போட்டு விடுவோம். இந்தத் துளை வழியாக வரும் நீர் அந்தத் துளை வழியாக வடிந்துவிடும் என்றான் மற்றவன். —எம்மாரெஸ்



# நிம்மதியான எதிர்காலம் சார்ட்டர்டு பாங்க் காட்டும் வழி

நீங்கள் சேமிக்கும் ஒவ்வொரு சிறு தொகையும் போகப் போக உங்கள் பாதுகாப்பை உறுதியாக்குகின்றது. சார்ட்டர்டு பாங்கில் சேமிப்புக் கணக்கை துவக்கி, நல்லதொரு பழக்கத்தை விருத்தி செய்யுங்கள். உங்கள் பணம் பூரணபாதுகாப்பைப் பெறுவது மட்டுமின்றி, 4% வட்டியையும் சம்பாதிக்கின்றது. மேலும், உங்களுக்கு தேவையான போது கிடைக்கின்றது.

இன்றே சார்ட்டர்டு பாங்கில் சேமிப்பு கணக்கை ஆரம்பித்து பலனடையுங்கள். அது உங்களது எதிர்காலத்திற்கு மிகவும் அத்யாவசியமானது.



*100 ஆண்டுகளுக்கு மேலாக நம்பகமான சேவை*

## தி சார்ட்டர்டு பாங்க்

N.S.C. போஸ் ரோடு, சென்னை-1.

FDS-CH-591 TM

# குன்றின் மீது தீபம்!

— சோமு —



குன்றின் மீதே எரியுது தீபம்!
குன்றின் உச்சியில் குன்றாமல் நின்று
குன்றின் மேலே எரியுது தீபம்!

நன்றுடை ஒருவன் நல்கிய சேவையோ
நங்கை நல்லாள் ஒருத்தியின் கற்போ
என்றோ எங்கோ எவரோ செய்த
எளியதோர் உதவியை எண்ணிடும் உள்ளமோ
— குன்றின் மீது தீபம்!

வானம் எங்கும் இருண்ட போதும்
வையம் முற்றும் மருண்ட போதும்
கான்வழி சென்று கால்அயர் போதும்
கண்ணும் மனமும் களித்திட ஒளிரும்
— குன்றின் மீது தீபம்!

பக்கத் துள்ளார் படையுடன் சாரப்
பகைவர் வந்து பூசல் இழைக்கத்
தக்க தருணம் தாளாமல் வந்து
தகவுடன் ஒருவர் ஊக்கிய சொல்லோ!
— குன்றின் மீது தீபம்!

குலக்கொடி நடத்தும் குடும்பம் போலும்
குடும்பம் துலங்கிடும் குதலையர் போலும்
நலந்திகழ் மனையின் மங்கலம் வளர
நல்கிய தென்புல வேள்வியே போலும்
— குன்றின் மீது தீபம்!

தவறுகள் செய்திடும் மாந்தரை ஆய்ந்து
தண்டனை விதிக்கும் நீதியின் வலிதாய்
தவறுகள் தம்மை உணர்ந்தருள் செய்யும்
தண்ணளி போன்றே தண்ணொளி வீசி
— குன்றின் மீது தீபம்!

என்புடை உடலில் இலங்கும் உயிரோ
ஏதிலார் தமக்கும் இரங்கிடும் கருணையோ
அன்புடை நெஞ்சில் அமர்ந்த இறையோ
ஆன்மச் சிப்பியில் அமைந்த முத்தோ!
— குன்றின் மீது தீபம்!

குமரன் கோவிற் கொடிமர மீது
குறிஞ்சிக் கடவுளின் கொற்றம் விளக்கி
அமர வாழ்வை அவனியில் வழங்கும்
ஆறு முகவன் திருவருள் தானோ!
— குன்றின் மீது தீபம்!

நீல மேகத் தோகையை விரித்து
நிற்கும் குன்றென நிமிர்ந்த மயில்மேல்
கோலச் சுடர்வேல் குளிர்ஒளி வீசக்
குமரன் வந்து குதித்தது போலே
— குன்றின் மீது தீபம்!

குன்றின் மீது சுடரே போற்றி!
குவலய ஞான விளக்கே போற்றி!
குன்றுதோ றாடும் குமரா போற்றி!
குவலய ஞானச் செல்வா போற்றி!

அடைப்படக் கதை

# சீதம்

ஏ. எஸ். சுந்தரராஜன்

தபால்காரர் ரேழியில் வீசியெறிந்து விட்டுப் போன கடித உறையை முதலில் அசுவாரஸ்யமாகத்தான் எடுத்தேன். காரணம் ஊரிலிருக்கும் என் மாமா ஒருத்தர்தான் இப்படி அடிக்கடி கடிதம் எழுதுகிறவர். கவரை உடைத்துப் பார்த்தால் அரை மீசை, முக்கால் மீசை அலங்காரங்களுடன் கூடிய யாராவது ஒரு வாலிபத் தடியனின் போட்டோவும் அவன் இத்தனாம் தேதி என்னைப் பார்க்க அல்லது சொஜ்ஜியோ, கேசரியோ சாப்பிட — எதைப் பிரதானமாகக் கொண்டாலும் சரி — வரும் நிகழ்ச்சி நிரலும் இருக்கும். எனக்கு வரன் தேடும் கைங்கரியத்தைத் தானே தன் அன்றாட அலுவல்களில் ஒன்றாக ஆக்கிக் கொண்டு, பாவம் செருப்பைத் தேய்ப்பவர் அவர்.

கடித உறையை எடுத்து மேலோட்டமாக விலாசத்தைப் பார்த்த பொழுது என் உடலே ஒரு முறை சிலிர்த்துக் குலுங்கியது. மாமா வழக்கமாக அப்பா பெயருக்குத்தான் எழுதுவார். இதிலோ என் பெயர் காணப் பட்டது. இந்தச் சின்ன மாற்றத்துக்காக நான் ஒன்றும் பரபரப்பு அடையவில்லை. கையெழுத்து மாமாவுடையதாக இல்லாமல் என் தங்கை பாரதியினுடையதாக இருந்ததுதான் என் சிலிர்ப்புக்குக் காரணம். ஆறு மாத காலமாக எந்தவித தகவலும் கொடுக்காமலிருந்து ஓடிப் போன பாரதியிடமிருந்து கடிதம் வந்திருக்கிறது.

ஓடிப் போன பாரதி.......

என் நாக்கு நுனி முன் பற்களிடையே நறுக்கென்று நசுக்குண்டது.

அப்படிச் சொல்லிச் சொல்லிச் சிரிக்காதவர்கள், தோள்பட்டையில் முகவாயை நங்கென்று இடித்துக் கெக்கலி கொட்டாதவர்கள் யாராவது இந்தத் தெருவில் இன்னும் மீதி உண்டா? காதல் ஒழுக்கம், களவொழுக்கம் என்பதையெல்லாம் இலக்கியங்களில் படித்துப் போற்றலாம்; காதல் உணர்ச்சிகளை அலங்காரமான வசனமாக்கி நாடகத்திலோ, சினிமாவிலோ கேட்கும் போது ரசிக்கலாம். ஆனால் உண்மை வாழ்க்கையில் அதை ஓர் அசம்பாவிதமாகவே இன்னும் கருதுகிறார்கள். ஒழுக்கம், பெண்மை என்பதற்கெல்லாம் மிகவும் கட்டுப்பெட்டித்தனமான அர்த்தங்களும் வாழ்க்கை நடைமுறைகளும்தான் அமுலில் இருக்கின்றன. ஒரு பெண்ணின் கண்ணியமான ஆசைகள் அல்லது மனவெழுச்சிக்கு மதிப்பும் ஆதரவும் தரப் பின் ஏன்தான் இந்தத் தயக்கமோ?

ஓடிப் போன பாரதியாம்.....

ஊரார் சொன்னது இருக்கட்டும். இந்த அப்பா முகத்தைச் சுளித்துச் சுளித்து எத்தனை தரம் சுட்டிக் காட்டி விட்டார்....

பாரதிக்கும் எனக்கும் இரண்டரை வயசு வித்தியாசம். மூத்தவள் நான். 'என் பெண்களும் கல்லூரியில் படிக்குதுகள்' என்று நாலு பேரிடம் சொல்லிப் பெருமை தேடிக் கொள்ள அப்பா ஆசைப்பட்டார் போலிருக்கிறது. எப்படியோ கடனோ உடனோ வாங்கி, ஊர்ப்பட்ட பொரிசெல்லாம் பிடித்து எங்கள் இருவரையும் கல்லூரியில் சேர்த்து விட்டார். நாங்களும் ஆர்வத்துடன் படித்து பி.யூ.சி.யில் தேறினோம். ஆனால் இப்பொழுது அப்பா பண வசதியில் தேறவில்லை. ஒரு சின்னக் கட்டடக் கண்டிராக்டரிடம் அவருக்கு வேலை. சுமாராக வரும்படி வரும் என்பது உண்மைதான். ஆனால் அதை வைத்துக் கொண்டு இரண்டு பெண்களின் மேல்படிப்புக்குக் கை கொடுக்க முடியுமா? குடும்பத்தில் வேண்டுமானால் ஏதோ ஜகஜ்ஜாலப் புரட்டு செய்யலாம்......

எங்களுக்கும் அப்பாவின் நிலைமை புரிந்தது. அதனால் பட்டம் பெற வேண்டும் என்ற ஆசையை விட்டு உத்தியோக வேட்டை ஆடத் தொடங்கினோம். பிறந்ததில்தான் பின்தங்கி விட்டாளே தவிர மற்றெல்லாக் காரியங்களிலும் பாரதிதான் முதல். ஆமாம்! அவளுக்கு மட்டுமே வேலை கிடைத்தது. என்னமோ தொழில் நடக்காமல் அப்பா வாரத்துக்கு இரண்டு நாட்கள் மட்டுமே வேலைக்குப் போய் வந்து கொண்டிருந்த நேரம் அது. பாரதியின் சம்பளத்துக்காகக் கைநீட்டிக் கொண்டிருந்தார். ஒரு மாதமோ ஒன்றரை மாதமோதான் ஆயிற்று, பாரதி வேலைக்குப் போய். அதற்குள் யாரோ ஒருத்தனைச் சந்தித்து மனத்தைப் பறிகொடுத்து விட்டு வந்து நின்றாள். அவனையே கல்யாணம் செய்து கொள்ள வேண்டுமாம்....

அன்றைய நிகழ்ச்சி இன்னும் நன்றாக எனக்கு நினைவிருக்கிறது.

அப்பாவுக்குக் கோபம் என்றால் கோபம். ஈஸிசேர் கழியை உருவிக் கொண்டு கையை ஓங்கி விட்டார். நல்ல வேளை — நானும் அம்மாவும் குறுக்கே பாய்ந்ததால் பாரதியின் மண்டை உடையாமல் தப்பியது. இத்தனைக்கும் அவள் சற்று ஒதுங்க வேண்டுமே. ஊஹூம். இமைகளைக்கூட அசைக்கவில்லை. ஏதோ ஜன்னி கண்டவள் மாதிரி விறைப்பாக நின்று கொண்டிருந்தாள். பேச்சும், துவளாமல், தயங்காமல் கணீரென்று உதிர்ந்தது.

''என்னை அடிச்சுப் புரட்டித் தெருவிலே போட்டுட்டா மட்டும் எல்லாம் தீர்ந்துடாது அப்பா. அப்புறம் பத்திரிகைக்காரன், போலீஸ்காரன், எல்லாருக்கும் நீங்கள் பதில் சொல்லியாகணும்.''

இப்பொழுது அம்மாவுக்கும் கோபம் வந்து விட்டது.

''உன்னைப் பெற்ற பாவத்துக்கு அதையும் செய்யடி. அவனைப் போலீஸில் கொண்டு போய் நிறுத்து. ஊர் சிரிக்கட்டும்.''

நான் மெதுவாகப் பாரதியின் கரத்தைப் பற்றிக் கொண்டேன்.

''பாரதி! யாரோ ஒருத்தன் நாக்கில் தேனைத் தடவிக் கொண்டு பேசினால் அவனை நம்பிக் கொண்டு அப்பாவைப் பகைத்துக் கொள்வதா? இது மாதிரி விஷயங்களில் இவ்வளவு அவசரம் காட்டக்கூடாது'' என்றேன்.

''நான் அவசரப்படுகிறேன் என்றாலும் இது தேவையான, பொருத்தமான அவசரம் அக்கா. அன்றாட வாழ்க்கையில் எந்தக் காரியம் நின்று நிதானமாக நடக்கிறது? அணுவும் சுழன்று கொண்டுதானிருக்கிறது. நான் நின்று விடலாம். ஆனால் காலம் அவசரம் அவசரமாக ஓடிக் கொண்டிருக்கும். அவர் நல்லவர்; யோக்கியமானவர். மனம் ஒத்துப் போன பிறகு என்ன இருக்கிறது? அப்பா தான் கல்யாணத்துக்குச் சம்மதம் தர மறுக்கிறார். நீயாவது எங்களை வாழ்த்து அக்கா.''

என் தங்கை பாரதியா பேசுகிறாள் இப்படி? நான் அசந்து போனேன்.......

அம்மா சொன்னாள்.

''பாரதி! வேண்டாமடி..... இதோ உன் அக்காளைப் பார். உன்னைவிட மூன்று வயசு மூத்தவள். அவளுக்கே இன்னும் கல்யாணமாகலே. நீ இப்படி அவசரப்பட்டுச் செய்துக்கிட்டா ஊரில் நாலு பேர்கள் கை கொட்டிச் சிரிக்க மாட்டார்களா?''

ஊஹூம் — பாரதியின் செவிகள் எந்த அறிவுரைக்கும் திறந்திருக்கவில்லை. அப்பா ஒரு பக்கம் குதித்தார்.

''தூ, தூ..... ஒழுக்கம் கெட்ட கழுதை. எல்லாரையும்விடக் காதல்தான் ஒசத்தியோ? மரியாதையாக வெளியே போயிடு.''

அப்பா போட்ட இரைச்சல் வீடே அதிர்ந்தது. அம்மா செயலிழந்து தூணோடு தூணாய் நின்று விட்டாள். அப்பாவின் ஆணையை மீறி நாவசைக்கும் தைரியம் எனக்கு மட்டும் இருக்கிறதா. என்ன? உடன் பிறந்த தங்கை ஒவ்வொரு படியாய் இறங்கி வெளியேறுவதைப் பார்த்துக் கொண்டு ஊமையாய்த்தான் நின்று கொண்டிருந்தேன்.

பாரதி போய் விட்டாள்.

ஒரே கணத்தில் ரத்தபாசத்தையும், பெற்றவர்களின் அன்பையும் தூள் தூளாக்கி விட்டுப் போய் விட்டாள். உறுதியாயும், தீர்க்கமாயும் பார்த்து, வளையாமல் பேசி, நிமிர்ந்த நடையுடன்தான் வெளியேறினாள். காதலைத் தன் உள்ளத்திலிருந்து வெட்டித் தள்ளிவிட அவளால் முடியவில்லை. பாரதி போன இரண்டு நாட்களுக்கெல்லாம் ஏதோ ஒரு கோயிலில் திருமணம் நடக்கப் போவதாகத் தகவல் வந்தது. அப்பா போகவில்லை; எங்களையும் போக விடவில்லை. எங்கள் மேல் சந்தேகப்பட்டுக் கொண்டு அன்று முழுதும் வாசல் திண்ணையிலேயே காவல் இருந்தார். கல்யாணக் கோலத்தில் வீட்டுக்கு வராவிட்டாலும், இந்தத் தெரு வழியாகவாவது போக மாட்டாளா, பார்க்க மாட்டோமா என்று நானும் அம்மாவும் சன்னலருகிலேயே காத்துக் கிடந்தோம். அவள் வரவில்லை. அப்புறம் அவளைப் பற்றித் தகவலே இல்லை. அம்மாதான் அடிக்கடி புலம்பிக் கொண்



டிருப்பாள். எங்கிருக்கி றாளோ என்ன ஆனாளோ என்று? ஆறு மாதங்கள் கழித்து இப்பொழுது தான் பாரோதியிடமிருந்து கடிதம் வந்திருக்கிறது.

நல்ல சேதிதான். பாரோதியும், அவள் கணவனும் பெங்களூரில் குடித்தனம் வைத்திருக்கிறார்களாம். இருவருக்கும் ஒரே ஆபீசில் வேலையாம். சந்தோஷமாக இருப்பதாகவும் தங்களைப் பற்றிக் கவலைப்பட வேண்டாமென்றும் எழுதியிருந்தாள்.

"வேணி! ஆபீசுக்கு நேரமாச்சே...... இந்தாடிபன் !....." என்று சொல்லிக்கொண்டே வந்த அம்மா என் கையிலிருந்த கடிதத்தைப் பார்த்துவிட்டு, "யாருடி எழுதியிருக்கா? உன் மாமாவா?" என்று வினவினாள்.



"என் மகன் இருமுனைத் தாக்குதலை ஒரே சமயத்தில் எப்படிச் சமாளிக்கப் போகிறானோ என்று கவலையா இருக்கு."
"என்ன உங்கள் மகன் ராணுவ வீரரா?"
"ஊஹும்! அவன் தனிக் குடித்தனம் போன இடத்துக்கு, என் மனைவியும் போயிருக்கிறாள்!"

நான் தலையசைத்து விட்டுக் கடிதத்தைப் படித்துக் காட்டினேன். நான் படிக்கப் படிக்க அம்மா அப்படியே உணர்ச்சிப் பிழம்பாகி விட்டாள். கன்னங்களில் தாரை தாரையாகக் கண்ணீர் வழிந்தது. தான் பெற்ற செல்வம் எங்கோ கண் காணாத இடத்தில் இருந்தாலும் நல்லபடியாக வாழ்வதைக் கேட்கும் போதுதான் ஒரு தாய்க்கு எவ்வளவு சந்தோஷம் ஏற்படுகிறது!

அம்மா கண்ணீரைத் துடைத்துக்கொண்டு, "அப்புறம் என்னடி எழுதியிருக்கா ? குமட்டல், வாந்தி ஏதாச்சும் வருதுன்னு எழுதியிருக்காளா? கல்யாணம் ஆகி ஆறு மாசமாகப் போகுதே. மக்கு சண்டை போடத்தான் தெரியுமே ஒழிய இந்த மாதிரி விஷயத்தையெல்லாம் எழுதணும்னு தெரியாது. ஏதோ நல்லபடியா இருக்காளில்லே, போதும்" என்றாள்.

ஹால் கடிகாரம் மணியொலி எழுப்பவே, "சரிம்மா, நான் போய் வரேன்" என்று புறப்பட்டேன்.

அம்மா என்ன நினைத்துக் கொண்டாளோ? "வேணி! நகையைத் தபால்லே அனுப்பலாமோ? யாரையாவது விசாரியேன்"— என்று கேட்டாள்.

"ஓ...... தாராளமாய்ப் பார்சல் பண்ணி அனுப்பலாம், அம்மா!" என்றேன்.

அம்மா பதில் சொல்லாமல் பழங்கால அறைக்குள் நுழைந்து ஏதோ பெட்டியைத் துழாவி இரண்டு ஜதை தங்க வளையல்களை எடுத்து வந்தாள்.

"இந்தா. இது அவள் பங்கு. அவளுக்காக தான் இது. ஒரு பித்தளை அண்டா, வெண்ணெய்த் தாழி, எவர்சில்வர் சொம்பு இன்னும் என்னென்னவோ சீதனமாய்க் கொடுக்கணும்னு இருந்தேன். சாமான்களையெல்லாம் அனுப்ப முடியாட்டாலும், இந்த வளையல்களையாவது அனுப்பிவை. இங்கே நாம மூணு பேர் உசிரோட இருக்கோம்னு சொல்லிக்கிட்டு அவள் கையிலே இது கிடக்கட்டும்."

அம்மாவுக்கு அழுகை மறுபடியும் பீறிட்டுக் கொண்டு வந்தது. நான் அந்த அழுகையைச் சமாளித்துக் கொண்டு புறப்பட்டேன்.

**ப**ஸ்ஸைப் பிடித்து ஆபீஸ் அருகிலிருந்த ஸ்டாப்பிங்கில் இறங்கிய போது, ஜெயிலில் நின்று கொண்டிருந்த ராமதுரை என்னை நோக்கிக் கையை ஆட்டியபடி விரைந்து வந்தார்.

"என்ன வேணி! இன்றைக்கு லேட்டாக வருகிறாய் போலிருக்கே?"

"அம்மாவுடன் கொஞ்ச நேரம் பேசிக் கொண்டிருந்து விட்டேன். அது இருக்கட்டும், எங்கே உங்கள் ஸ்கூட்டர் வாகனம்?" என்று கேட்டேன். ஸ்கூட்டர் இல்லாமல் அவரைப் பார்த்தது அதுதான் முதல் தடவை.

"ஆமாம். ஒரு சிம்பிள் பிராக்சர். வைத்தியத்துக்கு அனுப்பியிருக்கிறேன்." — அவர் சிரித்தார். பளீரென்ற பிரகாசமான சிரிப்பு. பெண்களுக்கு அமைய வேண்டிய அழகிய முத்துப் பற்கள் அவருக்கு. அவர் முகத்தை வெளிச்சம் போட்டுக் காட்டுவதே அந்தப் பற்கள்தான். ராமதுரை கண்ணியமானவர். நல்லவர். இந்தச் சிரிப்பு — இந்தப் பற்கள் தான் பொல்லாதவையாக இருக்கின்றன. என் உள்ளத்தை வழிப்பறி செய்ததும் இதுவே. ஹிப்னாடிசத்தில் மயங்கிய மாதிரி எங்கே என் வசமிழந்து விடுவேனோ என்று கூடச் சிலசமயம் அச்சப்படுவது உண்டு. அதனால்தான் இந்தச் சிரிப்பை நான் விரும்பிக் கொண்டே வெறுக்கிறேன்; ஆசைப்பட்டுக் கொண்டே பார்க்கப் பயப்படுகிறேன்!

நான் வேலை செய்து கொண்டிருந்த ஆபீஸ் ஹெட்கிளார்க்குக்குச் சிநேகமாம் இவர். கல்லூரிப் படிப்பை முடித்துவிட்டு வேலை தேடிக் கொண்டிருந்தார். வேலைக்கான விண்ணப்பங்களை டைப் அடித்துக் கொடுக்கும்படி ஹெட் கிளார்க்கைச் சிபாரிசு பிடித்துக் கொண்டு என் வீட்டுக்கு வர ஆரம்பித்தார். அப்புறம் வேலை கிடைத்த பிறகுகூட வலிய வந்து என்னிடம் பேச்சுக் கொடுத்தார். கடைசியில் சொல்லியே விட்டார், காதல் என்று.

நான்மட்டும் என்ன. இனிக்கும் அந்த மூன்றெழுத்துக்களை இதயத்தில் கிடத்தித் தாலாட்டுத்தானே பாடிக் கொண்டிருக்கிறேன் இத்தனை நாட்களும்?



ஸ்ரீ S. V. S. அய்யர் அவர்கள் குமாரர் சிரஞ்சீவி டாக்டர் V. S. அய்யர் D. A. (LOND) F. A. R. C. S. (ENG.) அவர்களுக்கும், பம்பாய் ஸ்ரீ M. S. அப்பாதுரை அவர்கள் குமாரத்தி சௌபாக்கியவதி டாக்டர் பிரேமா M. B. B. S.க்கும் பம்பாயில் சமீபத்தில் திருமணம் நடைபெற்றது.

என் தந்தையின் காதில் விஷயத்தைப் போட்டுச் சீக்கிரமே கல்யாணத்துக்கு ஏற்பாடு செய்ய வேண்டும் என்று பரபரத்த வரை நான்தான் அடக்கி வைத்திருக்கிறேன், 'காதல் என்ற வார்த்தையைக் கேட்டாலே பிசாசைக் கண்ட மாதிரி அப்பா அலறும்படி செய்துவிட்டுப் போயிருக்கிறாள் பாரதி, கொஞ்ச நாட்கள் போகட்டும்' என்று!

"என்ன வேணி, திடீரென்று யோசனை?"

நான் சிந்தனையிலிருந்து விடுபட்டேன். சட்டென்று எனக்கு வளையல்களின் ஞாபகம் வந்தது. ஆபீசுக்குள் நுழைந்துவிட்டால், 'லஞ்ச்' டைமில்தான் கொஞ்ச நேரம் கிடைக்கும். அதற்குள் இதைப் பார்சல் பண்ண முடியாதே...

"ராமதுரை! உங்களுக்குப் போஸ்ட் ஆபீசில் வேலை கிடைத்தது ரொம்பச் சௌகரியமாகப் போச்சு. பிளீஸ்! இந்த வளையல்களை நான் கொடுக்கும் விலாசத்துக்குப் பார்சல் பண்ணி அனுப்பி விடுகிறீர்களா?"

"ஓ...எஸ்! டெலிவரியே கொடுக்கச் சொன்னாலும் செய்கிறேன்."

"வேண்டாம். ரொம்ப தூரம். பெங்களூர்வரையில் நீங்கள் ரன்னர் வேலை பார்க்க முடியாது."

நான் சிரித்தேன். ராமதுரை வளையல்களைத் திருப்பித் திருப்பிப் பார்த்துவிட்டு "யாருக்கு?" என்று கேட்டார்.

ஒரு துண்டுச் சீட்டில் பாரதியின் விலாசத்தை எழுதிக் கொடுத்து, "என் தங்கைக்கு" என்றேன்.

"ஓ....ஓடிப்போன..."

வேகமாக வந்த கார் சரக்கென்று டயர் தேய நிற்பது போல் அவர் பேச்சு தடைப்பட்டு நின்றது.

"வெரி ஸாரி! உன் தங்கை இருக்குமிடம் தெரிந்து விட்டதா? எப்படிக் கண்டுபிடித்தீர்கள்?" என்று குழறினார்.

"உம். இன்றைக்கு அவளிடமிருந்தே கடிதம் வந்தது. எல்லாம் சாயந்திரம் விவரமாய்ச் சொல்கிறேன்." என்று பேச்சை முடித்துக் கொண்டு ஆபீசை நோக்கி விரைந்தேன்.

ராமதுரை என் தங்கையைப் பற்றி ஏதோ தப்புத்தண்டாவாகப் பேசிவிட்டது போல் தாழ்ந்த தலையுடன் நகர்ந்தார். எனக்குக் கோபமில்லை என்று நாலு தடவையாவது கையடித்துக் கொடுத்தால்தான் இனி அவரிடம் பழைய தெளிவு பிறக்கும்.

சாயந்திரம் ஆகட்டும்.

சாயந்திரம் சற்று நேரம் கழித்தே நான் வீட்டுக்குத் திரும்பினேன். வீட்டுக்குள் நுழையும்போதே உள்ளே யாரோ புது மனிதரின் குரல் கேட்டது. மாமாவின் குரல். ஊரிலிருந்து கடிதம் போடுவதற்குப் பதிலாக நேராகவே அவர் வர ஆரம்பித்திருக்கிறார் போலிருக்கிறது!

மாமாவின் குரலைத் தொடர்ந்து அப்பாவின் குரல் சற்றுச் சூடாகவே ஒலித்தது. ஏதோ சர்ச்சைக்குரிய விஷயத்தை எடுத்துக் கொண்டு அல்லது ஒரு விஷயத்தைச் சர்ச்சையாக்கிக் கொண்டு இருவரும் விவாதிக்கிறார்கள் என்று யூகித்துக் கொண்டேன். பேச்சு என்னைப் பற்றித்தான்.

"எத்தனை போட்டோ, எத்தனை ஜாதகங்கள் அனுப்பினேன். ஒன்றுக்கும் பதிலில்லை. வயசுப் பெண்ணை வீட்டில் வெச்சுக்கிட்டு இப்படியா ஒரு மனுஷன் கல்யாணத்தைப் பற்றிக் கவலைப்படாமலிருப்பார்?" என்றார் மாமா.

"ஆமாம். அப்படித்தான் இருப்பேன். கல்யாணத்துக்கு இப்போ என்ன அவசரம்? வேலைக்குப் போய் இப்போ நாலு மாசம் தான் ஆச்சு. குறைந்தது ஒரு நாலு வருஷமாவது வேலை பார்க்கட்டும். அப்புறம்தான் கல்யாணம்" என்றார் அப்பா உறுதி தொனிக்கும் குரலில்.

மாமா கேலியாகச் சிரித்தார்.

"நாலு வருஷங்களா? இதோ பாருங்க அத்தான். பாரதி ஒரு விநாடியிலே உங்களைத் தூக்கி எறிஞ்சுட்டுப் போனதையும் பார்த்துட்டீங்க. அதே மாதிரி வேணியும் நடந்து காட்ட எவ்வளவு நேரமாகும்? பாவம்! அது வாயில்லாப் பூச்சி. உங்க சொல்படியே நடக்கிறதாக வெச்சுக்கிட்டாலும் இப்படி நீங்க நாலு வருஷங்கள், எட்டு வருஷங்கன்னு தள்ளிப் போடறது நியாயமில்லே. பெண்ணைப் பெத்துட்ட பிறகு கல்யாணம் செய்து வைக்க வேண்டிய கடமையிலேயிருந்து நீங்க தப்பிச்சுக்க முடியாது. பணம் காசு கையிலே இல்லேன்னு சொல்றீங்களா? பரவாயில்லே. எல்லாம் நான் பார்த்துக்கறேன். அருமையான வரன், நல்ல உத்தியோகம்..."

"அவன் சீமைக்குப் போய்விட்டு வந்தவனாகவே இருக்கட்டும். அவன் இப்போ என் கிட்டே விலையாக மாட்டான். உனக்குத் தெரியாதப்பா என் மனசுக்குள்ளே நான் எதை எதையோ ஒளிச்சு வெச்சுக்கிட்டிருக்கேன். இதோ பார். இன்னிக்குச் சொல்றேன். எனக்கு ஆம்பிள்ளைப் பிள்ளைங்க மேலே ஆசை. எனக்கு ஆண் பிறக்கணும்னு நான் வேண்டிக்கொள்ளாத சாமியில்லே. ஆனா எனக்குப் பிறந்தது ரெண்டும் பெண் குழந்தையாப் போச்சு. அதுக்காக நான் கவலைப்பட்டேனா? அதுவுமில்லே. எதிர்வீட்டிலே ஒருத்தர் குப்புசாமின்னு பேரு. அவருக்கு இப்பத்தான் பெண் குழந்தை பிறந்திருக்குன்னு சேதி வந்தது. அவ்வளவுதான். ஆள் பேச்சு மூச்சில்லாமல் ரெண்டு நாள் கிடந்தார். அப்படியெல்லாம் நான் ஒன்றும் அழுமூஞ்சித்தனமாக இல்லே. எனக்கு ஆண் குழந்தை பிறந்திருப்பதாகவே நினைச்சுக் கொண்டாடினேன். வேணியையும் பாரதியையும் ஒரு குறையும் வைக்காம வளர்த்தேன். படிக்க வெச்சேன். என்னமோ கால வித்தியாசம்—ஒரு பொண்ணு என்னை உதறிவிட்டுப் போயிட்டது. வேணியும் அப்படிப் போயிடும்னு நான் சந்தேகப்படலே. என்னுடைய ஆசை என்னன்னா வேணி உத்தியோகம் பார்த்துச் சம்பாதிச்சுப் போடணும். அந்தச் சுகத்திலே நான் கொஞ்ச நாள் நிம்மதியாய் இருக்கணும். அவ்வளவுதான்." உணர்ச்சிப் பிரவாகத்தில் அதற்கு மேல் பேச முடியாமல் அப்பா திணறினார்.

மாமா இடத்தை விட்டு எழுந்தார்.

"இது ரொம்ப விசித்திரமான ஆசை, அத்தான். வெளியோட வாழ்க்கையையே பாழாக்கும் ஆசைன்னு கூடச் சொல்லு வேன். பெற்ற பெண்ணை உத்தியோகத்துக்கு அனுப்புவது கடமையோ இல்லையோ, கல் யாணம் செய்து வைப்பது மட்டும் ஒவ் வொரு தந்தைக்கும் உள்ள தவிர்க்க முடியாத கடமை. கூடிய சீக்கிரம் இதைத் தெரிஞ்சுக்கு விங்க..... நான் வரேன்......"

மாமா ஒரு வேளை சாப்பிடக்கூடத் தங்கவில்லை. மனத்தாங்கலுடன் ஊருக்குப் புறப்பட்டு விட்டார்.

அப்பாவின் உள்ளக்கிடக்கையை அவர் வாய் மூலமே தெரிந்து கொண்ட போது நான் அதிகமாக ஒன்றும் அதிர்ச்சி அடையவில்லை. அவர் என்னையும், பாரேதியையும் ஆண் பிள்ளைகள் போலத்தான் வளர்த்தார். உரிமை கொடுத்தார். வேலைக்கும் அனுப்பினார். ஆனால் நாங்கள் சம்பாதித்து ஆண் பிள்ளைகள் மாதிரி அவருக்கு உதவ வேண்டுமென்று உள்ளூற ஆசைப்பட்டிருக்கிறார் என்பது மட்டும் எனக்குத் தெரியாது. ஆனால் இந்த வகையில் அப்பாவின் ஆசையோடு என் எண்ணமும் இணைகோடாக இருந்தது யாருக்குத் தெரியும்?

வேலை கிடைக்காமல் வீட்டிலிருந்தபோது நான் தினமும் காணும் காட்சி ஒன்று.

சாயந்திரம் ஐந்து மணியானதும், தலை பளபள வென்று கட்டையாய், சிவப்பாய் ஏறக்குறைய அப்பா வயதுதான் இருக்கும். ஒருவர் கையில் வாக்கிங் ஸ்டிக்கும், முன்னணி யில் அல்சேஷன் நாயுமாகப் பீச்சுக்குப் போவார். உழைக்கக் கூடிய வயதுவரை உழைத்தாகி விட்டது. இப்பொழுது ஓய்வு. அமைதியான, ஆறுதலான வாழ்க்கையை

உடலும், உள்ளமும் நாடுகின்றன. அப்பாவுக்கும் அதே வயது, வழுக்கைத் தலை, சிவப்பு நிறம், எல்லாம்தான் வாய்த்திருக்கின்றன. ஏன் இவரையும் பீச்சுக்கு அனுப்பி வைக்கக் கூடாது என்று அடிக்கடி நினைத்துக் கொள்வேன்.

நான் வேலையில் சேர்ந்து முதல் மாதச் சம்பளம் வாங்கிய அன்று, அப்பாவிடம் பணத்தைக் கொடுத்து அவரை இனிமேல் வேலைக்குப் போய்க் கஷ்டப்பட வேண்டாமென்று சொல்ல வேண்டும் என்று நினைத்துக் கொண்டே வீட்டுக்கு வந்தேன். ஆனால் அதற்கு முன்பே அப்பா முந்திக் கொண்டு தம் வேலையை ராஜிநாமா செய்து விட்டு வந்திருந்தார்.

அம்மா கேட்டதற்கு, ''என் பெண் சம்பாதிக்கிறாள். எனக்கென்னடி தலையெழுத்து, சுவரில் ஏறிக் கொண்டு, மேஸ்திரிகளோடு மல்லுக்கு நிற்கணும்னு? இன்னிலேருந்து நான் ரிட்டயர்ட் ஆகிவிட்டேன்'' என்று சொல்லி விட்டுச் சிரித்தார்.

எனக்குத் திருப்தி – பெருமை – இனிமேல் அப்பாவும் பீச்சுக்குப் போவாரல்லவா!

வெளியே வானம் கருகருவென்று இருட்டிக் கொண்டு காட்சியளித்தது. சன்னலருகில் அமர்ந்து கனவேகமாகப் பொங்கிச் சுழன்று வரும் மேகப் படலங்களையே பார்த்துக்கொண்டிருந்தேன். தங்களைத் தண்ணீராய் அர்ப்பணித்துக் கொள்ளத்தான் எவ்வளவு வேகமாய் வருகின்றன! இன்னும் சற்று நேரத்துக்கெல்லாம் பெரு மழை தொடங்கிவிடும்.

அம்மா, டிபன் பொட்டலத்தைக் கட்டிக் கொண்டு தயாராய் வந்து விட்டாள் என்றாலும், ''இன்றைக்கு லீவு போட்டு விடேன். ரொம்ப மழை வரும் போலிருக்கே'' என்று சொல்லி, நான் ஆபீசுக்குப் போகாமல் தடுத்துவிடப் பார்த்தாள்.

மூன்றாவது வீட்டுக்குப் போய் – அங்கேதான் போன் இருக்கிறது–ஆபீசுக்குப் போன் பண்ணிச் சொல்லிவிடலாமா என்று கூட யோசித்தேன். ஆனால் ராமதுரையைப் பார்த்து விஷயத்தைச் சொல்லிவிட வேண்டுமென்ற அவசியத்தையும், கட்டாயத்தையும் நினைத்துக் கொண்டு, ''பரவாயில்லேம்மா – நான் போய்க் கொள்கிறேன்'' என்று கூறிவிட்டு, வெய்யிலுக்கோ மழைக்கோ சற்றும் பயப்படாத ஒரு கையகலக் குடையைத் தூக்கிக்கொண்டு நடந்தேன்.

வழக்கமான பஸ் ஸ்டாப்பில், ராமதுரை எனக்கு முன்பே அங்கு வந்து காத்திருந்தார். விஷயத்தை எப்படி ஆரம்பிப்பது என்று நான் முதலில் தயங்கிய போதிலும் பிறகு கடகட வென்று ஒப்பித்துவிட்டேன். அப்பாவின் ஆசை, அதற்கு ஆதரவாக நான் இருக்க வேண்டிய கட்டாயம் முதலிய எல்லா விஷயங்களையும். ராமதுரை பரிதாபமாக என்னைப் பார்த்தார்.

''வேணி, உன் அப்பாவின் போக்கைப் பார்த்தால் உன் கல்யாண விஷயமாக எந்த வித சிரத்தையும் எடுத்துக் கொள்ளப் போகிறவராகத் தெரியவில்லை. நீ அவருக்குக் கொஞ்சம் ஓய்வு கொடுக்க ஆசைப்பட்டாய். ஆனால் அவர் அந்த ஓய்விலேயே திளைக்க ஆரம்பித்து விட்டார். இந்தச் சோம்பேறி வாழ்க்கை அவருக்குப் பிடித்துப் போயிற்று. இனி யாருக்காகவும் – சொந்த மகளுக்காகக்கூட – தம் சுகத்தைத் துறக்க அவர் தயாராயில்லை. உன்னிடம் சொல்ல வேண்டாமென்று இருந்தேன் வேணி. உன் அப்பா ஷோக்குப் பேர்வழியாக ஆகிவிட்டார். பீச்சுக்கோ காலட்சேபத்துக்கோ போகவில்லை. சீட்டாடப் போகிறார். அதுவும் கடனுக்கு ஆடுகிறார். சீட்டாடித் தோற்ற வகையில் ஐந்நூறு ரூபாய் கடன்பட்டிருக்கிறார். உங்கள் எதிர்வீட்டு சாஸ்திரிகளை ப்ரோநோட்டு எழுதி வாங்கி வைத்திருக்கிறாராம். உன்னுடைய உழைப்பு, வருமானம், தியாகம் எல்லாம் இப்படித் தகாத வழியில் விரயமாகின்றன. இப்பொழுதாவது என் பேச்சைக் கேள். உன் தங்கை பாகீரதி புத்திசாலி. சரியான தருணத்தில் கத்திரித்துக் கொண்டு போய் விட்டாள். அந்தச் சாமர்த்தியத்தில் பாதியாவது உனக்கு இருக்க வேண்டாமா? பேசாமல் என்னுடன் வந்துவிடு. எத்தனையோ கோயில்கள், கல்யாண மண்டபங்கள் இருக்கின்றன.....''

நான் பலமாகத் தலையசைத்தேன்.

''முடியாது ராமதுரை. அது அவ்வளவு சுலபமான காரியமல்ல. அப்பா இளமையில் ரொம்பக் கஷ்டப்பட்டவர். அணு அணுவாய்த் தேய்ந்தவர். தாம் எப்படியெல்லாம் வாழ வேண்டும் என்று ஆசைப்பட்டாரோ அதையெல்லாம் எங்களை வளர்க்கும் முயற்சியில் விலக்கி விட்டவர். அவர் கற்பனை செய்த வாழ்க்கையும், சுகமும் இத்தனை நாட்கள் கழித்து இப்பொழுது தான் அவருக்கு வாய்த்திருக்கின்றன. அதை அவர் அநுபவிக்க நான் உதவக் கூடாது என்பது உங்கள் வாதமா? பெண்களை பெற்றவர்களுக்கு எப்பொழுதும் ஒரு சுமைதான் என்பார்கள். அதைக் கொஞ்சம் மாற்றி அப்பாவுக்கு நான் உபகாரமாய் இருக்கப் போகிறேன். இந்த முயற்சியில் எனக்குக் கல்யாணமே ஆகாவிட்டாலும் கூட நான் கவலைப்படப் போவதில்லை. இது தான் என் வரையில் பளிச்சென்று தோன்றும் நிதர்சனமான நியாயம்......''

ராமதுரை மௌனமாக ஸ்கூட்டரை 'ஸ்டார்ட்' செய்துகொண்டு போகிறார். என் நியாய வாதம் அவருக்குப் புரியச் சற்று நேரமாகும்; அல்லது புரியாமலேயும் போகலாம்.

காலம் சுழலுகிறது. அப்பா சீட்டாடிவிட்டு இரவு ஒரு மணிக்கும், சில சமயம் காலையிலும்கூட வீட்டுக்கு வருகிறார். ''சம்பளத்தை முழுசாக அப்படியே அவர் கையில் கொடுக்காதேடி'' என்று அம்மா ரகசியமாக உபதேசம் செய்கிறாள். ஓடிப் போன பாகீரதியிடமிருந்து குழந்தை பிறந்திருப்பதாகத் தகவல் வருகிறது. கடைசி கடைசியாக ராமதுரை தம் திருமண அழைப்பிதழ் ஒன்றை எனக்கு அனுப்பி வைக்கிறார்.

நான் மௌனமாக எல்லாவற்றையும் ஏற்றுக் கொள்கிறேன். ஆமாம்! மௌனமே இப்பொழுது எனக்கு ஒரு சுகமாகிவிட்டது.

# என்ன செய்யலாம்?






















சிந்திக்கவும் பிறகு 69-ம் பக்கம் பார்க்கவும்

## "பிறருக்காகக் கவலைப்படுவது என் தொழில். ஆனால் எனக்காகக் கவலைப்படுவது...?"

"இந்தத் தொழிலில், எனது முதுமைக் காலத்திற்குத் தேவையான பணத்திற்கு நான்தான் வழி செய்துகொள்ள வேண்டும். நான் வேலையிலிருந்து ஓய்வு பெறும்போது பிராவிடண்ட் பண்டோ, கிராஜுவிடியோ அல்லது பென்ஷனோ எவரும் எனக்குத் தரமாட்டார்கள்.

இந்தப் பிரச்சனை என்னைப் பெரிதும் வாட்டி வந்தது. இறுதியில், ஆயுள் இன்சூரன்சு வழங்கும் **எண்டௌமெண்ட் அஷ்யூரன்ஸ் பாலிசி** என்ற உருவில் தீர்வு கிடைத்தது."

டாக்டர்கள், வக்கீல்கள் போன்று தனித்தொழிலில் ஈடுபட்டுள்ளவர்கள், தங்கள் ஓய்வுக்காலத்திற்குத் தேவையான பணத்திற்குத் தாங்களே வழி வகை செய்துகொள்ள வேண்டியவர்களாகிறார்கள். தங்கள் வருங்காலம் வசதியுடனிருக்க **எண்டௌமெண்ட் அஷ்யூரன்ஸ் பாலிசி** மூலம் அவர்கள் உறுதி கொள்ளலாம். எடுத்துக்காட்டாக, உங்களுக்கு வயது 30 என வைத்துக் கொள்வோம். நீங்கள் ரூ. 30,000த்திற்கான, இலாபத்துடன்கூடிய ஒரு எண்டௌமெண்ட் அஷ்யூரன்ஸ் பாலிசியினை 30 ஆண்டுக்காலத்திற்கு எடுப்பின் மாதந்தோறும் நீங்கள் செலுத்துவது ஏறத்தாழ ரூ.90 பாலிசிக்காலம் முழுவதும் கணிசமான வரிச்சலுகைகளையும் நீங்கள் பெறுகிறீர்கள். 60 வது வயதில், பாலிசியின் பணத்தை இலாபத்துடன் சேர்த்துப் பெற்று உங்கள் ஓய்வுக்காலத்தைத் தொல்லையின்றி நிம்மதியாகக் கழிக்கலாம். பாலிசிக் காலம் முடிவதற்குள் உங்களுக்கு ஏதேனும் நேரிடின், உங்கள் குடும்பம் பாலிசியின் முழுத் தொகையான ரூ 30,000த்தையும் அத்துடன் சேர்ந்துள்ள போனசுகளையும் பெறும். இதற்குச் செலுத்தப்பட்ட ப்ரீமியங்கள் அளவுகோலாகா.



உங்கள்
குடும்பத்தின் வருங்காலப்
பாதுகாப்பிற்கு
**ஆயுள் இன்சூரன்சு**

ASP/LIC/2-79




அத்தியாயம் 5

## "எங்கே போவேன்?"

அத்தான் தங்கப்பன் தன்னிடம் அன்பாகத்தானிருக்கிறார் என்பது செல்லத்துக்குப் புரிந்தது, நன்றாக. ஆனால் அன்புக்கும் காதலுக்கும் இடையில் உள்ள நுண்ணிய வேறுபாடுகளை அறியாதவள் அல்ல அவள். அத்தானுக்குத் தன்னைக் கல்யாணம் செய்து கொள்ள இஷ்டமா இல்லையா என்பதே புதிராக இருக்கிறது என்று தன் அம்மாவிடமோ, மாமி தாமரையிடமோ மனம் விட்டு எப்போதாவது அவள் கூறினாலும் அவர்கள் ஒருமிக்க ஒரே பதிலைத்தான் சொன்னார்கள். 'தங்கப்பன் போக்கே அலாதிதான், கல்யாணமானால் எல்லாம் சரியாகப் போயிடும் பார்!' செல்லம் இதனை முழு மனத்துடன் நம்பினாள். தங்கப்பனைத் திருமணம் செய்து கொள்வதைத் தன்னுடைய பெரும் பாக்கியமெனக் கருதினாள். ஆனால் அந்தக் கல்யாணம் எப்போது நடக்கப் போகிறது? சதா இதே சிந்தனைதான் அவளுக்கு.

அன்று நேராக மாடிக்குப் போய் மிருணாளினிக்காகக் காத்திருக்கத் தொடங்கவில்லை, தங்கப்பன். வழக்கத்துக்கு மாறாகக் கீழேயே இங்குமங்குமாய் வளைய வந்து கொண்டிருந்தான். செல்லத்தினிடம் அவ்வப்போது பேச்சுக் கொடுத்துக் கொண்டிருந்தாலும் அவன் மனம் அதில் இல்லை. வேறு ஏதோ நினைவாகவே தன்னுடன் வார்த்தையாடிக் கொண்டிருக்கிறார் அத்தான் என்று செல்லத்தால் உணர்ந்து கொள்ள முடிந்தது. மிருணாளினி வந்ததும்தான் அவன் முகம் மலர்ந்தது. அதைக் கண்டு செல்லத்தின் உள்ளத்தில் கேள்விக்குறியொன்று விசுவரூபமெடுத்தது.

மிருணாளினியிடம் தான் பழகும் விதத்தைச் செல்லம் நல்லபடியாக எடுத்துக் கொள்ள வேண்டுமே என்பது குறித்து அதிகமாகக் கவலைப்படவில்லை தங்கப்பன். மற்றவர்கள் தன்னைப் பற்றி என்ன நினைப்பார்களோ என்று அஞ்சி அவன் எந்தக் காரியத்தையும் செய்வதோ, செய்யாமலிருப்பதோ இல்லை. மிருணாளினியைச் செல்லத்துக்கு அறிமுகம் செய்து வைக்க வேண்டியது அவசியம்தானென்றாலும் அதனை ஓர் உறுத்தலான விவகாரம் எனக் கருதினான் அவன். ஆகவே அதனைச் சீக்கிரமாக முடித்துக் கொண்டு விடவும் விரும்பினான். அதற்கப்புறம் தான் என்றும் போல் அவளுடன் தன் அறையில் அளவளாவிக் கொண்டிருக்கலாம். ஆனால் அன்றைக்கென்று பார்த்து ஏனோ மிருணாளினி வரத் தாமதமாயிற்று. ஒவ்வொரு நிமிஷமும் அவன் பரபரப்பும் அதிகமாயிற்று. இப்படித் தான் நிலைகொள்ளாமல் தவிப்பது செல்லம் தன்னைக் குறித்துச் சந்தேகப்பட வாய்ப்பளித்ததாகும் என்று தங்கப்பன் யோசிக்கவில்லை. சற்று நேரம் கழித்து மிருணாளினி வந்தாள். அவளைக் கண்டதும் தான் வேண்டாத இந்தச் சில்லறைத் தொந்தரவுக்குத் துரிதமாக முடிவு கட்டும் தருணம் நெருங்கிவிட்டதென்பதால் அவன் மகிழ்ச்சியுடன் அவளை வரவேற்றான். திடுமென அத்தானின் போக்கில் ஏற்பட்ட மாறுதலையும் அதற்குக் காரணமானவளையும் ஒரே சமயத்தில் பார்த்துச் செல்லம் சஞ்சலம் அடைந்தாள்.

நிலைமையை அழகாகவும் சாமர்த்தியமாகவும் சமாளிக்க முற்பட்டவள் பெண்மையின் இயல்பறிந்த மிருணாளினிதான்.

''இவள்தான் செல்லம்'' என்று தங்கப்பன் கூற ஆரம்பித்து உறவுமுறையை விளக்குவதற்கு முன்னமேயே மிருணாளினி, ''எனக்குத் தெரியுமே! உங்கள் அத்தை மகள்! தினம் ஒரு தடவையாவது மாதாஜி

உன்னைப் பற்றி என்னிடம் சொல்லாமல் இருந்ததில்லையே'' என்று குதூகலத்துடன் செல்லத்தின் கரங்களைப் பற்றிக் கொண்டாள்.

''அது சரி, உங்கள் முறைப் பெண் இத்தனை அழகாயிருப்பாளென்று சொல்லவேயில்லையே நீங்கள்? சண்டை பிடிக்கப் போகிறேன், நான் உங்களிடம்!'' என்றாள் தங்கப்பனைப் பார்த்து.

இந்த அபரிமிதமான அன்பைக் கண்டு கொஞ்சம் வெலவெலத்தே போனாள் செல்லம். இருந்தாலும் மரியாதைக்கு ஏதேனும் மறுமொழி கூற நினைத்தவள் போல், ''உங்களை விடவா ஒருத்தி அழகாயிருக்க முடியும்?'' என்று கேட்டாள் பெருமையும் அடக்கமும் வெட்கமும் குழைத்த குரலில். அதே நேரத்தில் தங்கப்பனை ஓரக்கண்களால் நோக்கவும் செய்தாள். அவனோ மிருணாளினி நிமிஷமாகச் செல்லத்திடம் ஒட்டிக் கொண்டு விட்ட நயத்தைப் பார்த்துப் பிரமித்து நின்று கொண்டிருந்தான்.

''அடேயப்பா! 'நான் அழகு என்பது மட்டுமில்லை; உன்னை விடக்கூட நான் அழகியாக்கும்!' என்று என்னை மட்டம் தட்டுவது போல் இந்தப் பொல்லாதவள் சொல்லாமல் சொல்லிக் காட்டுவதைப் பார்த்தீர்களா ?'' என்றாள் மிருணாளினி தங்கப்பனிடம். செல்லத்தின் கன்னத்தை அன்புடன் இலேசாகக் கிள்ளியபடியே, ''உங்கள் முறைப் பெண் உங்களுக்கும் மேலே சாமர்த்தியசாலிதான்'' என்று கூறினாள்.

''போதும், போதும்! ரொம்பப் புகழாதீங்க! அவ நிஜமாகவே தான் ரொம்பக் கெட்டிக்காரத்தனமா பேசிட்டதா நினைச்சுக்கிடுவாள். கர்வம் தலைக்கேறிடும். நாம மாடிக்குப் போவோமா?''

செல்லம் அவனை ஏக்கத்துடன் ஏறிட்டு நோக்கினாள். 'இத்தனை வருஷங்களாகியும் இன்னுமா என்னைப் புரிந்து கொள்ளவில்லை நீங்கள்?' என்று விசனத்துடன் கோருவது போலிருந்தது அந்தப் பார்வை. 'இல்லையானால் கர்வம் தலைக்கேறி விடும்' என்று குத்தலாகக் கூறுவதற்கும், 'நாம போவோமா மாடிக்கு' என்று பிரித்துப் பேசுவதற்கும் என்ன அர்த்தம்? இந்த எண்ணம் தோன்றியவுடனே அதனை அழித்தும் விட்டாள் செல்லம். ஏதோ பேச்சுவாக்கில் அத்தான் கூறியதைப் பெரிதுபடுத்தக் கூடாதெனச் சமாதானம் செய்து கொண்டாள் தன் மனத்தை.

மிருணாளினி அவன் பேச்சைக் காதிலேயே வாங்கிக் கொள்ளாத மாதிரியாகச் செல்லத்திடம், ''மாதாஜிக்கு ரொம்ப ஆசை, தன் மகன் உன் கழுத்திலே தாலி கட்டிப் பார்க்க வேண்டும் என்று. இவர் என்னடாவென்றால் எப்போ பார்த்தாலும் ஃபாக்டரியை விட்டால் அரசியல் தத்துவங்கள் என்றும் அரசியல் தர்க்கங்களை விட்டால் ஃபாக்டரியில் சிக்கல்கள் என்றும் பிராணனை விட்டுக் கொண்டிருக்கிறார்'' என்றாள்.

''உங்களைப் பற்றியும் மாமி நிறையச் சொல்லியிருக்காங்க எனக்கு'' என்றாள் செல்லம் உபசாரமாக.

''தெரியுமே! கதை கதையாகச் சொல்லியிருப்பாங்களே! மாதாஜிக்கு என்னைக் கண்டாலே பயம். அவர் மகனைக் கடித்துச் சாப்பிட்டு விடுவேன் நான் என்று நினைத்துக் கொண்டிருக்கிறார், அவர். பாவம்! உனக்குப் போட்டியாக நான் முளைத்திருக்கிறேன் என்று எண்ணிக் கொண்டிருக்கிறார்! அப்படித்தானே ?''

செல்லத்துக்குப் பகீரென்றிருந்தது. ''இல்லையே ! அப்படி யொன்றுமில்லை'' என்று அவள் கூறியது அப்பா குதிருக்குள் இல்லை என்பது போல் முழுப் பொய்யாகத்தான் தொனித்தது.

மிருணாளினி கலகலவென்று இயல்பாகச் சிரித்தாள். தங்கப்பனுக்கோ தன் தாயார் மீதும் செல்லத்தின் மீதும் கோபம் கோபமாக வந்தது. செல்லத்தைப் பார்த்து ஒரு முறை கண்களை அகலத் திறந்து விழிகளை உருட்டி விழித்தான், மிருணாளினி அறியாதவாறு. பின்னர் மிருணாளினியிடம், ''அவங்க ரெண்டு பேருக்குமே கல்வி அறிவோ, நாகரிகப் போக்கோ அதிகமாகக் கிடையாது. வெட்டியாகப் பொழுது போக்க



எதையாவது இல்லாத கற்பனைகளையெல்லாம் பண்ணி வம்பு பேசிக்கிட்டிருப்பாங்க. அதை ஒண்ணும் நீங்க பொருட்படுத்த வேண்டாம்'' என்றாள்.

அத்தான் தன்னை அவமானப்படுத்தி விட்டதாகக் கூனிக் குறுகிப் போனாள் செல்லம், அதிலும் நேற்று வந்த யாரோ ஒருத்தியின் முன்னிலையில்! அதே சமயத்தில் அவன் கோபத்துடன் பார்த்து விழித்தது வேறு அவளுக்கு அச்சத்தைத் தந்து வயிற்றைக் கலக்கியது. மிருணாளினி தன்னைப் பற்றி இருந்த இடம் எரிச்சலெடுத்து வேதனைப்படுவது போல் தோன்றியது. ''நீங்க மேலே போங்க. நான் டிபன் காப்பி எடுத்துக்கிட்டு வரேன்'' என்று கூறித் தன்னை விடுவித்துக் கொண்டு சமையலறையை நோக்கி நடந்தாள் அவள். அவர்கள் எதிரே சாதாரணமாக நடந்தவள் மறைவில் வந்து சேர்ந்ததும் துவண்டு சரிந்தாள். குமுறிக் கொண்டு வந்த அழுகையைக் கட்டுப்படுத்த அவளால் இயலவில்லை. சற்று நேரம் பொறுத்து மெல்ல எழுந்து கண்ணீரை அடிக்கடி துடைத்து விட்டுக் கொண்டே ஒரு நீளமான பெரிய தட்டில் இரண்டு பேர்களுக்குக் காப்பி டிபனை எடுத்து வைத்தாள்.

இந்தச் சமயத்தில் கோயிலுக்குப் போய்த் திரும்பிய தாமரை உள்ளே நுழைந்தவாறே, ''செல்லம்! யாருக்கு டிபன் காப்பி யெல்லாம்? ஏக தடபுடலா யிருக்குதே!'' என்றாள். இன்னாருக்கென்று விவரம் கேட்டறிந்ததும், ''இத்தனை நாட்களா என் கையாலே அவளுக்குப் பச்சை தண்ணிகூடக் கொடுத்துப் பழக்கலே! நீ இங்கே வந்து நிலைமையைச் சீராக்குவேன்னு பார்த்தா இன்னும் மோசமாக்கிடுவே போலிருக்கே!'' என்று அலுப்புடன் கடிந்து கொண்டாள்.

''பரவாயில்லே மாமி!'' என்றாள் செல்லம். ''நீங்க வயசானவங்க; உபசாரம் பண்ணலேன்னு தப்பா நினைச்சுக்கிட மாட்டாங்க. ஆனால் நான் வந்ததுக்கப்புறமும் அப்படியே இருக்கலாமா? அத்தான் நான் அவரைச் சரியா கவனிக்கிறதில்லேன்னு வருத்தப்பட்டுக்கிட மாட்டாரா?'' என்று கூறித் தட்டுடன் நடந்தாள் செல்லம்.

பதிலுக்கு அவள் காத்திராத போனாலும், ''நீ என்ன வேலைக்காரியா? அந்த ராணி இங்கே வந்து சாப்பிட்டு விட்டுப் போகக் கூடாதா?'' என்று தாமரை முணுமுணுப்பது அவள் செவிகளில் விழாமலில்லை.

மாடி அறையில் அவர்கள் உரக்கச் சிரிக்கும் ஒலி படிகளில் ஏறும்போதே செல்லத்துக்குக் கேட்டது. அவற்றிலும் தங்கப்பன் மனம் விட்டுப் பெரிதாகச் சிரிக்கும் ஓசை மட்டும் தனியே பிரிந்து வந்து செல்லத்தைச் சுற்றிச் சூழ்ந்தது. அத்தானின் மகிழ்ச்சியில் தன்னை மறந்தாள் செல்லம். சற்றுமுன் அவளுக்குத் துயர் தந்த அவனுடைய வார்த்தைகளை மறந்தாள். அவன் யாருடன் சேர்ந்து எதற்காகச் சிரிக்கிறான் என்ற அக்கறைகூட இல்லை அவளுக்கு. அத்தானின் நகைப்பொலி மட்டுமே அவள் இதயத்தை நிறைத்துஇன்பத்தில் ஆழ்த்தியது.

இரண்டு கரங்களாலும் தட்டை ஏந்திய படி உள்ளே நுழைந்தவள் தங்கப்பன் தரையில், மிருணாளினியின் காலடிகளில் உட்கார்ந்து அவளை அண்ணாந்து ஆர்வத்துடன் பார்த்தபடி இருப்பதையும் கட்டிலில் அமர்ந்திருந்த மிருணாளினி தன் தொடைகளில் முன்னங்கைகளை ஊன்றியபடி குனிந்து அவனிடம் அன்னியோன்னிய பாவத்துடன் ஏதோ கூறிக் கொண்டிருப்பதையும் கண்டாள். திகைத்தாள். 'அத்தானா இது? தன்மானம் மிக்கவர்; சுயகௌரவம் பாராட்டுறவர்; உறுதியான உள்ளம் கொண்



டவர் என்றெல்லாம் தான் நினைத்து வந்த அத்தானா இப்படித் தம்மைத் தாமே ஒரு பெண்ணெதிரே தாழ்த்திக் கொள்கிறார்?'

''என்ன, அப்படியே பிரமிக்கப் போய் நிக்கறே? அந்த மேஜை மேலே வைச்சுட்டுப் போ'' என்றான் தங்கப்பன்.

''போ! போ! போ!'' அத்தான் கூறிய 'போ' என்ற ஒரு வார்த்தை இரண்டாகவும் இரண்டு நாலாகவும், நாலு எட்டாகவும் அப்படியே வளர்ந்து இரண்டொரு விநாடிகளில் ஆயிரமாயிரமாகப் பெருகிச் செல்லத்தைச் சுற்றிச் சூழ்ந்து அவளை இம்சித்து விரட்டி அடித்தது அங்கிருந்து.

## அத்தியாயம் 6

# நலிந்த நெஞ்சம்

சத்தியபுரிக்குச் செல்லம் வந்ததும் வராததுமாகத் தாமரை அவளிடம், ''சூரியன் உதயமாக மறந்தாலும் மறக்கலாம். அந்தப் பொண்ணு நாள் தவறாமல் இங்கே வராமலிருக்கிறதில்லே'' என்று ஆரம்பித்து ரொம்பக் கவலையுடன் தங்கப்பனையும் மிருணாளினியையும் பற்றி அவளிடம் கூறியிருந்தாள். ஆனால் அவள் சொன்னவற்றில் எதையுமே செல்லம் பொருட்படுத்தவில்லை. 'இதென்ன அதிசயம் இந்த நாளில்? அத்தான் படித்தவர், தொழிலதிபர், அரசியல்வாதி. பொது வாழ்வில் ஈடுபட்டவர்களுக்கு எத்தனையோ சிநேகங்கள் இருக்கும். நாலு பேர்களோடு பேசிப் பழக வேண்டிய அவசியமிருக்கும். இதைப் போய்ப் பிரமாதப்படுத்தலாமா?' என்றுதான் நினைத்து சமாதானப் படுத்திக் கொண்டாள். 'இதற்குத்தான் அடுப்பங்கரை மனப்பான்மை என்று பெயர் சூட்டுவார் அத்தான்!'

ஆனால் இந்த மன நிலை அதிக நேரம் நீடிக்கவில்லை அவளிடம். மாலையில் அத்தானிடம் குடிகொண்டிருந்த ஒரு பரபரப்பையும் பிறகு மிருணாளினி கண்களுக்குத் தென்பட்டதும் அவரிடம் உண்டான மகிழ்ச்சிகரமான மாறுதலையும் கவனித்த அவள் உள்ளத்தில் ஒரு சலசலப்புத் தோன்றி விட்டது. அதன் பிறகு எதுவுமே அவளுக்கு இயல்பாகப் படவில்லை. எல்லாமே தனக்குப் பாதகமாக, தனக்குத் துயரம் தரவென்றே நடப்பது போலிருந்தன.

காதலால் கனிந்துள்ள செல்லத்தின் உள்ளம் ஒருவேளை மிக எளிதாகப் புண்பட்டுத் துயரடையலாம். அதற்கு இடமளிக்கக் கூடாது என்பதற்காகவே மிருணாளினி அவளிடம் விழுந்தடிப் போதில் சிநேகத்தை வளர்த்துக் கொண்டு அன்பாகச் சிரித்த முகத்துடன் பேசினாள். ஆனால் அதையும் சரியான விதத்தில் செல்லத்தினால் ஏற்றுக் கொள்ள முடியவில்லை. சஞ்சலமும் சந்தேகமும் குடிகொண்ட அவள் மனத்துக்கு அவர்கள் சாதாரணமாகப் பேசுவது எல்லாமே விபரீத அர்த்தங்களில் தொனித்தன. மிருணாளினி தன்னைப் புகழ்வது போல் இகழ்வதாகப்பட்டது. ஆசையோடு இழைவது போல் வேஷம் போடுகிறாளென்றும் உண்மையில் தன்னைக் கேலி செய்து மட்டம் தட்டுவதுதான் அவளுடைய நோக்கம் என்றும் நினைத்தாள்.

தங்கப்பனுடைய செயல்கள், சொற்கள் எல்லாமே அவளுக்குத் தவறுதலாகத் தோன்றின. அப்படி அவன் தன்னிடம் பேசவும் நடந்து கொள்ளவும் காரணம் மிருணாளினிதான்; அவள்தான் அத்தானைக் கைக்குள் போட்டுக் கொண்டு அவரை அடியோடு மாற்றி விட்டாள் என்றெல்லாம் கற்பனையில் ஈடுபட ஆரம்பித்து விட்டாள். மிருணாளினியை வெறுக்கவும் தொடங்கி விட்டாள். அத்தான் தன்னை இதைவிடக் கடுமையான வார்த்தைகளால் தன் பெற்றோர் எதிரிலும் பிறர் முன்னிலையிலும் இதற்கு முன்னால் பல தடவைகளில் கடிந்து கொண்டும் கிண்டல் செய்து வேடிக்கை பார்த்தும் இருக்கிறாரே என்பதொன்றும் இப்போது அவளுக்கு ஞாபகத்துக்கு வரவில்லை.

தங்கப்பன் டிபன் காப்பியை, 'மேஜை மீது வைத்து விட்டுப் போ' என்றது அவள் மனமுடைந்து போக விழுந்த கடைசிப் பேரிடியாக விளங்கியது. 'ஏன் நீங்கள் இருவரும் அந்தரங்கமாகப் பேசுமிடத்தில் நான் இருக்கக் கூடாதாக்கும்?' என்று குமுறிய நெஞ்சம் அடுத்தாற்போல் 'இப்படிப் போ போ போ என்று என்னை விரட்டி அடித்தால் நான் எங்கே போவேன் அத்தான்?' என்று புலம்பி அழுதது. ஆனாலும் தன் துன்பத்தை வெளிப்படையாகக் காண்பித்துக் கொள்ளவில்லை அவள். அவர்களுடைய அந்த அரசியல் தர்க்கங்களிலும் சர்ச்சைகளிலும் தனக்கு நாட்டமிராது, இங்கேயே இரு என்று தங்கப்பன் கூறியிருந்தாலும் தனக்கு இருப்புக் கொள்ளாது என்பதை உணரப் பேதலித்துப் போன மனம் இடம் தரவில்லை.

அன்று முதல் பலவிதமாகத் தன்னை வாட்டி வதைத்துக் கொள்ள ஆரம்பித்தாள் அந்தப் பேதை. அவர்கள் கேட்காத போதே தானாகவே டிபன் காப்பியை மாடிக்குக் கொண்டு போவாள். புன்னகையுடன் குழைந்து அதைச் சாப்பிடுமாறு கேட்டுக் கொள்வாள். ஒரு நாள், ''அக்கா! உங்களுக்காக ஸ்பெஷலா பெங்காலி ஸ்வீட் செய்திருக்கேன். செங்கையில் எங்களுக்கு மூணாவது வீட்டிலே கல்கத்தாவிலேயிருந்து ஒரு குடும்பம் வந்து குடியேறியிருக்கு. அவங்ககிட்டேதான் இதைப் பண்ணக் கத்துக்கிட்டேன்'' என்றாள். ரசகுல்லாவை மிருணாளினி ருசி பார்த்து விட்டுத் தங்கப்ப

விடம், "நீங்கள் ரொம்ப அதிர்ஷ்டக்காரர். நான் ஆண் பிள்ளையாகப் பிறந்திருந்தால் இந்நேரம் செல்லத்தை உங்களிடமிருந்து கொத்திக் கொண்டு போய்விட்டிருப்பேன்" என்றாள்.

"அக்கா! இங்கே கொல்லையில் மாடு கட்டியிருப்பதால் நல்ல பால் கிடைச்சது. கலபமா செய்துட்டேன். இருந்தாலும் உங்களோட இனிமையான பேச்சுக்கு ஈடாகுமா இந்த ஸ்வீட்?" என்று கூறிவிட்டு இப்பால் வந்தாள் செல்லம். அவர்கள் கண்களிலிருந்து தன்னை மறைத்துக் கொண்டு உதட்டைக் கடித்தபடி விசும்பினாள். 'நீ என்ன வேலைக்காரியா? வேணுமானா அந்த ராணி கீழே இறங்கி வந்து சாப்பிட்டு விட்டுப் போகட்டுமே' என்று தாமரை என்றோ கூறியது இன்றும் அவள் செவிகளில் ஒலித்தது. வெடித்து விடும் போலிருக்கும் நெஞ்சை அழுத்திப் பிடித்துக் கொண்டு தள்ளாடியபடி நடந்து சென்றாள்.

மிருணாளினி சில தினங்களில் வழக்கத்தை விட முன்னதாகவே வந்து செல்லத்துடன் பேச்சுக் கொடுக்க முற்படுவாள். தங்கப்பன் தொழிலகத்திலிருந்து திரும்பியிருக்க மாட்டான். "நீங்க மாடிக்குப் போய் ஏதாவது புத்தகத்தைப் புரட்டிக்கிட்டு இருங்க, அத்தான் இப்போ வருகிற நேரம்தான்" என்பாள் செல்லம்.

"இல்லே செல்லம், உன்னிடம்தான் பேசப் போகிறேன் நான் இன்றைக்கு" என்றாள் மிருணாளினி ஒரு தினம்.

செல்லம் சிரித்துக் கொண்டே, "நான் பேசுவதற்கு என்ன இருக்கிறது அக்கா? எனக்கு என்ன தெரியும்?" என்று கூறி உள்ளே ஏதோ காரியம் இருப்பதாகப் பாவித்து மெல்ல நழுவி விட்டாள். பிறகு, 'நான் அசடுதானே? கல்லூரியா காலேஜா எதைக் கண்டேன்? ஸ்கூல் பைனல் படிப்பும் ஒரு படிப்பா? இரண்டு வார்த்தைகள் கலகலப்பாகப் பேசத் துப்பில்லாதவள் நான்' என்று தன்னைத் தானே வருத்திக்கொண்டாள்.

இப்படியே நாளுக்கு நாள் செல்லத்தின் மனவேதனை வளரலாயிற்று.

இவ்விதம் நலிந்து போன நெஞ்சத்துடன் நடமாடிய அவளைப் பொறாமை வெகு காலமாகப் பிடித்தது. பலவீனமடைந்த உடலில் நோய் எளிதாகப் பற்றிக் கொள்வது போல. அந்தப் பொறாமை ஜுர வேகத்தில் அதிகரித்துக் கொண்டே போக அனலாகக் கொதித்தது அவள் மனம். ஜன்னி கண்டு பிதற்றுவது போல் அவளும் அவர்கள் ஏதேதோ காதல் மொழிகள் பேசிக் கொஞ்சிக் குலாவுவதாக உளறலான சிந்தனைகளில் ஈடுபட ஆரம்பித்து விட்டாள்.

அந்தரங்கமாக அவர்கள் அன்பு மொழி பேசிச் சிரித்து மகிழ்வதை மறைந்திருந்து ஒட்டுக் கேட்க வேண்டும் என்ற அடக்க முடியாத ஆசையும் கிளர்ந்தெழுந்தது அவளிடம். முதலில் ஓரிரு தினங்கள் அப்படி ஒட்டுக்










கேட்டதில் அவளுக்கு ஏமாற்றமே உண்டாயிற்று. அவர்கள் பேச்சில் ஏதேதோ அரசியல் தத்துவங்கள் அடிபட்டன. அவை அவளுக்கு சுவாரஸ்யமாக இல்லை. ஆனாலும் அதற்குள் அவளை ஒட்டுக் கேட்கும் பழக்கம் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு விட்டது. அது தவறு என்று தெரிந்தும் அவளால் அதை நிறுத்த முடியவில்லை. மேலும் ஓரிரு தினங்கள் சென்றன. அன்று அவள் காதில் விழுந்த ஓரிரு வார்த்தைகள் அவளை உலுக்கி எடுத்துப் புது விழிப்பை அளித்தன. செல்லம் காது கொடுத்து மிக உன்னிப்பாகக் கவனித்தாள். தான் இத்தனை நாட்களாகச் சிரமப்பட்டு யாருமறியாமல் ஒட்டுக் கேட்டு வந்ததற்குப் பலன் கிடைத்து விட்டதாக வேதனையும் மகிழ்ச்சியும் ஒருங்கே அடைந்தாள்.

(தொடரும்)



# இந்திரனுக்கும் மேல்

**ரா. வி.**

**தேவேந்திரனது பதவி மீண்டும் ஆட்டம் கண்டது.** பல சூழ்ச்சிகள் புரிந்து அதை நிலைநாட்டிக் கொள்பவன்தான் என்றாலும் இந்த முறை அவன் ஜபம் சாயவில்லை. தோல்வியே காணும்படி ஆகி விட்டது. மூன்று உலகங்களின் ஆட்சியும் அவன் கையிலிருந்து பிரகலாதன் கைக்கு மாறி விட்டது.

பதவியைப் பறி கொடுத்த இந்திரன் பரிதவித்துப் போனான். மீண்டும் அதை அடைய வழி தோன்றவில்லை. ஆயினும் பதவி ஆசை அவனை விடவில்லை. தனது முயற்சிகளனைத்தும் பயன் தராமற் போகவே, அவன் தேவர்களது குருவான பிருஹஸ்பதியின் தாள்களைச் சரணடைந்தான். "குருவே! எனக்கு நன்மை தரக் கூடிய உபதேசமாக ஏதாவது செய்தருளுங்கள்!" என்று வேண்டினான்.

பிருஹஸ்பதி அவனுக்கு மெய்யறிவு புகட்டி, "உலகத்திலேயே மிக மிக நன்மை பயக்கக் கூடியது மெய்யறிவுதான், அப்பா! ஆத்ம ஞானம் பெற்று நீ மகிழ்வாயாக!" என்று உபதேசித்தார்.

இந்திரனுக்கு அதனால் திருப்தி உண்டாகவில்லை. 'இந்த மெய்யறிவும் பொய்யறிவும் இங்கே யாருக்கு வேண்டிக் கிடக்கிறது?' என்றே எண்ணினான். எனவே, "இந்த மெய்யறிவைக் காட்டிலும் நன்மை பயக்கக் கூடியது வேறு எதுவுமே இல்லையா?" என்று குருவைக் கேட்டான்.

"இருக்கிறது. ஆனால் அதற்கு என்னை நம்பிப் பயன் இல்லை. அரக்கர்களின் குருவான சுக்கிராச்சாரியாரை நீ அணுக வேண்டும். மூன்று உலகங்களுக்கும் ஓர் அசுரனை மன்னனாக்கிய பெருமை அவருக்கே உண்டு!" என்றார் பிருஹஸ்பதி.

ஆசை வெட்கமறியாது என்னும் முதுமொழியை மெய்ப்பித்துக் கொண்டு, அவன் அசுரகுருவான சுக்கிராச்சாரியாரை அணுகி, அதே கேள்வியைக் கேட்டான். அவரும் பிருஹஸ்பதியின் பதிலையே கூறினார்: "எனக்குத் தெரிந்த வரையில் மெய்யறிவுதான் நன்மை பயக்கக் கூடியது" என்று அறுதியிட்டுக் கூறினார்.

அந்தப் பதில்தான் இந்திரனுக்குத் திருப்தி அளிக்காத பதிலாயிற்றே! 'ஒரு கூடைக் கல்லும் பிடாரிதான்' என்னும் கதையாக இந்தக் குருமார்கள் அனைவரும் இப்படி ஒரே குட்டையில் ஊறிய மட்டைகளாகத்தான் இருப்பார்கள் போலும்!" என்று எண்ணமிட்டவன், "இந்த மெய்யறிவைத் தவிர நன்மை பயக்கக்கூடிய பொருள் வேறு எதுவுமே கிடையாதா?" என்று சுக்கிராச்சாரியாரைக் கேட்டான்.

"கிடையாது என்று நான் எப்படிச் சொல்ல முடியும்? இருப்பதனால்தான் இன்று அசுர குலத்தில் உதித்த எங்கள் பிரகலாதன் மூவுலக மன்னராகத் திகழ்கிறார்! அவரைக் கேட்டால், ஒருவேளை அவர் உனக்குத் தகுந்த பதில் அளிக்க முடியும்!" என்றார் சுக்கிராச்சாரியார்.

'தன் எதிரியை அணுகி உண்மையை வரவழைக்க முடியுமா?' என்று இந்திரன் ஒருகணம் யோசித்தான். கபடு சூதினாலேயே தன் பதவியை இதுவரை காத்து வந்த அவனுக்கு அந்தக் கெட்ட புத்தியே கைகொடுத்து உதவியது. 'நாம் இந்திரனாகப் போனால் உண்மை வெளி வராது. ஒரு சிஷ்யனாகச் சென்றால்......?' — எண்ணிய மாத்திரத்தில் சீடனாக உருவம் தாங்கிப் பிரகலாதனது சபையை அடைந்தான். தன்னைச் சீடனாக ஏற்க வேண்டுமென்று வேண்டினான். அவனது பய்யத்திலும் விநயத்திலும் மகிழ்ந்த பிரகலாதன் அவனைத் தம் சீடனாக ஏற்றதோடல்லாமல், நாளடைவில் மெய்யறிவின் தத்துவத்தையே அவனுக்கு விண்டுரைத்து விட்டார். 'இங்கும் அதே கதைதானா?' என்று எண்ணிய இந்திரன் சலித்துக் கொண்டான். ஆனால் அதே நேரத்தில் குருவுக்கு மிஞ்சிய சீடனாகி, மிகத் துணிவுடன், "நீங்கள் இப்பொழுது மூன்று உலகங்களுக்கும் மன்னராகத் திகழ்கிறீர்களே, எந்த குணங்கள் காரணமாக உங்களுக்கு இப்பதவி கிடைத்தது? இதை நான் அறியலாமா?" என்று கேட்டான்.

பிரகலாதன் சிறிதும் முகம் சுளுங்கவில்லை. "நான் அரசனாயிருந்தாலும் மறையவர்களை அவமதிப்பதில்லை. பெரியோர்களின் நல்லுரைகளைக் கேட்கிறேன். அவற்றின் படி நடக்க முயற்சி செய்கிறேன். நான் அவர்களது கருத்துரைகளைக் கவனமாகக் கேட்பதனால், அவர்கள் எனக்கு மெய்யமுதத்தைப் புகட்டுகிறார்கள். நான் மாந்தருள் உயர்ந்தவனாகத் திகழ்வதற்கு இதுவே காரணம். ஆனால் அந்த அகந்தைக்கு ஆளாகி மாணவர்களுக்கு நான் துன்பம் அளிப்பதில்லை. அவர்களைப் பாதுகாப்பதையே பணியாகக் கொண்டிருக்கிறேன். இந்த அறிவுச் சுவையே எனக்கு அமாநிலை தருகிறது. இணையற்ற திவ்விய நோக்கை அருளுகிறது. இதன் மூலமே மக்களுக்கு நலன் கிட்டுகிறது. இதனை ஒழுக்கம் என்பர் ஆன்றோர். இந்த நல்லொழுக்கமே என்னை மூன்று உலகங்களுக்கும் மன்னனாக்கியுள்ளது!"



என்று தெள்ளத் தெளிய உபதேசித்தார். அதோடு அறிவுத் தேட்டத்தில் தமது சிஷ்யனுக்குள்ள நாட்டத்தைக் கண்டு மகிழ்ந்து, "உனக்கு என்ன வரம் வேணுமோ, கேள்! மன நிறைவோடு தருகிறேன்!" என்றார்.

இந்திரனுக்குத் தான் விரும்பியது கிடைத்து விட்டதில் எல்லையற்ற மகிழ்ச்சி. "எனக்கு வேறு எதுவும் வேண்டாம். உங்களை அமர பதவிக்கு உயர்த்திய அந்த நல்லொழுக்கத்தையே தந்தருளுமாறு வேண்டுகிறேன்!" என்றான்.

இந்திரனின் இந்த வேண்டுகோளைக் கேட்ட பிரகலாதனுக்கு ஒரு நிமிஷம் வியப்பும் திகைப்பும் ஏற்பட்டன. ஆயினும் அவர் வாக்குறுதி அளித்தது அளித்ததுதானே? எனவே, மனத்தில் சங்கற்பம் செய்துகொண்டு தமது ஒழுக்கத்தை மாணவனின் உருவில் வந்திருந்த இந்திரனுக்கு மன நிறைவோடு வழங்கி விட்டார்.

தனது பறிபோன பதவி மீண்டும் கிடைத்து விட்ட மகிழ்ச்சியில் இந்திரன் பிரகலாதனிடமிருந்து விடைபெற்றான். அவன் விடைபெற்றுச் சென்ற மறுகணமே பிரகலாதனின் உடலிலிருந்து தேஜோமயமானதோர் உருவம் வெளிப்பட்டது. "நான்தான் ஒழுக்கம். உனது அந்த மாணவனிடம் போகிறேன்!" என்றது; கூறிய மறுகணமே மறைந்தும் விட்டது. பிரகலாதன் இந்த வியப்பிலிருந்து விடுபடுவதற்கு முன்பாகவே மற்றுமோர் ஒளியுருவம் அவர் உடலை விட்டு வெளியே வந்து, "என்னை அறம் என்று கூறுவர். ஒழுக்கம் உறையுமிடத்தில்தான் நான் இருப்பேன்!" என்று கூறி மறைந்தது.

அதற்குப் பின் மூன்றாவது உருவம் ஒன்று வெளியேறி, "நான்தான் சத்தியம். ஒழுக்கமும் அறமும் எங்கு வாசம் புரிகின்றனவோ, அங்குதான் நான் இருப்பது வழக்கம்!" என்று கூறி மறைந்தது.

வியப்புக்குமேல் வியப்பு ஏற்படுத்திக்கொண்டு மற்றுமோர் உருவம் பிரகலாதனின் உடலிலிருந்து தோன்றியது. 'உறுதிப்பாடு என்பர் என்னை. உண்மை உறையும் இடத்தில் உறைவதுதான் என் உறுதிப்பாடு!" என்று கூறிக் கண்ணெதிரேயிருந்து மறைந்தது.

அடுத்தபடியாகப் பேரரவம் புரிந்துகொண்டு இன்னுமோர் உருவம் வெளிப்பட்டது. "நான் பலம். உறுதி எங்கு இருக்குமோ, அங்கே நான் இருப்பேன்!" என்று கூறி மறைந்தது.

கடைசியில் பிரகலாதனின் உடலிலிருந்து எழிலுருவம் ஒன்று வெளிப்பட்டு, "நான்தான் செல்வமனைத்துக்கும் அதிதேவதையான லக்ஷ்மி. பலமுள்ள இடத்தில் நான் வாசம் புரிகிறேன். வலுவுள்ளவர்களே வெற்றி வாகை சூடி என்னை அடைய முடியும்" என்று கூறியது.

இப்படிக் கூறி லக்ஷ்மி தம்மிடமிருந்து மறைவதற்கு முன்பாகப் பிரகலாதன், "ஆமாம், என்னிடமிருந்து ஒழுக்கத்தைத் தானமாகப் பெற்றுச் சென்றானே, அந்த மாணவன் யார் என்பதைக் கூற இயலுமா?" என்று கேட்டார்.

"அவனா? அவன் மாணவன் இல்லை. தேவர்களுக்கெல்லாம் அரசனான இந்திரனே அவன். அவன் உங்களைச் சாமர்த்தியமாக ஏமாற்றி இராஜ்யங்கள் அனைத்தையும் அபகரித்துக் கொண்டு விட்டான். ஏனென்றால், நீங்கள் உங்கள் ஒழுக்கத்தை அவனுக்கு அளித்து விட்டீர்கள். அப்பொழுதே உங்களது தர்மம், சத்யம், விரதம், பலம், ஐசுவரியம் அனைத்தையும் அவனுக்கு நல்கிவிட்டதாக ஆகி விட்டது. நல்லொழுக்கம் ஒன்றிலேதான் ஏனைய குணங்கள் அனைத்தும் குடிகொண்டிருக்கின்றன. ஒழுக்கம் இல்லாத இடத்தில் எந்த நற்குணங்களுமே தங்குவதில்லை!" என்று பதிலளித்தாள் லக்ஷ்மி.

"அப்படியா?" என்று நகைத்தார் பிரகலாதன்.

"எல்லாவற்றையும் பறிகொடுத்து விட்டு இப்படி நகைக்கிறீர்களே! உங்கள் அறிவை என்னவென்பது?" என்றாள் லக்ஷ்மி.

"ஒழுக்கத்தில் நின்று உயர்வு பெறுவது என்பது. இந்திரன் சீடனாக உருவம் மாறி வந்து என்னை ஏமாற்றினாலும், நான் என் நல்லொழுக்கத்திலிருந்து எங்கே பிறழ்ந்தேன்? என் ஒழுக்கத்தை அவனுக்கு நல்கி ஒழுக்கத்தையே அல்லவா காப்பாற்றி விட்டேன்! அள்ள அள்ளக் குறையாத செல்வம் அம்மா அது! இல்லாவிட்டால், 'ஒழுக்கம் விழுப்பம் தரலால், ஒழுக்கம் உயிரினும் ஓம்பப் படும்!' என்று கூறுவார்களா?" என்று கேட்டார் பிரகலாதன்.

அப்புறம் என்ன? இந்திரனுக்கும் மேல் ஒருபடி உயர்ந்துவிட்ட பெருமையை ஒழுக்கம் பிரகலாதனுக்கு அளித்து மகிழ்ந்தது. அதன் புகழும் ஓங்கிச் சிறந்தது.

# நீங்கள் விரும்புகிறீர்களா?

உங்களிடம் ஒரு ரேடியோ இருந்தால்...? குளிர் பதனப் பெட்டி...? ஒரு சைக்கிள்...? ஆனால் விரும்பினால் மட்டும் போதுமா? ஆனால் சேமிப்பு உதவி செய்யும். எப்படி? கீழே உள்ள அட்டவணையைப் பாருங்கள். உங்கள் ரேடியோவின் விலை ரூ. 323. நீங்கள் மாதம் பத்து ரூபாய் வீதம் ஒவ்வொரு மாதமும் எங்கள் ரிக்கரிங் டிபாஸிட் திட்டத்தில் கட்டிக்கொண்டு வாருங்கள். முப்பது மாதங்கள் முடிந்ததும் ரேடியோ உங்களுடையதாகி விடும். ரிக்கரிங் டிபாஸிட்டினால், உங்கள் ஆசைகள் பூர்த்தியாகின்றன.

**திருப்பி அளிக்கப்பட வேண்டிய மொத்தத் தொகை**

| மாதந்திரத் தவணைத் தொகை ரூ | 30 தவணைகளில் சேரும் தொகை ரூ | 40 தவணைகளில் சேரும் தொகை ரூ | 50 தவணைகளில் சேரும் தொகை ரூ | 60 தவணைகளில் சேரும் தொகை ரூ |
|---|---|---|---|---|
| 10 | 323 | 443 | 568 | 709 |
| 20 | 646 | 886 | 1,136 | 1,418 |
| 30 | 969 | 1,329 | 1,704 | 2,127 |
| 40 | 1,292 | 1,772 | 2,272 | 2,836 |
| 50 | 1,615 | 2,215 | 2,840 | 3,545 |

மேற்கொண்டு விவரங்களுக்கு உங்கள் அருகாமையிலுள்ள கிளையில் இன்றே விசாரிக்கவும்:

## தி சென்ட்ரல் பாங்க்

ஆப் இந்தியா லிமிடெட்

பதிவுக் காரியாலயம்: மகாத்மா காந்தி ரோடு, போர்ட், பம்பாய் - 1

F. C. கூப்பர், ஜெனரல் மானேஜர்

CBI : 28 : 65

# சாதல் இல்லையேல் காதல்






காட்சி 22

(பம்பாயில் பொதுக் கூட்டங்கள் நடைபெறும் ஒரு கூட்டம். மேடையில் கூட்டத்துக்கான ஏற்பாடுகள் செய்யப்பட்டுத் தயாராக இருக்கின்றன. நாகராஜன் சுரேஷ் இருவர் மட்டும் அங்கே இருக்கிறார்கள்.)

சுரே: டேய் நாகு! நீ ஒண்ணுமே உதவி பண்ணாம இப்படியே உட்கார்ந்துக்கிட்டு இருந்தால் என்னடா அர்த்தம்? நானேதான் எல்லாத்தையும் கவனிக்கணுமா?

நாக: டேய் சுரேஷ்! எனக்குப் பயமா இருக்குடா. மீட்டிங் வேண்டாண்டா. கான்ஸல் பண்ணிடலாண்டா.

சுரே: முட்டாள்! எதுக்கடா பயப்படணும்? மாலதி மெட்ராஸிலேந்து வந்துட்டாளேன்னு பயப்படறியா?

நாக: உனக்கு மாலதியினுடைய சித்தப்பாவைத் தெரியாது. அவர் கண்டிப்பா என்னைப் பார்த்தவுடனே விஷயத்தைப் புரிஞ்சுக்கிட்டு, சபேசன்கிட்டே காட்டிக் கொடுத்துடுவார்.

சுரே: அசல் மடையண்டா நீ! அவர் சொல்றதைச் சபேசன் நம்ப வேண்டாமா? நேத்து நீ சொல்லியே சபேசன் நம்பலையேடா. மாலதி வந்துட்டான்னு தெரிஞ்சவுடனே பயத்துலே நீ எப்படி உளறிக் கொட்ட ஆரம்பிச்சே? அதையே அவர் நம்பலியே! ஒண்ணும் கவலைப்படாதே! சமாளிச்சுக்கலாம்.

நாக: யாரையெல்லாண்டா பேசறத்துக்குக் கூப்பிட்டிருக்கே?

சுரே: சபேசன் தலைவர்; அப்புறம் இரண்டு மூன்று ஆங்கிலப் பத்திரிகை ஆசிரியர்கள்.

நாக: அவங்க எதுக்கடா?

சுரே: அவங்களைக் கூப்பிட்டுப் பேசச் சொன்னாத்தான் அவங்க பத்திரிகையிலே நம்ப மீட்டிங்கைப் பத்திப் பிரமாதமா எழுதுவாங்க. உனக்கு இன்னும் பப்ளிஸிட்டி அமர்க்களமா யிருக்கும்!

நாக: ஏண்டா! கும்பல் சேக்கறதுக்காக அந்த நடிகை ஒருத்தியைக் கூப்பிடப் போறதாச் சொன்னியே—அவளும் பேசப்போறளா?

சுரே: போடா பைத்தியம்! அவளுக்கு சினிமாவிலேயே உதட்டை அசைக்கச் சொல்லிட்டுக் குரல் 'டப்' பண்ணிக்கிறாங்க! அவ பேசறதாவது! அதுவும் இல்லாம அவ மீட்டிங்குக்கு வந்தாத்தானே பேசறதுக்கு. அவ வரமுடியலைன்னு சொல்லி யனுப்பிச்சுட்டா.

நாக: டேய்! அவளுக்காக வர கூட்டம் அவ வரலேன்னு தெரிஞ்ச உடனே கலாட்டா செய்தா என்னடா பண்றது?

சுரே: அவ வரலேன்னு தெரிஞ்சாத்தானே வம்பு! அது எப்படித் தெரியும்? பம்பாயைப் பத்தி இன்னுமா நீ தெரிஞ்சுக்கலே? இங்கே கூட்டத்துக்கு வருகிற பாதிப் பெண்மணிகள் சினிமா நடிகை மாதிரி மேக்கப்போடதான் வருவாங்க. கூட்டத்திலே அவனவன் இந்தப் பெண்களிலே யாரோ ஒருத்திதான் அந்த நடிகைன்னு நினைச்சுக்கிட்டுத் திருப்தியாப் போயிடுவாங்க.

நாக: வேறே யாரும் அப்ப பேசப் போற தில்லையே?

சுரே: இன்னும் இரண்டு பேர்... முக்கியமா...

நாக: யாரு?

சுரே: நிர்மலா... அவளுடைய அப்பா மிஸ்டர் நாதன்.

நாக: ஓ! அவங்களா? அவங்களுக்கு என்னடா தெரியும் என்னைப் பத்தி?

சுரே: இந்தக் கேள்வியை என்கிட்டே கேட்காதேன்னு எத்தனை தடவை சொல்றது? ஒருத்தன் தனக்குத் தெரிஞ்ச விஷயத்தைப் பத்தித்தான் பேசணும்னு முறை இருந்தா தற்காலத்து அரசியல்வாதிகள்

**வாயைத் திறந்து ஒரு வார்த்தை பேச முடியுமா?** காரணமாத்தான்டா நிர்மலாவையும் அவ அப்பாவையும் கூப்பிட்டிருக்கேன். அவர்கிட்டேயிருந்து ஏதாவது நன்கொடை தட்டலாம். நிர்மலாவை மீட்டிங்லே உண்டி குலுக்கச் சொன்னால் அதிலே நாலு காசு சேர்ந்துவிடும்.

நாக: கவிஞர் நாகராஜன் நிதிக்கு அப்படியே எல்லோரும் உண்டியல்லே பணத்தைக் கொட்டிப்பிடுவாங்க! போடா! மீட்



டிங்குக்கு வராதே கஷ்டம். இதிலே உண்டியிலே வேறே பணத்தைப் போடுவாங்களா?

சுரே: அதுக்காகத்தான்டா நிர்மலா மாதிரி ஒரு யங்க் கேர்ல் கிட்ட உண்டியைக் கொடுக்கிறது. வரவங்க எல்லாம் பல்லே இளிச்சிண்டு பணத்தைப் போட்டுப்பிட்டுப் போய் விடுவான். அதுவும் இல்லாம நாகு, இதுதான்டா எனக்கும் சான்ஸ்! இந்தமீட்டிங்குக்குக் கூப்பிட்டதுலே நாதனுக்கு என்மேலே எவ்வளவு மதிப்பு, தெரியுமா? கையோட என் காதலையும் கவனிச்சுக்க வேண்டாமா?

**நாகா: எமகாதகன்டா நீ.**

சுரே: ஆமாம்... உன் பேச்சு ரெடியா? தயாரா யிருக்கியோ?

நாக: நான் பேசணுமா? ஐய்யய்யோ!... டேய்... என்னடா இது?

சுரே: நீ பேசாம எப்படிடா? உங்கண்ணன் நாகராஜன் நினைவுக்காகப் பாராட்டுக் கூட்டம்! அதுலே தம்பி தியாகராஜன் பேசாமல் இருக்க முடியுமா? நீதான் வந்தனோபசாரம் கொடுக்கணும்!

நாக: எனக்குப் பதிலா நீயே பேசிடுடா.

சுரே: ஒன்னும் கவலைப்படாதே..... அதோ எல்லாரும் வர ஆரம்பிச்சுட்டாங்க... சும்மா ரெண்டு வார்த்தை எப்படியாவது பேசிடு, பார்த்துக்கலாம்... (கூட்டத்துக்கு ஆள் சேருகிறது.) டேய், எல்லாரும் வராங்க. ஜாக்கிரதை!... ஏதாவது உளறித் தொலைக்காதே. நீ தியாகராஜன் — நாகராஜன் இல்லே... அதை மறக்காதே!

நாக (கை கால்கள் நடுங்க): டே....டே.... டேய்... ப... ப... பயம்மா இருக்குடா!....

கரே (அவனை முறைத்துவிட்டு, வந்திருப்ப வர்களை வரவேற்கச் செல்கிறான்): வாங்க ஸார், வாங்க... ஹலோ! குட் மார்னிங் ஸார்... (அறிமுகம் செய்து வைக்கிறான்) இவர்தான் நாகராஜன் தம்பி தியாகராஜன். இவர்தான் நான் சொல்லலே, அந்தப் பத்திரிகை ஆசிரியர்... அவரு!

நாக: தெரியும்... தெரியும்... பத்திரி கையிலே நியூஸ் போடறதுக்காகப் பேசற துக்குக் கூப்பிட்டிருக்கேன்னியே!

கரே (அவன் காலே மிதிக்கிறான், அசடு வழிய அவரைப் பார்த்து): ஆமாம்...எங்க பத்திரிகையிலே இவர் பேச்சை அப்படியே முழுக்க ரிப்போர்ட் பண்ணணும்னு ரொம்ப நாட்களா ஆசை. அதுக்காகத்தான் கூப்பிட் டேன்!.... ஹி...ஹி... (நாதன் நிர்மலா வருவதைப் பார்த்து) ஹலோ மிஸ்டர் நாதன்... ஹலோ நிர்மலா!

நிர்மலா: குட் மார்னிங் கரேஷ்!



கரே: குட் மார்னிங், குட்மார்னிங்!..' (நாதனை அழைக்கிறான்). மிஸ்டர் தியாக ராஜன்! இதோ இவர்தான் மிஸ்டர் நாதன்... பிரபல ஏலக் கம்பெனி நாதன் அண்டு கோ முதலாளி. இவங்க அவருடைய டாட்டர்... (நாதனிடம்) ஸார், இவர்தான் மிஸ்டர் தியாகராஜன். நாகராஜன் தம்பி!

நாத: என்னப்பா செளக்யமா!

நிர்: ஸொாட்டு மீட் யூ!

நாக: ஹி....ஹி!

நிர்: கரேஷ்! மீட்டிங் பிகின் பண்ண இன்னும் எவ்வளோ நேரம் ஆகும்?

கரே: இதோ சபேசன் வந்த உடனே ஆரம்பிக்க வேண்டியதுதான்! நிர்மலா, ஒரு ஹெல்ப் பண்ணணுமே...

நிர்: என்ன ஹெல்ப்... சொல்லு கரேஷ் சொல்லு!

கரே: நீ என்னைக் கொல்லு! ஆஹா! என்ன தமிழ்! இதோ பாரு நிர்மலா...மீட் டிங் நடந்துக்கிட்டே இருக்கச்சே நீ இந்த உண்டியைக் குலுக்கிப் பணம் கலெக்ட் பண்ணணும்!

நிர்: எதுக்கு!

கரே: நாகராஜன் குடும்ப நிதி! (சபேசன் வருவதைக் கவனிக்கிறான்) வாங்க ஸார், வாங்க! உங்களுக்காகத்தான் காத்துக்கிட்டு இருக்கோம்.

நாக (சபேசன் வருவதைக் கவனித்து விழுந்தடித்துக் கொண்டு அவரை வரவேற்க ஓடிவருகிறான்; உரக்க) வாங்க ஸார்! சபேசன் ஸார்! வாங்க! உங்களைத்தான் நம்பியிருக் கிறேன்...

சபே (பழைய ஞாபகத்தில் பயந்தவராக): ஹி...ஹி... வந்து கரேஷ்... என்னப்பா இவன் இன்னிக்கும் கலாட்டா பண்ணு வான் போலிருக்கே!... எனக்குப் பயமா இருக்குப்பா! சீக்கிரம் மீட்டிங்கை முடிச் சுட்டு என்னை வீட்டுக்கு அனுப்பிடு!

கரே: நான் எல்லாம் கவனிச்சுக்கறேன், ஸார்...

நாக (கரேஷிடம்) போச்சு! டேய், அதோ மாலதி வராடா டேய்!...

கரே: வராம இருப்பாளா? எங்கேடா அவ சித்தப்பாவைக் காணும்... இரு... இரு நைஸா விசாரிக்கிறேன்.

சபே: வாம்மா மாலதி... இவன்தான் கரேஷ்... இவர்தான் வந்து... தியாகராஜன்.

மாலதி: நமஸ்காரம்!

நாக: நமஸ்காரம் (நடுங்குகிறான்)

கரே: ஏன் ஸார்... இவங்கதானே மெட் ராஸ்லேந்து வந்திருக்காங்க...?

சபே: யெஸ் யெஸ்!

கரே: இவங்ககூட யாரோ...

சபே: ஆமாம்! இவளுடைய சித்தப்பா கனகசபை. அவனுக்கு இதெல்லாம் பிடிக்



"ஆயிரம் ஆனாலும் உன் அப்பா அம்மா தானே! சண்டை போடாமல் இருக்கக் கூடாதா? இடமென்று போகச் சொன்னால் இந்த வீடு கிடைக்காத காலத்திலே தனிக் குடித்தனம் வைக்க முடியுமா என்ன?"

காது. வீட்டிலேயே தங்கிட்டான். சரி..சரி. ஆரம்பிக்கலாமா? டைம் ஆறது!...

சுரே (நிர்மலாவிடம்): உம்.. சீக்கிரம் போய்ப் பணம் கலெக்ட் பண்ணு!

நிர்: என்ன அவ்ஸரம்! இப்பதானே மீட்டிங் ஆரம்பிக்கப் போறே!

சுரே: ஆமாம்... ஜனங்கள்ளாம் போயிடுவாங்களே...

நிர்: ஏன்?

சுரே: சபேசன் பேச ஆரம்பிக்கப் போறாருன்னு அப்புறம் ஒரு பய நிப்பானு?

(மேடையில் சபேசன், பத்திரிகாசிரியர்கள் இருவர், நாதன், மாலதி, நாகராஜன் மற்றும் சிலர் அமர்ந்திருக்க, சுரேஷ் மைக்கை நெருங்கிப் பேசுகிறான்.)

சுரே: சகோதர, சகோதரிகளே! அமரத்துவம் அடைந்துவிட்ட கவிஞர் நாகராஜனின் நினைவையொட்டி இப்பாராட்டுக் கூட்டத்தை பம்பாய்த்தமிழர்கள் சார்பிலே கூட்டியிருக்கிறோம். நாகராஜனை இழந்து தவிக்கும் அவர் குடும்பத்துக்கு உதவ முன்வந்திருக்கும் வள்ளல் திரு சபேசனையே இக் கூட்டத்துக்குத் தலைமை தாங்குமாறுகேட்டுக்கொள்கிறேன்... (கரகோஷம்.... சபேசனுக்குச் சுரேஷ் மாலை அணிவிக்கிறான்...... இரண்டுமூன்று காமிராக்கள் பிளாஷ் பல்புகள் பளிச்சிடப் படமெடுக்கின்றன.) இந்தச் சமயத்தில் நாகராஜன் அவர்கள் தம்பி தியாகராஜன் நம்மிடையே இருப்பது நமது பேரதிர்ஷ்டம்! (கரகோஷம்)

சுரே: இப்போது முதலில் திரு சபேசன் அவர்கள் தலைவர் என்ற முறையில் முன்னுரையோடு கூட்டத்தைத் தொடங்கி வைப்பார். (கரகோஷம்).

சபே (மெள்ள எழுந்து வருகிறார்): வந்து.. ஜமீன்... சகோதரர்களே.... வந்து சகோதரிகளே!... இந்தத் தியாகராஜன் செத்துப் போனது... ஐ ஆம் ஸாரி... தியாகராஜன் சாகவில்லே... ஐ ஆம் ஸாரி... தியாகராஜன் சாகாததற்கு 'ஸாரி'யில்லே... நான் தப்பாகச் சொன்னதற்கு ஸாரி!... இந்த நாகராஜன் செத்துப் போனது ரொம்பத் துரதிர்ஷ்டம்! அவர் நல்ல கவிஞர்... சுரேஷ் சொல்லியிருக்கிறான்! ஜமீன்... நான் அறிந்து நல்ல கவிஞர் அவர்...

(கூட்டத்தில் சலசலப்பு.... நிர்மலா உண்டியோடு செல்ல, அவரவர்கள் நான் நீ என்று முந்திக் கொண்டு அதில் பணத்தைப் போடுகிறார்கள். சபேசன் பேசுவதை ஒருவரும் கவனிக்கவில்லை.)

சபே: வந்து... நான் அதிகம் சொல்லப் போவதில்லே. இன்னும் நிறையப் பேர் பேச இருக்கிறார்கள்... வந்து... தியாகராஜன்... வந்து... நாகராஜன் செத்துவிட்டான் என்றால் என்ன அர்த்தம்? கவிஞன் செத்துட்டான் என்றால் செத்தவன் கவிஞன் என்று அர்த்தம்....

(நாகராஜன் சிரிப்புத் தாங்க முடியாமல் வாயைப் பொத்திக் கொண்டு சிரிக்க, வாய் அஷ்டகோணலாகிறது..... இதைச் சபேசன் கவனிக்கிறார்...... அவருக்குக் கை, கால்கள் நடுங்க ஆரம்பிக்கின்றன.)

சபே (நாகராஜனுக்குச் சித்தப் பிரமை பிடித்துவிட்டது என்ற பயத்தில்): ...வந்து நான் வந்து... பேச்சை முடித்துக்கொள்கிறேன்.... நான் குடும்பத்துக்கு உதவுகிறேன். சத்தியமாக நாகராஜன் குடும்பத்துக்கு உதவுகிறேன்... தியாகராஜன்... நான் ஹெல்ப் பண்ணறேன்! வணக்கம்!

(உட்கார்ந்து விடுகிறார். நாகராஜன் சிரித்து, சிரித்து, தாங்க முடியாமல் நாற்காலியிலிருந்து நழுவிக் கீழே சரிய, சபேசன் மீது விழுகிறான். மைக் 'படார்' என்ற சத்தத்துடன் விழுகிறது.)

சபே: ஐயோ! சுரேஷ்... இவனுக்குத் திரும்பி வந்துடுத்து...கூட்டத்தைக் குளோஸ் பண்ணு!... டேஞ்ஜர்.

சுரே: வேண்டாம் ஸார்! கொஞ்சம் இருங்க ஸார்!

சபே: (தானே மைக்கைப் பிடித்துக் கொண்டு) மன்னிக்க வேண்டும்.... இந்தக் கவிஞன் தம்பிக்குச் சித்தப்பிரமை. இப்போ இவன் கலாட்டா செய்கிறான். இங்கிருந்தால் எல்லாருக்கும் ஆபத்து.

(கூட்டம் கலைகிறது. நாகராஜன் இன்னும் தாங்க முடியாமல் சிரிக்கிறான். சபேசனை நெருங்க..... அவர் மேடையை விட்டே இறங்கி ஓட, மாலதி பின்தொடரக் கூட்டமும் வேகமாகக் கலைகிறது.)

சுரே: டேய் நாகு! என்னடா இந்த மாதிரி செய்துட்டே? ஏன்டா அப்படிப் பேய் மாதிரி சிரிச்சே!

நாக: நான் என்னடா செய்யறது? அவர் பேசினதைக் கேட்கக் கேட்க என்னாலே சிரிப்புத் தாங்க முடியலேடா! டேய் உண்டியல்லே எவ்வளவுடா பணம் கலெக்ட் ஆச்சு?

சுரே: மண்ணாங்கட்டி! அந்த நிர்மலா என்னைவிடப் பெரிய ஆளா இருக்காடா! நான் கொடுத்த உண்டியலுக்கு மேலே அவ 'பெண்கள் சமூக சேவை சங்க நிதி'ன்னு எழுதி ஒட்டிக்கிட்டுப் பணம் வசூல் பண்ணிப்பிட்டாடா! கேட்டா எங்க சங்கத்துக்கு வந்த பணம், தரமுடியாதுன்னு சொல்விட்டாடா!

(தொடரும்

# இப்படிச் செய்யலாம்!

1



தினமும் நூறு பக்கெட் பம்படித்தால் போதுமே!

2



பெட்ரோல் ஊற்றித்தீ வை!

3



ஜம்மென்று தொப்பி போட்டுக் கொள்ளலாம்!

4



மைக் செட்டைப் பொருத்தி சாஸ்திரீய ஹிந்துஸ்தானி சங்கீத ரிகார்டு போடுவது!

5

சர்க்கரையை நீங்களே தின்று விடுங்களேன்!





6



அவள் திரும்புகிற நேரம், நீங்கள் அடுத்த 'ஷோ'விற்குப் போய்விடுங்கள்!

7



மாதக் கடைசி. கையிலே சில்லறை இல்லை. நடந்தே போவார்!

# பெரியமீன், சின்னமீன்

எஸ்.டி.

ராமதுரைக்குக் கோபம் கோபமாக வந்தது எதைக் கண்டாலும் எரிச்சல் தோன்றியது. மேஜைமீதிருந்த 'பைல்'களைத் தூக்கிப் 'பொத்'தென்று கீழே போட்டான். கண்ணாடிப் 'பேப்பர் வெயிட்'டை மேஜை மீது போடப்பட்டிருந்த கண்ணாடி மீது 'ணக்'கென்று வைத்தான். நாற்காலியைப் பெருத்த ஓசையுடன் பின்னுக்குத் தள்ளிவிட்டு எழுந்தான். உட்கார்ந்திருந்த இடத்துக்குப் பின்னால் இடத்தை அடைத்துக் கொண்டு நின்றிருந்த பச்சை நிற இரும்புப் பீரோவின் இறந்த கதவுகளைப் படாரென்று அடித்துச் சாத்தினான். அடுத்த கணமே, 'தரதர'வென்று நாற்காலியை இழுத்துப் போட்டுக் கொண்டு உட்கார்ந்தவன், பரபரவென்று, மேஜைமீதிருந்த நான்கைந்து காகிதங்களை அவை என்னவென்றுகூடப் பார்க்காமல் கக்கல் கக்கலாகக் கிழித்துக் குப்பைக் கூடைப் பக்கம் வீசி யெறிந்தான். பின்னர் மணியைப் 'படபட'வென்று பத்துத் தடவை தட்டினான். பியூன் உடனடியாக வராமற்போகவே, ''ஏ, ஆறுமுகம்!'' என்று அந்த ஹாலில் இருந்தவர்கள் அத்தனை பேரும் திரும்பிப் பார்க்கும்படியாகக் கூப்பாடு போட்டான்.

ஏன் இந்தக் கோபம்? எதனால் இந்த ஆத்திரம்? எதற்காக இந்தப் படபடப்பு?

அந்த அலுவலகத்தில் அவன் ஒரு குமாஸ்தா. வெளியிலே கௌரவமாக 'அஸிஸ்டெண்ட்' என்று சொல்லிக்கொள்வான். ஒரு ரூபாய் சம்பளம் கொடுத்துவிட்டு ஒன்றரை ரூபாய் உழைப்பை எதிர்பார்க்கும் வர்த்தக ஸ்தாபனம் அது. ஏதோ போதாத காலம், வந்து அகப்பட்டுக் கொண்டாகிவிட்டது. எப்படியோ காலத்தை ஓட்டித் தானே ஆகவேண்டும்?...

ராமதுரை உள்ளபடியே கெட்டிக்காரன் தான். விற்பனைப் பிரிவில் வேலை அவனுக்கு. பேச்சில் மட்டுமல்ல; அவன் எழுத்திலும் தேன் சொட்டும். தன் பேச்சாலும், எழுத்தாலும், விலை போகாத சாமான்களைக் கூட விற்றுத் தீர்த்துவிடும் வித்தகன் அவன்.

சமீபத்தில் ஆந்திராக்காரர் ஒருவர் வந்து வசமாக மாட்டிக் கொண்டார் அவனிடம். ஆசாமிக்குப் படிப்பு அவ்வளவாக இல்லாத போதிலும் வியாபாரத்தில் எமகாதகர் என்று கண்டுகொண்டான் ராமதுரை. ஆறு மாதங்களுக்கு முன் தலைக்குத் தடவிக் கொள்ளும் வாசனைத் தைலம் ஒன்றுக்கு 'சோல் ஏஜென்ஸி' எடுத்திருந்தது அந்தக் கம்பெனி. அந்தத் தைலத்தை யார் யார் தலையிலோ கட்ட (கொட்ட!) முயன்று தோல்வியுற்று அயர்ந்திருந்த சமயத்தில்தான் ஆந்திராவாடு வந்து சேர்ந்தார். அவர் தலையில் ஐம்பது கிலோ ஐஸ் கட்டியை வைத்துக் கட்டி உச்சி குளிரச் செய்து, தைலத்தையும் தள்ளிவிட்டு விட்டான் ராமதுரை.

'சரி, அதனால் என்ன?' என்று கேட்கிறீர்களா?

ராமதுரையின் மானேஜர் கந்தரவதனத்துக்கு அந்த அலுவலகத்தில் 'கங்காணி' என்ற ரகசியப் பெயர் ஒன்று உண்டு. காரணம், அவர் எல்லோரையும் மேய்த்துக்கட்டி, வேலை செய்யச் சொல்லிவிட்டு, அதனால் வரும் பெயரை மட்டும் தாமே தட்டிக் கொண்டு போய் விடுவதுதான். (''நான் பென்சிலால் எழுதியதற்கு மேல் அவன் இங்க்கால் எழுதுகிறான்... இவனுக்கு எதற்கு ஐயா எண்ணூறு ரூபாய் சம்பளம்?'' என்பான் ராமதுரை அடிக்கடி....)

அந்த 'அவன்'தான் இப்போது ராமதுரையின் கோபத்தையும், ஆத்திரத்தையும் எரிச்சலையும் தூண்டிவிட்ட ஆசாமி.. கொஞ்ச நேரத்துக்கு முன்னால் முதலாளி பாண்டுரங்கம் வந்திருந்தார். விற்பனை நிலவரங்களைப் பற்றிக் கேட்டார். தான் வெகு சாமர்த்தியமாக அந்தச் சனியன் பிடித்த தைலத்தை ஆந்திரரிடம் தள்ளிவிட்டுவிட்டதாகச் சொல்லிப் பெருமைப்பட்டுக்கொண்டார் கந்தரவதனம் — ராமதுரையையும் பக்கத்தில் வைத்துக் கொண்டே. ராம





ஜுரைக்கோ ஆத்திரம் ஆத்திரமாக வந்தது. ஆனால் என்ன செய்வது? சிரமப்பட்டு அடக்கிக் கொண்டான். முதலாளி வழக்கத்துக்கு விரோதமாக ''வெரி குட்! கங்கிராஜுலேஷன்ஸ்!'' என்று சுந்தரவதனத்துக்குப் புகழ்மாலை சூட்டுவதையும், காதுவரை நீண்ட வாயுடன் சுந்தரவதனம் அதை ஏற்றுக்கொள்வதையும் பார்த்துப் பொறுக்க முடியாமல் மனத்துக்குள்ளேயே குமுறினான். அந்தக் குமுறல்தான் இப்படிக் கோபமாக, ஆத்திரமாக, படபடப்பாக வடிந்துகொண்டிருந்தது. 'என்ன நெஞ்சழுத்தம்! வாய் கூசாமல் பொய் சொல்கிறானே! பச்சை அயோக்கியன்!' என்று தனக்கு மட்டும் கேட்கும்படியாக முணு முணுத்துக்கொண்டான் ராமதுரை.

இந்தச் சமயத்தில்தான், ''மானேஜர் கூப்பிடறார் ஸார் உங்களை!'' என்று முழக்கிக்கொண்டு வந்தான் பியூன் ஏகாம்பரம். ''எல்லாம் வரேன்னு சொல்லு போ!'' என்ற ராமதுரை, இருந்த இடத்தை விட்டு அசையவே இல்லை.

ஐந்து நிமிஷமாயிற்று; பத்து நிமிஷமுமாயிற்று. மானேஜர் சுந்தரவதனமே அவனைத் தேடி வந்தார். அவர் தன்னிடம்தான் வருகிறார் என்று உணர்ந்த ராமதுரை சட்டென்று குனிந்து ஏதோ எழுதுவது போல் பாசாங்கு செய்ய ஆரம்பித்தான். மானேஜர் வந்து அவன் மேஜையின் முன் நின்றார். ராமதுரை குனிந்த தலை நிமிரவேயில்லை. 18677 என்ற எண்ணை 42.3 என்ற எண்ணால் வகுத்துக்கொண்டிருந்தான் வெகு மும்முரமாக.

''மிஸ்டர் ராமதுரை!...'' என்று மெள்ள அழைத்தார் சுந்தரவதனம்.

குனிந்த தலை நிமிராமலேயே, எண்களிலிருந்து பார்வையை அகற்றாமலேயே ''என்ன சார்?'' என்று கேட்டான் ராமதுரை.

''புது ஏஜென்ஸி ஒன்று எடுப்பது பற்றி ஒரு 'ஸ்கீம்' போட்டுக் கொண்டு வந்திருக்கிறேன்.... நீரும் ஒரு தடவை அதைப் பார்த்து விட்டீரானால் முதலாளிக்கு அனுப்பி விடலாம்...''

''நான் பார்ப்பதற்கு என்ன சார் இருக்கிறது அதிலே?...'' என்றான் ராமதுரை அலுப்புடன். அவன் கண்ணோட்டம் அப்போதும் தன் மேஜையின் மீதிருந்த காகிதத்தின் மீது தான் தொண்ணூற்றைந்து சதம் பதிந்திருந்தது.

''உமக்கு ஏதாவது 'ஐடியா' தோன்றினால் எழுதி வையுமேன்!... உமக்குத்தான் நிறையத் தோன்றுமே!... ஹெ ஹே!......'' என்ற சுந்தரவதனம் காகிதக் கத்தை ஒன்றை மேஜையின் மீது போட்டுவிட்டுப் போய் விட்டார்.

அவர் தலை மறைந்ததும், ''ஹெ ஹே!'' என்று அவரைப்போலவே சிரித்து நையாண்டி காட்டினான் ராமதுரை. பிறகு அந்தக் காகிதக் கற்றையையெல்லாம் இடது கையால் படு அலட்சியமாக இழுத்துப் புரட்டிப் பார்த்தான்.

ஆஸ்திரேலியாவிலிருந்து ஆட்டுக் கம்பளி வரவழைத்து விற்பனை செய்வதற்கான திட்டமே அது. 'நான் ஐடியா' கொடுத்தால் நீ பெயர் தட்டிக் கொண்டு போவாயாக்கும்! ஏண்டாப்பா இந்தப் புத்தி?... நான் ஐடியாவும் தரப் போவதில்லை, ஒன்றும் தரப் போவதில்லை. போடா போ!...' என்று முணு முணுத்துவிட்டு, அசுவாரஸ்யமாக அந்தக் காகிதக் கற்றையை மேஜை இழுப்பறையில் போட்டுப் படாரென மூடினான் ராமதுரை.

ஆறு மாதங்களுக்குப் பிறகு ஒரு நாள்.

'ஹோட்டல் அலங்கார்' புல்வெளியில், அந்த அலுவலக ஊழியர்கள் அத்தனை பேரும் கூடியிருந்தார்கள். அன்றைக்கு அவர்களுக்கு தேனீர் விருந்து. 'எதற்காக?' என்கிறீர்களா?? ஆஸ்திரேலியாவிலிருந்து ஆட்டுக் கம்பளிகள் வாங்கினார்களே, அவை பிய்த்துக்கொண்டு போய்விட்டன மார்க்கெட்டில். எக்கச்சக்கமான லாபம் கம்பெனிக்கு. இன்னும் ஆர்டர்கள் வந்து குவிந்து கொண்டிருக்கின்றனவாம்!... அந்த வெற்றியைக் கொண்டாடத்தான் தேநீர் விருந்து ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது.

சிற்றுண்டி முடிந்த பிறகு, முதலாளி பாண்டுரங்கம் பேச ஆரம்பித்தார். முதலில் ஊழியர்களைப் பாராட்டினார். பிறகு கூறினார்:

''நாமெல்லோரும் அவரவர் வேலையை மட்டும் செய்து கொண்டிருந்தால் போதாது. எதைப் பற்றியாவது – புதிது புதிதாக – யோசித்துக் கொண்டே இருக்க வேண்டும்... நூறு யோசனைகள் தோன்றினால், அதில் நிச்சயமாக ஒன்றாவது உருப்படியாக இருக்கும்... அதனால் கூட்டு முறையில் ஸ்தாபனத்துக்கும், தனிப்பட்ட முறையில் உங்களுக்கும் நன்மை ஏற்படலாம்.... உதாரணத்துக்கு ஒன்று சொல்கிறேன், கேளுங்கள்: ஒருநாள் இரவு என்னுடைய 'ஏர் கண்டிஷண்ட்' அறையில் உட்கார்ந்து ஏதோ யோசித்துக்கொண்டிருக்கும்போது, திடீரென்று எனக்குக் குளிர் எடுத்தது. 'இப்பொழுது ஒரு நல்ல கம்பளி இருந்தால் எவ்வளவு சௌகரியமாக இருக்கும்? போர்த்திக் கொண்டு உட்காரலாமே' என்று எண்ணினேன்... அப்போது தான் சட்டென்று ஆஸ்திரேலியாவிலிருந்து கம்பளி வரவழைத்து இங்கே விற்பனை செய்ய வேண்டுமென்று தோன்றியது...இதை எதற்காகச் சொல்கிறேன் என்றால் நீங்களும்.''

அவர் மேலே பேசியது எதுவும் ராமதுரையின் காதில் விழவில்லை. அவன் மனத்தில், 'ஆகா! மானேஜர் போட்டுக் கொடுத்த திட்டத்தை இவர் கூசாமல் தம்முடையதென்று சொல்லிக் கொள்கிறாரே!... என்ன நெஞ்சழுத்தம் இவருக்கு!...' என்றுதான் எண்ணம் ஓடியது.

சட்டென்று, எதிர் வரிசையில் உட்கார்ந்திருந்த மானேஜர் சுந்தரவதனத்தின் முகத்தை ஏறிட்டுப் பார்த்தான். பச்சைக் கண்டைக்காயைக் கடித்தவுடன் முகம் கோணுமே, அதே விதமான முகத் தோற்றத்துடன் அவர் அமர்ந்திருந்தார்.

அதைப் பார்த்தவுடன் ராமதுரைக்குப் பத்துப் பிளேட் பாதாம் அல்வா சாப்பிட்டது போன்ற மன நிறைவு ஏற்பட்டது!

# மாஸ்கோ பார்க்க அரிய வாய்ப்பு

ஏயர்-இந்தியாவின் போயிங்
விமானத்தில் லண்டனுக்குச்
செல்லும்பொழுது வழியில் நீங்கள்
அதிக கட்டணமின்றி மாஸ்கோ கூட
பார்க்க முடியும். கண்கவர்
காட்சிகள் பல நிறைந்த ரம்ய
நகரம் மாஸ்கோ. மிகக் குறைந்த
சமயத்தில் டில்லியிலிருந்து
லண்டன் செல்ல
மாஸ்கோ வழியாக உள்ள
ஏயர்-இந்தியாவின் லண்டன்
சர்வீஸ்தான் மிகச் சிறந்த வழி

**பம்பாய் - டில்லி - மாஸ்கோ - லண்டன்**

வாரம் இரு முறை






# அடுத்த வீட்டு அழகி

ஜே.எஸ்.பாலகிருஷ்ணன்

['அடுத்த வீட்டு அழகி' என்ற கவிதைத் தொகுதியை வெளியிட்ட கவிஞர் மழலை மாயனின் தபால் பெட்டியைத் துழாவிய போது கிடைத்த பல கடிதங்கள்.]

கவிஞர் மழலை மாயனுக்கு. செங்கல் சூளை முதலாளி அ. ஆ. இ. ஈ. உ. ஊ. எ. ஏ. சின்னக் கருப்பன் செட்டியார் எழுதுவது. இப்பவும் இவடம் ஆலையில் எல்லோரும் சுகம். அவடம் சுகத்துக்கு எழுதும்படி செய்ய வேண்டியது. நான் இந்தக் கடிதத்தை என் மகள் செங்கமலம் சொல்லித் தங்களுக்கு எழுதுகிறேன். செங்கமலம், மெத்தப் படிச்சவ. அதிலும் இந்தத் தமிழ் மொழி மேலே அவளுக்கு ரொம்ப ரொம்ப ஆசை. நீங்க எழுதறீங்களே அத்தனை பாட்டையும் அவதான் எனக்குப் படிச்சுக் காட்டுவா. நமக்குத்தான் படிப்பு வாசனையே கிடையாதே. உங்க 'அடுத்த வீட்டு அழகி'ங்கிற பாட்டை நேற்று அவ சத்தம் போட்டு உரக்கப் படிச்சா.... எப்படிங்க இந்த மாதிரி ஒரே சீரா வார்த்தைகளைக் கோணல் மாணலின்றி அடுக்கறீங்க? ''கொட்டுடா'ன்னு எழுதினால் உடனே 'வெட்டுடா'ன்னு எழுதறீங்க. 'சாடுது'ன்னு சொன்ன உடனே 'பாடுது'ன்னு எழுதறீங்க. இதை எல்லாம் பார்த்துத்தான் எனக்கு அந்த எண்ணமே தோணிச்சு. அதாவது எங்க ஆலையிலே கொஞ்ச நாளா செங்கல்லை ஒழுங்காக அடுக்க மாட்டேங்கறானுங்க இந்த அகராதி புடிச்ச பயலுக. உங்கள் மாதிரி ஒருத்தர் மேற்பார்வையிலே வேலை நடந்தா பிரமாதமாக நடக்கும்னு என் மனசுக்குப் படுது. வார்த்தைகளை அவ்வளவு அழகாக அடுக்கும் உங்களுக்கு இந்தச் செங்கல்கள் எம்மாத்திரம்? 'பாடுது', 'சாடுது', 'ஆடுது', 'ஓடுது' தோரணையிலே செங்கல்லைச் சீருடன் அடுக்கினால் கண்ணுக்கு எவ்வளவு குளிர்ச்சியாயிருக்கும்? வியாபாரமும் என்னமாப் பெருகும்?

இதையெல்லாம் ஆற அமர யோசித்துத்தான் எங்கள் ஆலையிலே உடனே செங்கல் சூபர்வைசர் வேலையை ஒப்புக் கொள்ளும்படி உங்களைக் கேட்டுக் கொள்ளுகிறோம். கவிதை எழுதி வர்ற காசிலே இரட்டிப்பு நான் காரண்டி பண்றேன். கண்டிசனு முதல் தேதி அன்னிக்குக் காசு கைக்கு வந்துவிடும். காயமான உத்தியோகம். நீங்க கண்டிப்பாகச் சரின்னு சொல்லுவீங்கன்னு எனக்குத் தெரியும். இருந்தாலும் ஒரு ஒப்புக்காகத்தான் கேட்கிறேன். உங்கள் பதிலை ஆவலுடன் எதிர் பார்க்கிறேன்.



மற்ற தாக்கல் பின்பு.

வேணும்

ஸ்ரீ முருகன் துணை

அன்புள்ள கணவருக்கு,

இந்தாங்க.... நீங்க இந்த மாதிரி அடுத்த வீட்டுப் பெண்ணைப் பற்றியெல்லாம் அக்கப் போர் பண்ணி ஊர் சிரிக்க எழுதுவீங்கன்னு தான் நெனக்கவே இல்லே. எங்க அப்பாரும் நெனக்கலே. நெனச்சிருந்தா நம்ம கண்ணாலம் நடந்தே இராது.

அந்தத் தளுக்குக்காரச் சிறுக்கியைப் போய் அப்படி இப்படீன்னு என்னென்னவோ எழுதியிருக்கிங்களே, கட்டினவளைப் பார்த்து ஒரு நாளாவது வாழ்த்தியிருக்கிறீர்களா? 'அடி பேயாத்தா, நீ கட்டியிருக்கிற சின்னாளம்பட்டி சீலே உனக்கு நல்லா இருக்குடி'ன்னு ஒரு நாள் சொன்னால் எனக்கு எவ்வளவு சந்தோசமாக இருக்கும்? அதை வுட்டுட்டு எவளோ லங்கிணியைப் போய்ப் புகழ்ந்திருக்கிறீங்களே... இது எந்த நியாயத்தோட சேர்த்தி? சீ! வெட்கக்கேடு. உங்க வயசென்ன? வாலிபம்னு நெனப்போ? ஆறு குழந்தைகளுக்குத் 'தோப்பன்'ங்கறது மறந்து போச்சா என்ன?

அந்தக் கடன்காரி கண்ணு கருநாகப் பழம்னு எழுதியிருக்கிங்களாமே! எத்தனை நாளா நடக்குது இந்த நாடகம்? யாரு அந்த மாய்மாலக்காரி? உங்களை என்ன சொக்குப் பொடி போட்டு மயக்கிறா? நம்ம தெருவிலே இருக்கிற அத்தனை வயசுப் பெண்களையும் கேட்டுவிட மாட்டேனு கேட்டு! அந்த மோகினி சிரிச்சா முத்தும் முல்லைப் பூவும் உதிருதாமே! மூத்துப் பல்லுக்காரியா அவ? 'செட்டு'ப் பல்லுக்காரியாப் பண்ணுட்டி என் பேரு பேயாத்தா இல்லே. இது எங்க ஆயி பேரிலே ஆணை.

மானம் போவுது. வேறு என்னத்தைச் சொல்ல? ஏதோ சர்க்காரு உத்தியோகம் பார்த்தோம், சம்பாதிச்சோம்னு இருக்காம பாட்டு எழுதிறாராம் பாட்டு. சோத்தைத் தின்னுட்டுத் திண்ணையிலே சோம்பேறியா உட்கார்ந்தபடி வயசுப் பெண்களைப் பற்றி எழுதித் தள்ளுவதுதான் கவிதையா? கவிதை! நாசமாப் போக!

நீங்கமட்டும் இந்தப் பாட்டு எழுதற விவகாரத்தை விடலே, பேயாத்தாளை உசிரோடே பார்க்க மாட்டீங்க...... ஆமா. காவிரி ஆத்தோடே போனாலும் போயிடுவேன். எதுக்கும் அந்த மோகினிப் பிசாசின் மண்டையை உடைத்து விட்டுத்தான் போவேன். என் புருஷன் மனசைக் கலைத்த அவ ஒழுங்கா வாழ்வாளா? கடிதத்தைத் தந்தியா நெனச்சுப் பதில் போடவும். உங்க பொஞ்சாதி

**பேயாத்தா**



கவிஞர் மாயனுக்கு,

'அடுத்த வீட்டு அழகி' என்ற அமர காவியத்திலே விரக்தி மனப்பான்மை முற்றவும், தாங்கள் 'நான் ஏன் வாழ்கிறேன்', 'நான் ஏன் பாடுகிறேன்?' என்று கேட்டிதீர்கள். அந்தப் புத்தகத்தைப் படித்து முடித்த எனக்கும் இதே சந்தேகம்தான் ஏற்பட்டது.

அன்புள்ள,

**வாசகன்**

சகோதரக் கவிஞர் மழலை மாயனுக்கு,

தமிழ் வாழ்க! கவிதை வளர்க!

தாங்கள் சமீபத்தில் வெளியிட்ட 'அடுத்த வீட்டு அழகி' என்னும் கவிதைத் தொகுதியை நான் படிக்க நேர்ந்தது. அதன் எதிரொலி தான் இந்தக் கடிதம்.

கவிதையில் வரும் அழகியின் முகம் அன்றலர்ந்த ரோஜாப்பூவாட்டம் இருப்பதாக எழுதியிருக்கிறீர்கள். இந்த உவமை தங்களுக்குச் சொந்தமில்லை. 1939ம் வருஷம் வெளியான 'அந்தி வானம்' என்ற என்னுடைய கவிதைத் தொகுதியில் நான் பல்வேறு பெண்களை வர்ணித்திருக்கிறேன். ஒவ்வொருவருடைய முகமும் அன்றலர்ந்த ரோஜாப்பூ என்று அடித்துக் கூறியிருக்கிறேன். என்னுடைய கற்பனையில் விரிந்த ரோஜா மலரைத் தாங்கள் திருடிக் கசக்குவது முறையா?

'மலைமகள்' என்ற என் கவிதையில் கதாநாயகியின் குழலைப் பற்றிக் குறிப்பிடுகையில் 'மலைமகளின் ஜடையழகு மலைப் பாம்போ?' என்று எழுதியிருந்தேன். இது தமிழ்நாடு முழுதும் அறிந்த ரகசியம். அந்த உவமையையுமா தாங்கள் 'அபேஸ்' செய்ய வேண்டும்?

கற்பனையிலே துளியின்றிக் கண்டவரின் உவமைகளைச் சொந்தமெனச் சொல்லிச் செகமெங்கும் புகழ் தேடும் நீரெல்லாம் கவியா? வெறும் புல்லுருவி!

அன்பன்,

**உதயமோகன்**



மதிப்புக்குரிய

மழலை மாயனுக்கு,

'அடுத்த வீட்டு அழகி' என்னும் அமர காவியத்தைப் படித்து ரசித்த ஆயிரக்கணக்கான தமிழர்களில் அடியேனும் ஒருவன். பல வருஷங்களுக்கு முன் அதே தலைப்பின் கீழ் நானும் ஒரு காவியம் தீட்ட நேர்ந்தது. வாழ்க்கையை ஒட்டி எழுதப்பட்ட என் பாட்டு கவிதை வாசனை கொஞ்சமேனும் இல்லாத

பக்கத்து வீட்டுப் பயில்வானைக் கவர்ந்திழுக்கும் என்று நான் எதிர்பார்க்கவே யில்லை. விளைவு என்ன தெரியுமா? என் அமர சிருஷ்டியைப் படைத்த குற்றத்துக்காக ஆறு மாதம் ஆஸ்பத்திரியில் இருக்க நேர்ந்தது. இன்றும் கூட முதுகெலும்பு ஒரொரு சமயம் வலிக்கத்தான் செய்கிறது. இப்பொழுதெல்லாம் கவிதை எழுதும் முன் என் உடம்பை முன்ஜாக்கிரதையாக ஒரு பெரிய தொகைக்கு 'இன்ஷூர்' செய்துவிடுகிறேன். தாங்களும் அவ்வாறு செய்வது நல்லது என்று தெரிவிக்கத்தான் இக்கடிதம் எழுதுகிறேன். தான் பட்ட துன்பம் தரணியிலே வேறு யாரும் படக்கூடாது என்ற எண்ணம்தான் என் விவித்தின் ஆதார கருதி.

தொடர்ந்து, 'எதிர் வீட்டு எழிலி', 'பக்கத்து வீட்டுப் பட்டாம்பூச்சி', 'கோடி வீட்டுக் குண்டு மல்லிகை' 'மாடி வீட்டு மலர்' போன்ற பொருள்களைப் பற்றிப் பாடல்களாக எழுதித் தமிழ் அன்னையின் திருவடிகளில் சமர்ப்பிப்பீர்கள் என்று நம்புகிறேன்.

உங்கள் தெருவில் இருக்கும் அழகிகளைப் பற்றியெல்லாம் பாடி முடித்தவுடன் எனக்கு ஒரு கார்டு போடுங்கள். வேறு தெருவில் உங்களுக்கு வீடு பார்த்துத் தருகிறேன். தொடர்ந்து அந்தத் தெருவில் இருக்கும் அழகிகள் மீது பாமாலையாகப் பொழியலாம்.

அன்புள்ள,

முரளி

கவிஞர் மழலை மாயனுக்கு,

தங்கள் 'அடுத்த வீட்டு அழகி' என்ற கவிதைத் தொகுதியைப் படித்த ஆயிரக்கணக்கான வாசகர்களில் அடியேனும் ஒருவன். என் அநுபவத்திலிருந்து தாங்கள் கலியாணமாகாத வாலிபர் என்று அநுமானிக்கிறேன். நான்கூட பிரமச்சாரியாக இருந்த காலத்தில் எத்தனையோ கனவுப் பெண்களைப் பற்றிக் கவிதை என்ற பெயரில் 'ரீம்' 'ரீமா'கப் பிதற்றியிருக்கிறேன். ஆனால் ஒன்று. கால் கட்டு ஒன்று என்று ஏற்பட்டதோ, கத்தரிக்காய்ப் பை என்று கையில் ஏறியதோ, குழந்தை தோளில் என்று தொங்கியதோ, அன்றே கவிதை எல்லாம் சொல்லிக்கொள்ளாமல் ஓடி விட்டது.

என்னைக் கேட்டால் இந்தக் கனவுப் பெண்களைக் கட்டிக் கொண்டு சுகத்தைக் காண முடியாது.

எனவே வாய்க்கு ருசியாகச் சமைக்கும் பெண் எவ்வளவோ மேல்.

என்னைக் கேட்டால் என் பெண் எச்சாவை நீங்கள் தாராளமாக மணக்கலாம். அவள் செய்யும் வெந்தயக் குழம்பை ஒரு தடவை ருசி பார்த்தால், இலட்சியப் பெண், மண்ணுங்கட்டி என்று பிதற்ற மாட்டீர்கள்.

தங்கள்

பிணுகபாணி

கவிஞர் மழலை மாயனுக்கு,

கவிதை எழுதுவது என்பது ஒரு வியாதி. அதை முற்ற விடுவது மதியீனம். முளையிலேயே கிள்ளி எறிய வேண்டியது மிக அவசியம்.

'சிகரெட் பிடிப்பதை விடுவது எப்படி?', 'சாலையில் செல்லும் அழகிகளைப் பார்க்காமல் இருப்பது எப்படி?', 'ஆபீஸில் தூங்காமல் இருப்பது எப்படி?' போன்ற அரிய நூல்களை வெளியிட்ட நாங்கள், 'கவிதை எழுதாமல் இருப்பது எப்படி?' என்ற புரட்சிகரமான நூலை வெளியிட்டிருக்கிறோம்.

ஐம்பதுக்கு மேற்பட்ட மாஜி கவிஞர்கள் தாங்கள் எப்படிக் கவிதை எழுதும் பைத்தியக்காரத்தனத்தை விட்டொழித்துப் பல னுள்ள காரியங்களில் மனத்தைச் செலுத்தினார்கள் என்பதைப் புள்ளி விவரங்களுடன் விவரிக்கிறார்கள். பிரசாசனம் செய்து கவிதைப் பித்தைத் தெளிய வைத்துக் கொண்டவர்களிலிருந்து, சாப்பாட்டை மிகைப்படுத்தி வியாதியை முற்ற விடாமல் பார்த்துக் கொண்டவர்கள் வரையில் தங்கள் அநுபவங்களை ஒளிவு மறைவின்றி எடுத்துச் சொல்லுகிறார்கள். ஆதியில் மணிக்கு அறுபது பாடல்கள் எழுதி வந்தவர் பத்தே தினங்களில் தாம் எப்படிப் பத்துப் பாடல்களாகக் குறைத்துக் கொண்டார் என்பதை உவமை நயத்துடன் விளக்குகிறார்.

ஒவ்வொரு கவிஞனுக்கும் தேவையானது. இன்றே 'ஆர்டர்' செய்யுங்கள்!

வசனப் பிரியா பப்ளிஷர்

# ஜாம்-பக்

**சரும உபாதைகளுக்கான களிம்பு.**




சரும காயங்கள், கொப்புளங்கள், ஒட்டுவாரொட்டிகள் ஆகியவற்றுக்கு இதமான ஜாம்-பக் நிச்சயம் குணமளிக்கிறது. அதி கவனமுடன் தேர்ந்தெடுக்கப்பட்ட மருந்து மூலிகைகளாலான சருமக்களிம்புதான் ஜாம்-பக் மிருகக் கொழுப்பு சேராதது.

விரைவாக, பத்திரமாக, நிச்சயமாகச் சரும உபாதைகளைக் களைய... நீங்கள் நம்பக்கூடியது ஜாம்-பக்.

எல்லா மருந்து வியாபாரிகளிடமும் பலசரக்குக் கடைகளிலும் விற்கப்படுகிறது.

சி.இ. ஃபுல்ஃபோர்ட் (இந்தியா) லிட்.

SHBI-FZ-4 TAM

*சென்னை ராஜ்ய டிஸ்ட்ரிப்யூட்டர்கள் :*

மெஸர்ஸ் மோதி & கம்பெனி, 214, கோவிந்தப்ப நாய்க்கன் தெரு, தபால் பெட்டி நெ. 1902, சென்னை-1

---




# பார்கோ

**கேஸ் மாண்டில்கள்**



சிறந்த ஒளிக்கும்,
நீடித்த சேவைக்கும்

*தயாரிப்பவர்கள் :*

**பார்கோ மான்டில் ப்ராடக்ட்ஸ்**

343-B, கோட்பத்தர் ரோடு,
பரத்தர-பம்பரம்-50 AS.

TAM SFC 82

இஸ்லாமிய மத ஸ்தாபகரான நபிகள் நாயகத்திடம் ஒரு வெள்ளைப் பூனை இருந்தது. அதற்கு முயெஜா எனச் செல்லமாகப் பெயர் சூட்டி அவர் வளர்த்து வந்தார். ஒரு நாள் நபிகள் நாயகம் சிந்தனையில் ஆழ்ந்தபடி அமர்ந்திருந்தார். நமாசுக்கு நேரமாகிவிட்டது. சட்டென எழுந்து போகப் புறப்பட்டார். ஆனால் முயெஜா அவர் சோகா (அடிக் கால்வரை தொங்கும் நீளமான அங்கா)வில் நிச்சிந்தையாகத் தூங்கிக் கொண்டிருந்தது. அதன் தூக்கத்தைக் கெடுக்க நபிகள் நாயகம் விரும்பவில்லை. இதனால் கத்தியால் சோகாவில் முயெஜா தூங்கிக் கொண்டிருந்த பகுதியை மட்டும் தனியே துண்டித்து அப்படியே விட்டு விட்டு நமாசுக்குப் போனார்.

நபிகள் நாயகம் இவ்விதம் முயெஜாவிடம் காட்டிய அலாதி அன்பின் காரணமாக இன்றும் அநேக இஸ்லாமிய நாடுகளில் பூனைக்கு ஒரு வகை விசேஷ ஸ்தானம் கிட்டியிருக்கிறது. எகிப்து நாட்டில் பூனையை யாராவது கொன்றால் அவனுக்குத் தூக்குத் தண்டனை என்று முன் காலத்தில் சட்டம் ஒன்றிருந்தது. நைல் நதிக் கரையில் பூபாஸ்தஸ் என்ற இடத்தில் பூனைகளின் சவங்களை அடக்கம் செய்வதற்கென்றே தனி இடுகாடு ஒன்றும் அக்காலத்தில் இருந்தது.

இவ்விதம் எகிப்தில் பூனைக்கு மிக உயர்வான ஸ்தானம் அளிக்கப்பட்டிருந்த காலத்தில் ஒரு முறை எகிப்தியப் படைகள் ஈரான் மீது படையெடுத்துச் சென்றன. உடனே ஈரானியர்கள் என்ன செய்தார்கள், தெரியுமா? தங்கள் நாட்டில் உள்ள பூனைகள் அத்தனையும் ஒன்று திரட்டினார்கள். அவற்றைப் பெரிய சைனியம்போல் படையெடுத்து வரும் எகிப்திய வீரர்கள் வரும் வழியின் குறுக்கே நிறுத்தி விட்டார்கள். அதைப் பார்த்த எகிப்தியப்படை வந்த வழியே திரும்பிப் போய் விட்டதாம்! இப்படி ஒரு கதை!

பூனை உலகில் எப்பொழுது ஏன் தோன்றியது என்பது பற்றி அரேபியர்களிடையே ஒரு கதை உண்டு. உலகில் எலிகளின் எண்ணிக்கையும் தொல்லையும் மிதம் மிஞ்சிப் போய் விட்டன. அப்பொழுது கடவுள் சிங்கத்தை அழைத்து அதைத் தும்மச் சொன்னார். சிங்கம் அவ்விதமே தும்மியது. அப்பொழுது சிங்கத்தின் மூக்கு வழியாக ஒரு பூனை வெளியே வந்தது. இதைப் பார்த்த எலிகள் பயந்து ஓட்டம் எடுத்தன. அந்தப் பூனையின் சந்ததிகளே இப்பொழுது உலகில் உள்ள எல்லாப் பூனைகளுமாகும்.

பூனை மாந்திரீகம் செய்வதற்கு உதவும் பிராணி என்ற கருத்து நிலவுவதால் இறிஸ்துவ நாட்டவருக்குப் பூனை என்றால் ஆகாது. ஆனால் பிரிட்டனிலோ பூனைகளை வளர்ப்போர் ஏராளம்.

லண்டனில் வட்டமேஜை மகாநாடு நடந்து கொண்டிருந்தது. அதில் கலந்து கொள்ள காந்திஜி லண்டன் தெரு வழியாகப் போய்க் கொண்டிருந்த போது குறுக்கே ஒரு கறுப்புப் பூனை போயிற்று. உடனே பிரிட்டிஷ் பத்திரிகைகள் எல்லாம் இது சுபசகுனம் என எழுதின; இந்தியப் பத்திரிகைகளோ அபசகுனம் என எழுதின. இந்தியப் பத்திரிகைகள் எழுதியபடியே அம் மகாநாடு நமக்கு வெற்றிப் பலன் அளிக்கவில்லை. ஆகையால் பிரிட்டிஷ் ஆட்சி மேலும் அதிக காலம் நம் நாட்டில் நீடிக்க முடிந்தது. ஆகவே பிரிட்டிஷ் பத்திரிகைகள் கூறியபடி பிரிட்டிஷார் நோக்கத்துக்கு அது ஒரு வெற்றியென்றும் கூறலாம்! இரண்டு சகுனங்களும் பலித்தன!

சீனர்களுக்குப் பூனை என்றால் பிரியம் அதிகம். அவர்கள் முக்கிய தொழில்களில் ஒன்று பட்டு நெசவாகும். நெய்து கொண்டிருக்கும் போதும் நெய்து முடித்த பிறகும் கூடப் பட்டுத் துணிகளையும் நூல்களையும் எலிகள் கடித்துப் பெரும் கஷ்டநஷ்டங்களை அவர்களுக்கு ஏற்படுத்தி வருகின்றன. இதனால் எலியை ஒழிக்கும் பூனையை அவர்கள் பெரிதும் போற்றி வளர்க்கிறார்கள்.

பூனை வளர்ப்பைச் சயாம் நாடு ஒரு தொழிலாகவே நடத்துகிறது. அங்கு வளர்க்கப்படும் பூனைகள் உலகிலேயே சிறந்தவை எனக் கருதப்படுகின்றன. ஒவ்வொரு வருடமும் லட்சக்கணக்கான பூனைகள் அங்கிருந்து மேல்நாடுகளுக்குக் கப்பல்கள் மூலமும் விமானங்கள் மூலமும்




செல்லுகின்றன. பூனை வளர்க்கும், வாங்கும், விற்கும் ஏற்றுமதி செய்யும் ஸ்தாபனங்கள் அந்நாட்டில் ஏராளமாக உண்டு. சயாமியப் பூனைகள் இளமையாக இருக்கும்போது பால் போல் வெண்மையாக இருக்கும். வயது முதிர முதிரப் பழுப்பு நிறமாக மாறிவிடும். 1884ல் தான் இப்பூனைகள் முதன் முதலாக பிரிட்டனுக்கு ஏற்றுமதியாகத் தொடங்கின. இதைத் தொடர்ந்து 1895லிருந்து அமெரிக்காவும் இப்பூனைகளை விரும்பி வாங்கத் தொடங்கியது. சயாமியப் பூனைகளுக்கு இரண்டு நாடுகளிலும் மிகுந்த கிராக்கி உண்டு. அமெரிக்காவில் எண்ணெய் அரசர்கள் எஃகு அரசர்கள் என அவற்றின் வர்த்தகம் மூலம் கோடீசுவரர்கள் ஆன பலர் இருப்பது போல் சயாமில் பூனை வர்த்தகம் மூலம் கோடீசுவரர்கள் ஆன பலர் உண்டு!

பிரிட்டனிலும் அமெரிக்காவிலும் துப்புக் கண்டுபிடிக்க நாய்களைப் பழக்கியிருப்பது போல் பூனைகளையும் பழக்கி யிருக்கிறார்கள். பல போலீஸ் நிலையங்களில் துப்புக் கண்டு பிடிக்கும் 'டிடெக்டிவ் பூனைகள்' உண்டு. அவற்றிற்குச் சம்பளமும் உண்டு. உத்தியோக உயர்வு, சம்பள உயர்வு, பென்ஷன் கூட உண்டு.

— அ. ராம்கோபால்

# வட்ட மேஜை

★ அடிமேல் அடி!

★ கருணை வடிவம்

★ ஆணவம் அழியும்

★ மிகவும் வருந்தினேன்

நம் தமிழ் நாட்டு அரசாங்கத்தின் இடைக்கால பட்ஜெட்டில் வரி விதிப்பு நமது விவசாயிகளைத்தான் பெரிதும் பாதிக்கிறது. தன்னிறைவு பெறவேண்டும், உணவு உற்பத்தி அதிகமாகவேண்டும் என்றெல்லாம் கூப்பாடு போடுகிற இந்த நேரத்தில், விவசாயிகள் காலமெல்லாம் பாடுபட்டாலும் அவர்கள் போட்ட மூலதனம் தேறுமா தேறாதா என்று கணக்குப் பார்த்துக் கொண்டிருக்கும் இந்த நேரத்தில், அவர்களை ஊக்குவிக்க வேண்டியதற்குப் பதிலாக, அடி மேல் அடியாக அவர்களுக்கு நில வரியையும், மின்சாரக் கட்டணத்தையும் அதிகமாக்கலாமா? எத்தனையோ விவசாயிகள் கிராமத்தை விட்டு, விவசாயம் கட்டுப்படியாகவில்லை என்ற காரணத்தால் பட்டணங்கள் நோக்கி வருகின்றார்கள். இந்நிலையில் விவசாயத்துக்குத் திரும்பும் எண்ணம் அவர்களுக்குக் கனவிலும் வருமா? இன்னும் இருக்கின்ற நிலத்தையும் விற்று விட்டுப் பட்டணத்தில் கூலி வேலை செய்தாலும் 4 ரூ., 5 ரூ. கிடைக்குமே என்று புறப்பட்டு விடுவார்கள்.

விற்பனை வரியை வேறு அதிகப்படுத்தியிருக்கிறார்கள். எல்லாப் பொருள்களுக்கும் விலை வேறுமே! விவசாயி கொடுக்கக் கூடிய அரிசிக்கு மட்டும் நிர்ணயிக்கப்பட்ட விலையென்றால் என்ன அர்த்தம்? இதை ஆட்சியாளர்கள் சிந்தித்ததாகத் தெரியவில்லை.

வேலூர்
5-11-65 **ஆர். சந்திரன்**

'கல்கி'யில் வெளிவந்து கொண்டிருக்கும் 'சேவைக்கு ஒரு சகோதரி' என்ற ஸிஸ்டர் சுப்புலக்ஷ்மி அம்மையாரின் சரித்திரத்தைப் படித்து வருகிறேன். அவரை என் எட்டு அல்லது ஒன்பதாவது வயதில் அவருடைய வீட்டில் பார்த்தேன். அந்தக் கருணை வடிவம் இப்போதும் நினைவுக்கு வருகிறது.

தொடர் கட்டுரையில் என் மனத்தைத் தொட்ட ஓர் இடம்: ''அந்தக் கல்யாணப் புடவையை மீண்டும் ஒரு முறை கட்டிக் கொள்ள வேண்டுமென்று நான் மிகவும் ஆவலோடு இருந்தேன். ஆனால் என் ஆசையை என் தாயாரிடம் வெளிப்படுத்த வேண்டும் என்று கனவிலும் நான் நினைத்திருக்க மாட்டேன். இருந்தாலும் இந்த ஏமாற்றத்தின் கைப்பு வெகு நாட்கள் என் மனத்தில் இருந்து கொண்டே இருந்தது; வெகு நாட்கள்.''— ஸிஸ்டர் இப்படிச் சொல்லும் இடத்தில் என் நெஞ்சில் துக்கம் பொங்கிக் கண்களில் கண்ணீர் பெருகிறது. இதுவே என்னை இந்தக் கடிதத்தை எழுதத் தூண்டியது.

டாக்டர் மோனிகா ஃபெல்டன் வெகு அழகாக எழுதியிருக்கிறார். நாம் நேரில் காண்பது போல் அவர் சம்பவங்களை விவரிப்பது அதனை அவருக்குக் கூறிய ஸிஸ்டரின் சொல் வன்மையினாலா அல்லது டாக்டர் ஃபெல்டனின் எழுத்துத் திறமையினாலா என்று நிர்ணயிக்க முடியவில்லை. ஸ்ரீமதி அநுத்தமாவின் தமிழாக்கம் பாராட்டுக்குரியது.

பஹ்ரீன்
26-10-65 **ராஜலக்ஷ்மி கணேசன்**

'பண்புள்ள நாடு நமது பாரத நாடு' என்பதற்குப் பல சரித்திரச் சான்றுகள் இருக்கின்றன. என்றாலும், ஐக்கிய நாடுகள் சபையில் திரு பூட்டோ இந்தியர்களை 'நாய்கள்' என்று கேவலமாகப் பொருத்தமற்றுப் பேசிய போதிலும், நமது திரு ஸ்வரண்சிங் குழு, அமைதியோடும் — நல்லறிவுடனும் நடந்து கொண்ட முறை எண்ணி எண்ணி மகிழத் தக்கது — வேற்று நாட்டாரும் பாராட்டத் தக்கது. 'சபைத் தலைவர் கண்டிக்கவில்லை. மற்றையோரும் கண்டிக்கவில்லை. அதனால் அமைதியாக வெளி நடப்பு செய்தோம்.' ஆணவம் அழிந்ததாகத்தான் சரித்திரம் உண்டே தவிர, ஆண்டதாக இல்லை. இதை இங்குள்ள சில அவசர காங்கிரஸ் தலைகள் அறிந்து கொள்ள வேண்டும் என்பதே என்னுடைய விருப்பமாகும். 'நடுநிலைமைக்காரர்கள் என்று சொல்லிக் கொள்ளும் நாம் — பொறுப்பற்ற முறையில், 'அமெரிக்கா' போன்ற நாடுகளைத் தூற்றிப் பேசுவது நன்மை பயக்காது என்று எண்ணுகிறேன். சாந்தம் கொள்வதே சாலச் சிறந்தது என்பதுதான் எனது எண்ணமாகும்.

நீலமலை
30-10-65 **இளவேந்தன் கோபாலன்**

'உபதேசக் கதைகள்' என்ற தலைப்பில் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களுடைய வாழ்வில் நிகழ்ந்த ஒரு நிகழ்ச்சியைத் தங்களுடைய மலரில் படித்தபோது நான் மகிழ்ந்தேன். ஆனால் அடுத்த இரண்டாவது பக்கத்தில் நபிகள் நாயகம் அவர்களுடைய படமென்று ஒன்றை 'கல்பனா' வரைந்து அச்சிட்டிருக்கிறீர்கள். அப்படத்தைக் கண்டதும் நான் மிகவும் வருந்தினேன். எத்தனையோ முஸ்லிம் வாசகர்களைக் கொண்டிருக்கும் ''கல்கி'' இதழில் இப்படி ஒரு படம் வெளியானதைக் காண மிகவும் வருந்துகிறேன். நபிகள் நாயகம் அவர்களுக்குப் படமே கிடையாது; அவர்களுடைய படம் இதுவரை எந்த இதழிலும் வெளியாகவில்லை.

ஒரு மதத்தின் அடிப்படைக் கொள்கையைப் பாதிக்கும் வகையில் படம் வரையப்படுவதை அனுமதிக்கமாட்டார்கள் அல்லவா?

சிவகெங்கை
1-11-65 **ஹமீத் தாவூத்**

**[அருவமான ஆண்டவனுக்கு உருவம் தீட்ட முயன்ற இந் நிகழ்ச்சியை எடுத்துக் காட்டியதற்காக நேயர்களுக்கு நன்றி. 'கல்கி'யின்பால் அவர்கள் கொண்டுள்ள இத்தகைய சிரத்தை சிறு தவறும் நேராவண்ணம் காக்கும் என்பதையும் தெரிவித்துக் கொள்ளுகிறோம். —ஆசிரியர்]**

Edited printed & published by T. Sadasivam on behalf of Messrs. Bharathan Publications Private Ltd., at the Kalki Press, Kilpauk, Madras-10

# ாமான்களின் பத்திரமான பாதுகாப்புக்கு
# ரா ஸ்டீல் காபினெட்கள்




வீட்டுக்கும் சரி, ஆஃபீஸுக்கும் சரி, இடவசதிக் கேற்ப அலங்காரமாக அமையும் கீரா ஸ்டீல் காபினெட் சாமான்களைப் பத்திரமாகப் பாதுகாக்க மிகச் சிறந்தது. துரு, அரிப்பு இவற்றினால் பாதிக்கப்படாதபடி பிரத்தியேக முறையில் தயாரான உயர் ரக ஸ்டீலினால் செய்யப்பட்ட இந்த காபினெட் பல வருஷங்கள் மெருகு குலையாமல் இருப்பதற்காக 'ஒவன் பேக்டு' எனாமல் பூசப்பட்டது. இந்த காபினெட் உங்கள் தேவைக் கேற்றபடி பொருத்திக் கொள்ள பல உபகரணங்கள் பொருத்தப்பட்டு பலவித வகைகளிலும் கிடைக்கிறது. மதிப்புள்ள பொருள்களுக்கு பத்திரமான பாதுகாப்பு அளிப்பது கீரா ஸ்டீல் காபினெட்.

Khira

கீரா ஸ்டீல் ஒர்க்ஸ் பிரைவேட் லிமிடெட் ஸ்வாமி விவேகானந்தா ரோடு, ஸாந்தா க்ருஸ், பம்பாய்-54

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon

விக்ஸிலிருந்து புதிய சக்திவாய்ந்த இருமல் மருந்து

# அடமுள்ள இருமலை நிறுத்துகிறது

**இருமல் ஆரம்பமாகும் இடத்தில் செயல்புரிகிறது...இருமல் கட்டுப்பாட்டுக் கேந்திரத்தில்**







எரிச்சலைக் கொடுக்கும், தூக்கத்தைக் கெடுக்கும் இருமலினால் நீங்கள் அவதிப்படவேண்டாம். இருமல் உங்கள் தொண்டையில் மட்டும் இருப்பதல்ல என்பது மருத்துவ விஞ்ஞானம் இப்போது அறிந்த விஷயம். உண்மையில், இருமல் கட்டுப்பாட்டுக் கேந்திரத்தில்தான் உங்கள் இருமல் அடங்கியிருக்கிறது. தொண்டை அழற்சி, சுவாசக் குழாய் அடைப்பு ஆகியவைகள் இருமல் கட்டுப்பாட்டுக் கேந்திரத்தைத் தூண்ட, நீங்கள் இரும ஆரம்பிக்கிறீர்கள்

இருமல்களை நிறுத்துவதற்கு இருமல் கட்டுப்பாட்டுக் கேந்திரம் அமைதியடைய வேண்டியது அவசியம். விக்ஸ் பார்முலா 44-ல் உள்ள பிரத்தியேகமான "இருமல் சமனிகள்" உங்கள் இருமல் கட்டுப்பாட்டுக் கேந்திரத்தை விரைவில் அடைந்து, அதை சீக்கிரமே சமனப்படுத்த இருமல் நிற்கிறது.

அதேநேரத்தில், விக்ஸ் பார்முலா 44-ல் உள்ள சக்தி வாய்ந்த மருந்துகள் தீவிரமாக வேலை செய்து, அடைபட்டுள்ள சுவாசக் குழாயைத் திறந்து, வலிமிக்க மார்பு இறுக்கத்தை நீக்கி, தொண்டை எரிச்சலைப் போக்குகிறது.

விக்ஸ் பார்முலா 44 உங்களுக்கு இருமலிலிருந்து துரிதமான, நிவாரணத்தை அளிக்கிறது ... அடங்காத இருமலிலிருந்து விடுதலை பெற்று, நீங்கள் இரவு முழுவதும் சுகமாகத் தூங்குகிறீர்கள்.

**உங்கள் மார்பில் செயல்புரிகிறது**

விக்ஸ் பார்முலா 44-ல் உள்ள விசேஷ கூட்டுப் பொருள்கள் உங்கள் சுவாசக் குழாய்களில் ஆழ்ந்து வேலை செய்து வலிமிக்க மார்பு இறுக்கத்தை நீக்குகிறது.

**உங்கள் தொண்டையில் செயல்புரிகிறது**

விக்ஸ் பார்முலா 44 இருமலினால் தொண்டையினுள் ஏற்படும் வேதனைகளைத் துரிதமாகக் குணப்படுத்துகிறது. தொண்டை அழற்சியை உடனடியாகச் சமனப்படுத்துகிறது.

**உட்கொள்ளும் அளவு**

உட்கொள்ளும் சரியான அளவை அட்டைப்பெட்டியின் மேல் உள்ள விபரங்களைத் தயவு செய்து படியுங்கள்.




அதிக சக்தியுள்ள பார்முலா

# விக்ஸ் பார்முலா 44

காஃப் மிக்ஸ்சர் இருமல் ஆரம்பமாகுமிடத்தில் செயல்புரிகிறது

VF.244.